உ

சிவசண்முகன்றுணை.

# கந்தபுராணச்சுருக்கம்.

திருக்கைலாசபரம்பரைத்தருமபுரவாதீனத்து

**சம்பந்தசரணாலயசுவாமிகள்**

அருளிச்செய்தது,

இஃது

சிதம்பரம்

ஸ்ரீமத் மௌனதேசிகாதீனத்துச்

## செல்லப்பசுவாமிகளால்

பரிசோதிக்கப்பட்டு,

சிதம்பரம்

ஸ்ரீ சபாநாயகர் திருவனந்தல் காலசந்திக்கட்டளை

## சி-கந்தசுவாமிமுதலியார்

குமாரர்

**க-சுந்தரமூர்த்திமுதலியாரால்**




சென்னபட்டணம்-கொண்ணூர்

**மாணிக்கமுதலியாரவர்களது**

மநோன்மணிவிலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம்பதிப்பு.

இதன் விலை அணா—௧௨.

விளம்பி௵-சித்திரைமீ.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

இஃது,

திருக்கைலாசபரம்பரைப்

பொம்மபுரம்

ஸ்ரீசிவஞானபாலையதேசிகராதீனத்துச்

சிதம்பரம் ஈசானியமடம்

ஸ்ரீமத் இராமலிங்கசுவாமிகளால்

பரிசோதிக்கப்பட்டபிரதிக்கிணங்கப்

பதிப்பிக்கப்பட்டது.

---

சிவசண்முகன்றுணை.

கந்தபுராணச்சுருக்கத்தின்

# சூசிபத்திரம்.



உ

சிவசண்முகன் றுணை.

# பிழை திருத்தம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தல். |
|---|---|---|---|---|
| ௨ | ௩ | ௧௨ | ஒர் | ஓர் |
| ௧௨ | ௨௩ | ௬ | வியம | விமய |
| ௪௪ | ௮௧ | ௩ | கேடுற்ற | கோடுற்ற |
| ௫௨ | ௧௩௯ | ௨ | னூயிரங் | னூறாயிரங் |
| ,, | ௧௪0 | ௧ | வீரிய | வீறிய |
| ௫௩ | ௧௪௬ | ௨ | யரமபை | யரம்பை |
| ,, | 0 | ௩௬ | வலவி | வல்வி |
| ௫௯ | ௩௯ | ௪ | மன் | மண் |
| ௭௪ | ௪௬ | ௪ | மடடில் | மட்டில் |
| ௭௮ | 0 | ௩௬ | ஞர் | ஓர் |
| ௮௨ | ௧௪௨ | ௧ | வன்மை | வண்மை |
| ௮௩ | ௧௨௧ | ௧ | யானிவன் | யானிவண் |
| ௮௬ | ௧௪௫ | ௨ | முறணுறும் | முரணுறும் |
| ௯௨ | ௧௮௪ | ௧ | விசையன் | விசயன் |
| ௯௪ | ௨0௧ | ௨ | எமுந்துபின் | எழுந்துபின் |
| ௧௧௧ | ௩௨௨ | ௧ | வளைத்தேழ் | வளைத்தே |
| ௧௧௫ | ௧௩ | ௨ | வளைந்திட | வளைத்திட |
| ௧௨௮ | 0 | ௩.௧ | விட்ணு | விட்டுணு |
| ௧௪௮ | ௨௨௪ | ௩ | நாடொரு | நாடொறு |
| ௧௪௯ | ௨௨௭ | ௪ | வரழி | வாழி |

இரண்டாவது

## உபதேசகாண்டம்.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருந்தல். |
|---|---|---|---|---|
| ௬ | ௬௫ | ௧ | களதது | களத்து |
| ௪௯ | ௫ | ௨ | தயங்கு | றயங்கு |
| ௨௭ | ௨௩ | ௩ | சுடர் | சடர் |
| ௨௨ | ௨௯ | ௪ | வென்று | வென்றி |
| ௨௫ | ௪௮ | ௪ | மாதவர்க் | மாதவற் |

சிவசண்முகன்றுணை.

இந்நூலாசிரியராகிய

# சம்பந்தசரணாலயசுவாமிகள்

## சரித்திரச்சுருக்கம்.



திருக்கைலாயபரம்பரையில் விளங்காநின்ற தருமபுரவாதீனத்திலே, பிரதமாசாரியராக எழுந்தருளிய ஸ்ரீ ஞானசம்பந்ததேசிகர் பரம்பரையில், ஆருவது குருமூர்த்திகளாயமர்ந்த ஞானசம்பந்த தேசிகர்காலத்திலே,கல்வி யறிவொழுக்கங்களான் மிகச்சிறப்புற்றவரும்,குருலிங்க சங்கமபத்தியிற் றமக்கு உயர்வொப்பில்லாதவரும், தமதாசிரியராகிய ஞானசம்பந்ததேசிகருடைய திருவடிகளையே தமக்கு உரிய பற்றுக்கோடாகக்கொண்டமையால், சம்பந்தசரணாலயர் எனப்பெயர் பெற்றவருமாகிய சிவயோகியார் ஒருவர் இருந்தார். அவர் தினந்தோறும் தமக்குரிய நியதிகளைமுடித்துக்கொண்டு சிவயோகசமாதியிலிருப்பர். இவரிங்ஙனமாக.

கன்னடம், தெலுங்கு, திராவிடமுதலிய பலபாஷைகளில் அதிசமர்த்தரும், முருகக்கடவுளிடத்தே மிகுந்த அன்புடையவரும், மைசூருக்கு அரசருமாகிய கர்த்தர் சாஸ்திரவிஷயமாகத் தமக்குநேர்ந்த சிலசந்தேகங்களை நிவர்த்திக்க எண்ணங்கொண்டவராய்ப்பற்பலதேசங்களினுமுள்ள சாஸ்திரவிற்பன்னர்களை அனுப்புவிக்கும்படி அவ்வத்தேசத்தரசர்கட்கும் மடாதிபதிகட்கும் நிருபங்கள் விடுத்தார். அவரால் விடுக்கப்பட்ட நிருபங்களில் ஒன்று இத்தருமபுரவாதீனத்தினும் வந்துசேர, அதனைக்கண்ணுற்ற குருமூர்த்திகள் தம்மாணுக்கருள்ளே முதன்மையானவரும், சிவானுபவச்செல்வருமாகிய இச்சுவாமிகளைநோக்கி, "நீ இந்நிருபநிமித்தம் மைசூருக்குப்போய் வருவாயாக" எனஆஞ்ஞாபிக்க; அச்சுவாமிகள் அவ்வாஞ்ஞையைத்தலைமேலேற்று விடைபெற்றுக்கொண்டு அவ்விடத்தினின்றும் அரிதினகன்று, மைசூரையடைந்து அரசர்சமுகத்தில் எழுந்தருளும்பொழுது; அவ்வரசர் ஏனையவித்துவான்களினும் இவரது ஆச்சிரமத்திற்கேற்ற காலோய்ந்த நடை உடை நிறம் குறிமுதலியவைகளைக்கண்டு *"இவர் ஒரு அண்டங்காக்கையோ?" என்றார். அதுகேட்டசுவாமிகள் அவர் சமீபத்தையடைந்து, "அது நானல்ல" என்றுசொல்லி அதனால் அவருக்குண்டாகிய கோபத்தைக்கண்டு, மீட்டும் அவரைநோக்கி, "மகாராசாவே! நான் சொல்லியதை ஏதோவிகற்பமாக நினைத்தீர்போலும். அண்டத்தைக்

* அதிவீரராமபாண்டியன் நிரம்ப அழகிய தேசிகரைச்சுட்டி இவ்வாறு கேட்டதாகவுங் கூறுவர்.

காவல்செய்யுஞ்சத்தி உமக்கேயன்றிப் பரதேசவாசி
எது? அதனால், அவ்வாறு கூறினேன்'' என்றார். உ
முன்னையகோபங்களெல்லாமாறி, அச்சொற்பொருளின் வயாகய
இன்பத்தின்மூழ்கி, மனமிகமகிழ்ந்து அச்சுவாமிகளைத் தம்மருகே ஆசனத்திருத்தி, பற்பல வித்துவான்களையும்நோக்கித் தமது ஐயப்பாடுகளையறிவித்தனர். அதற்கு அவ்வித்துவான்கள்பலருங் கூறிய சமாதானங்கள் தம்மனதிற்கு ஒவ்வாமையால் சுவாமிகளை நோக்க, அவைகளுக்குச் சுவாமிகள்சொல்லுஞ் சமாதானமே தமது புத்தியில் விசேடமாகத்தோற்றக்கண்டு, அவரொழிந்த வித்துவான்களை அவரவர் தகுதிக்கேற்ப உபசரித்தனுப்பினர்.

இந்தச்சுவாமிகள் அவ்வரசருடைய அநுமதியின்படி அவ்விடத்திற்றானே வசிக்கும்போது, அவராலனுப்பப்படும் பதார்த்தங்களைப்பிறர்கொள்ளத் தாம் அற்பமேனும் உபயோகியாது மாதுகரிபிக்ஷைபண்ணிக்கொண்டு, தம்மை அடைந்த அன்பர்கட்குக் கல்வி யறிவொழுக்கங்களையும் சமயசாஸ்திரங்களையும் போதித்து வந்தனர். அதனையுணர்ந்த அரசர், ''எங்ஙனமாயினும் இம்மகாநுபாவர் நமது அன்னத்தைப்புசிக்கும்படி செய்யவேண்டுமே'' என்று எண்ணி, ஒருநாள் அவர் பிக்ஷையேற்கும்வீடுகடோறும் தமதுபதார்த்தங்களையனுப்பி அவருக்குத் திருவமுது செய்வித்தனர்.

பின்பு ஒருநாள், அவ்வரசர் புலவர்திலகராகிய சுவாமிகளை நோக்கி, ''சுவாமீ! கச்சியப்பசிவாசாரியசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய கடல்போற்பரந்துகிடக்குங்கந்தபுராணத்தை ஆன்மாக்கள் யாவரும் எளிதின் வாசித்து உணர்ந்துய்யும்பொருட்டுச் சுருக்கிச் செய்துதரல்வேண்டும்'' என்றுகேட்க; சுவாமிகள் அவ்வாறே ஒரு சுபதினத்திலே பாடும்படி ஆரம்பித்து, அற்புதசின்மய அதிமதுர கவியாகிய கந்தபுராணத்தைச் சுருக்கமாக நவரசத்தோடும் விருத்த யாப்பினால் (௧0௪௮) செய்யுளிற் பாடி முடித்து, அவ்வரசர் முதலாயினாரோடும் பாட்டுடைத்தலைவரது படைவீடாறனுள் ஒன்றாகிய திருச்செந்தூரை யடைந்து, முருகக்கடவுளுடைய சந்நிதானத்திலே அதனை அரங்கேற்றி யருளினார்.

அப்பொழுது, அரசர் உவகைகூர்ந்து, ஒரு பொற்றட்டிலே அநேகமாகிய நவரத்தினங்களை வைத்து, அவருக்குப் பரிசாகக் கொடுக்க; அவர் அதை மறுமல் ஏற்று, ''இதுகுருவுக்குப் பிரீதியாகுக'' என்று அப்பால்வைத்தார். மறித்தும் அவ்வாறேகொடுக்க; ''இது சிவனுக்குப் பிரீதி யாகுக'' என்று வைத்தார். மீட்டும் அங்

னமே கொடுக்க; "இது அடியார்களுக்குப் பிரீதியாகுக" என்று வைத்தார். அதுகண்ட அரசர், "மும்முறையுந் தமக்கென்று நாங் கொடுத்ததை இவர் இங்ஙனம் செய்தனரோ" என்றுநினைக்கும்பொழுது சுவாமிகளுடைய அநுபவந் தெரிந்தாரிற்சிலர் அவ்வரசரை நோக்கி, "மகாராசாவே! இதுவரையில் இவர் தமக்கு வேண்டுமென்றுயாதாயினும் நினைத்ததுண்டோ?" என்றார்கள். அதன்பின் அவ்வரசர் சுவாமிகளை நோக்கி "சுவாமீ! அடியேன் தேவரீரை நகர்வலஞ் செய்வித்துத் தரிசிக்க விரும்புகின்றேன்" என்று விண்ணப்பஞ் செய்ய, அவர் "தருமபுரவாதீனத்தில் எழுந்தருளியிருக்கும் எனது குருமூர்த்திகளுடைய அநுமதியின்றி அதற்கு நான் இசையமாட்டேன்" என்றார். அதுகேட்டஅரசர் அவ்வாறே தமது கருத்தை அவரது ஞானதேசிகருக்குத் தெரிவித்து, அக்குருமூர்த்தியின் அநுமதி பெற்றுச் சுவாமிகளை நகர்வலம்செய்வித்தார்.

பின்பு ஒருநாள் சுவாமிகளை நோக்கித், "தங்கள் குருஸ்தானத்தில் வசிக்கும் பக்தகோடிகள் செய்யும் தொழில் என்னை?" என்று வினவ; அப்பொழுதுசுவாமிகள்

"ஆய்வார் பதிபசு பாசத்தி னுண்மையை யாய்ந்தறிந்து
காய்வார் பிரபஞ்ச வாழ்க்கையெல் லாங்கல்வி கேள்வியல்ல
லோய்வார் சிவானந்த வாரியுள் ளேயொன் றிரண்டறத்
தோய்வார் கமலைபுண் ஞானப்ர காசன்மெய்த் தொண்டர்களே."

என்னுங் கட்டளைக் கலித்துறையைத் திருவாய்மலர்ந்தருள, அதனைக்கேட்டுணர்ந்தஅரசர், "ஆண்டுவசிக்கும் அடியவர்களுடைய தன்மையே இங்ஙனமாயின், அவ்வடியவர்களை அடிமைகொள்ளுங் குருமூர்த்திகளுடைய பெருந்தகைமை எங்ஙனமாகுமோ!" என்று அத்தியந்த ஆச்சரியமடைந்து, முன்னே அச்சுவாமிகள் குருலிங்கசங்கமங்களுக்கென்று வாங்கிவைத்தநவரத்தினங்களையும் அத்தருமபுரவாதீனத்திற்கே யனுப்பினர். அம்மட்டோ! குற்றமற்ற இலக்கணங்களையுடைய கோக்களைத்தானஞ் செய்தல் மிகமேலாகிய தருமமாதலால் மிகுந்த சிரத்தையோடு அவ்வாதீனத்திற்கு வருடந்தோறும் பசுக்களுள் உயர்ந்தகபிலைகளை அனுப்புவதாகிய ஒரு வழக்கத்தையும் உண்டாக்கினர். அது நெடுநாள்வரையில் நடந்து வந்தது. அது நிற்க.

சம்பந்த சரணாலயசுவாமிகள் இப்படியே நெடுங்காலமாகயாத்திரைபண்ணித் தருமபுரத்தை யடைந்து, திரிகாலத்திலுங் குருதரிசனஞ் செய்துகொண்டிருந்து, சிலகாலஞ்சென்றபின் சிவபெருமான் திருவடிநீழலிற் கலந்தருளினர்.

முற்றிற்று.

---

சிவசண்முகன்றுணை.

உபதேசகாண்ட மருளிச்செய்த

# *குகனேரியப்ப நாவலர்

## சரித்திரச்சுருக்கம்.



தொண்டைமண்டலத்திலே, காஞ்சிபுரத்திலே, சற்றேறக் குறைய ஆயிரத்தொருநூற்றிருபது வருடங்கட்குமுன்னே, செங்குந்த மரபிலே, சிவானந்தமுதலியாரென்பவர் ஒருவரிருந்தார். அவர் புத்திரப்பேறின்மையால்வருந்தி, தமது மனைவியாராகிய கற்பிற்சிறந்த அமுதாம்பிகையோடு அரியவிரதங்களை அனுட்டித்துக் கொண்டு, தமதுபதியிலமர்ந்தருளிய ஏகாம்பரநாதனை வழிபட்டு வர, அக்கடவுள் ஒருநாள் சொப்பனத்திலே தோன்றி அனுக்கிரகித்தபடியே ஓராலயமமைத்து, குகப்பெருமானைப் பிரதிட்டை செய்து, குகனேரி எனவோர்தீர்த்தமுண்டாக்கி, அத்தீர்த்தங் கொண்டு தினமுங்கிரமமாக முருகக்கடவுளுக்கு நித்தியபூசையாதிகளை நடாத்திவந்தனர்.

அக்காலத்திலே, அக்கடவுளுடைய திருவருளால் ஒருசற்புத்திரர் அவதரிக்க, அப்புத்திரருக்கு அத்தீர்த்தத்தின் பெயரையே உரியபெயராகத்தரித்து, ஐந்தாம்வயதிலே வித்தியாரம்பஞ் செய்வித்தலும்,அவர் சகலகலைகளிலுந் தேர்ச்சியுற்றவராய்த் தமது நகரத்திலுள்ள குமரகோட்டத்து அருச்சகரும், சுப்பிரமணியக்கடவுள் வரப்பிரசாதியும்,அதிதெய்வீகமுற்று விளங்கியிருந்த தமதுகுலகுருவும் ஆகிய கச்சியப்பசிவாசாரியசுவாமிகள் என்பவரிடத்தே சமயதீக்ஷைபெற்றுக்கொண்டு, தமிழிலே தேவார திருவாசகமுதலிய அருட்பாக்களையும் சமஸ்கிருதத்திலே இதிகாசபுராணமுதலியவற்றையும் அவ்வவற்றிற்குரிய கருவி நூல்களோடு கற்றுவல்லவராயினர். பின்பு விசேஷதீக்ஷை பெற்றுக்கொண்டு சைவர்களுக்கு இன்றியமையாச் சிறப்பினவாகிய சமயநூல்களைக் கற்றுணர்ந்து, அந்நூலுணர்ச்சியால் சிவபெருமானொருவரே பரம்பொருளென்னுங்

* குகனேரிஎன்பது சோனேரியென மருவிவழங்குகின்றது.

துணிவுதோன்ற உடனே சிவபூசைபெழுந்தருளச்செய்துகொண்டு, அச்சிவபூசையி னிடத்தும் அருள் அன்பு அடக்கம் முதலிய நற்குணங்களினுஞ் சிறந்தவாராய்த், தமது பிதாவின் ஆன்மார்த்தமாகிய முருகக்கடவுளுக்கு நித்தியநைமித்தியங்களும் மகோற்சவமுஞ் சிறப்பாக நடத்திவருங்கால், ஒரு மகோற்சவகாலத்தில் முருகக்கடவுள் எழுந்தருளும்போது மழைபெய்யத்தொடங்க, அதுகண்ட குகனேரியப்பநாவலர்

"கார்க்கு மழைக்குங் கவலேங் கடுஞ்சிறையாற்
சூர்க்குடைந்த மின்னைச் சுகத்திருத்தி - யூர்க்குள்விடுவ்
கந்தன் விழாவைக் கருதாது பெய்வித்த
லந்தமோ வாகண் டலா."

என்னும் வெண்பாவை அருளிச்செய்து, உடனே இந்திரன் ஆஞ்ஞையால் மழையொழிய, மகோற்சவத்தைச் சிறப்பாகநடாத்திக் களிகூர்ந்தனர்.

சிலநாட்சென்றபின் பதினெண்புராணங்களுள் ஒன்றாகிய கந்தபுராணத்தின் உட்பிரிவான சனற்குமாரசங்கிதை சூதசங்கிதை பிரமசங்கிதை விட்டுணுசங்கிதை சங்கரசங்கிதைசூரசங்கிதை என்னும் ஆறுசங்கிதைகளுள், சங்கரசங்கிதையினுடைய பன்னிரண்டு காண்டங்களுள் ஒன்றாகிய சிவரகசியகண்டத்தின் பிரிவெனப்படும் ஏழுகாண்டங்களிலே, முந்திய சம்பவகாண்டம் அசுரகாண்டம் மகேந்திரகாண்டம் யுத்தகாண்டம் தேவகாண்டம் தக்ஷகாண்டம் என்னும் ஆறுகாண்டங்களையும் தமிழிலே பாடும்படி சுப்பிரமணியக்கடவுளே "திகடசக்கரச்செம்முகமைந்துளான்" என்று அடியெடுத்துக்கொடுத்து அநுக்கிரகித்தபடியே, கச்சியப்பசிவாசாரியசுவாமிகள் கந்தபுராணமென்னும் பெயரினல் பாடிமுடித்து,எஞ்சிய இவ்வுபதேசகாண்டத்தைப் பாடிமுடிக்கும்படி தமது சீடராகிய குகனேரியப்பநாவலருக்குக் கட்டளையிட, அதனைச் சிரமேற்கொண்ட நாவலர்பெருமான் முருகக்கடவுளது சந்நிதியையடைந்து பணிந்து "எம்பெருமானே! தேவரீர் எனதாசிரியருக்கு அடியெடுத்தளித்ததுபோல் அடியேனுக்கும் அநுக்கிரகித்தால் அவராஞ்ஞைப்படி பாடிமுடிப்பேன்" என்று விண்ணப்பஞ் செய்துகொண்டனர். அத்தருணத்தே அக்கடவுளருளால் "குழவிவெண்பிறை" என்று ஓரசரீரிஎழ,அதனையே முதலாகக்கொண்டு உபதேசகாண்டத்தைச் சொற்சுவை பொருட்சுவைநிரம்ப (௪௩௪௮) செய்யுட்களால் பாடிமுடித்து, அந்நகரத்துள்ள குமரகோட்டத்திலே சுப்பிரமணியக்

கடவுள் சந்நிதியில் வேதாகமபண்டிதர்களும் புராணவிற்பன்னர்களும் பிறரும் கேட்டுக்களிகூரும்படி தமதாசிரியர் முன்னிலையில் * அரங்கேற்றினர். அவ்வமையத்தில் கச்சியப்பசிவாசாரியசுவாமிகள் பெருவகையுற்று

"அன்றுழி நின்றுநித்த வாரமுதை யொப்பிடுவர்
பொன்றுமைக் கேறுவாம் புந்நிதிநினைக்—தொன்ற
வுகுநேரிற் றுருவென லொக்குமலால் வேறென்
குகனேரி நாவலனூற் கு."

என்று ஆசிர்வதித்தருள அமர்ந்திருந்தனர்.

இப்படி இருக்குநாட்களிலோர்நாள் தரிசனத்தின்பொருட்டு தணிகாசலத்தையடைந்தவழி, அங்கேசிலர் அம்பிறை என்றபதம் மூவிடங்களில் அடுக்கிவரவும், தணிகாசலபதி பெயரும் வள்ளிநாயகியார்சிறப்பும் அமையவும், பாங்கிதலைவற்குணர்த்தல் என்னுந் துறையாக முடியவும், பின்முடுகுவெண்பாவாக ஓர் துதிசெய்ய வேண்டுமென்றுவேண்ட, உடனே கேட்டோர் வியக்கும்படி,

"அம்பிறைக்கு மைந்துமல ரம்பிறைக்கு கொந்துமிக
வம்பிறைக்குங் கண்ணுட் கருள்புரிவாய்—நம்புதணி
கைக்கிரிக்கு ளூற்றசித்ர கச்சுடைத்த னக்குறத்தி
யைக்களித்த ணைத்தவத்த னே."

எனப்பாடிமுடித்ததுமன்றி இங்ஙனமே அவ்வச்சமயங்களில் பற்பல அற்புதப்பாக்களை அருளிச்செய்துகொண்டு, சிவானுபவச் செல்வராய் வீற்றிருந்து சிவபெருமான்றிருவடிநீழலிற் கலந்தனர்.

முற்றிற்று.

---



---

* இவ்வாசிரியர் யாத்திரையாகத் திருச்செந்தூரையடைந்து வசிக்குங்கால், அன்பர் வேண்டுகோளின்படி அங்குமொருமுறை அரங்கேற்றினரென்பதும் சரித்திரம்.

சிவசண்முகன்றுணை.

திருச்சிற்றம்பலம்.

# கந்தபுராணச் சுருக்கம்.

## பாயிரம்.

காப்பு.

பொங்கு கந்த புராணச் சுருக்கநூ
லிங்கி சைத்திட வின்பொடு முற்றுவான்
மங்கை பாலகன் மாதங்க மாமுகப்
புங்க வன்றுணைப் பொற்பதம் போற்றுவாம்.

### சிவபெருமான்.

சீர்கொண்ட வானந்த மாகி யெங்குஞ்
செறிவாகிப் பரமாகித் திரம தாகி
யேர்கொண்ட கருணைதிரு வுருவ மாகி
யெழில்கொண்ட மலைமகளை யிடத்திற் கொண்டோன்
கார்கொண்ட நிறங்கொண்ட முகுந்த னாதிக்
கடவுளர்வந் தடிபரவுங் கடவுள் கொன்றைத்
தார்கொண்ட முடியனவ னடியைத் தாழ்ந்து
தாழாத பெருங்கதியில் வாழா நிற்பாம். (க)

### உமாதேவியார்.

மாற்கரிய செம்பதத்தோன் றேவி யாகி
வல்வினையே னெனதாவிக் காவி யாகி
மேற்கருணைத் திருவுருவ முடையா ளாகி
வித்தகமா யைந்தொழிற்கும் வித்தாய் நின்ற
சேற்கருங்கட் டளவநகைக் களபக் கொங்கைச்
சிற்பரையிங் கெமையாளு முமையாள் செம்பொற்
காற்கமலங் * தலைக்கமலம் பொருந்தத் தாங்கிக்
கைக்கமலங் குவித்தருந் † துங் கமலந் தீர்வாம். (உ)

* தலைக்கமலம் - தலைக்கு+அமலம்.
† துங்கம் அரும் மலம் - உயர்ச்சியில்லாதமலம்.

## விநாயகக்கடவுள்.

மாவேலை யாலமதை யடக்கித் தன்னுண்
  மண்டுலக மண்டமெலாம் வளர்ந்து தானோர்
காவேயின் முன்னுதித்த வரசிற் றோன்றிக்
  கடம்புபுனை குருந்தினுக்குத் துணைய தாகித்
தூவேதந் தலைகாண்டற் கரிய தாகித்
  துன்பமுறு பிறவியெனுந் துகள்சேர் வெய்யி
லாவேனைத் தன்னடியா நிழலிற் சேர்த்த
  வத்திதனைப் பத்திசெய்து முத்தி சேர்வாம். (ந)

(இ-ள்.) மாவேலை ஆலமதை தன்னுள் அடக்கி-பெருமைதங்கிய பாற்கடலினிடத் துண்டாகிய ஆலாகலவிடத்தினைத் தமது கண்டத்துளடங்கச் செய்து,—மண்டு உலகம் அண்டம் எலாம் வளர்ந்து-நெருங்கிய உலகங்கள் அண்டங்கள் எவ்விடங்களினும் வியாபித்து,—முன் ஓர் காவேயில் உதித்த அரசில் தோன்றி-முற்காலத்திலே ஒரு மூங்கிற்புதரிலே தோன்றிய இறைவராகிய சிவபெருமானிடத்தி லவதரித்து,—கடம்பு புனை குருந்தினுக்குத் துணையது ஆகி - கடப்பமாலையைத்தரித்த குழந்தையாகிய முருகக்கடவுளுக்கு மூத்தவராகி,—தூவேதம் தலைகாண்டற்குஅரியது ஆகி-பரிசுத்தமாகிய வேதங்களாலும் முடியைக்காண்டற்கரியபொருளாகி,—துன்பம் உறு பிறவி எனும் துகள்சேர் வெய்யில் ஆவேனை - துன்பமிக்க பிறவியெனப்பட்ட குற்றம்பொருந்திய வெய்யிலிற்கிடந்துழலும் அடியேனை,—தன் அடியாம் நிழலில் சேர்த்த அத்திதனை பத்திசெய்து முத்திசேர்வாம் - தன்றிருவடியாகிய நீழலிலேசேர்த்தருளிய யானைமுகக்கடவுளுக்குப் பத்தியைச்செய்து முத்தியைச்சார்வாம். (எ-று.)

இச்செய்யுளில் மரப்பெயர்கள் தோன்றவுங்கூறினமையின் மா வேல் ஆல் இவைகளைத்தன்னுளடக்கி, நெருங்கிய உலகங்கள் அண்டங்களெவ்விடங்களினும் வளர்ந்து, இதற்குமுன்னரோ மூங்கிற்புதரிலேதோன்றிய அரசினிடத்தில்முளைத்துக், கடம்பையுடைய குருந்தினுக்குத்துணையாய், விளங்கும் அத்தியெனப் பொருள்கோடலுமாம். அத்தியென்றுருவகித்ததற்கேற்ப அடியை நிழலென்றார். அடக்கி வளர்ந்து உதித்த அரசெனவும், தோன்றி துணையதாகி அரியதாகி சேர்த்த அத்தியெனவும் கூட்டிமுடிக்க. சிவலிங்கப்பெருமான் மூங்கிற்புதரிலே தோன்றியது திருநெல்வேலியென்னுந்தலத்தில். விநாயகர்துதி முதலிற்கூறி, மீட்டுங்கூறியது எற்றிற்கென்னின்! இந்நூலிடையூறின்றி யினிதுமுடிய முன்னர்த்துதிசெய்து, சுவாமி அம்மையைத்துதித்துப் பின்னர், அவர்களுடையகுமாரர்களாகிய விநாயகர் சுப்பிரமணியரிவர்களைத்துதிசெய்வது சைவசமயத்துப் பாங்காதலினென்க. தான்-அசை. அது-பகுதிப்பொருள்விகுதி. அத்திதனை என்பதன்கண்ணுள்ள இரண்டனுருபை நான்கனுருபாகத்திரிக்க.

## சுப்பிரமணியக்கடவுள்.

தேவர்குலப் பெருங்கமல மிடுக்க ஞான திமிரமகன் றளியோடு சிறந்து வாழ, மாவலிசே ரவுணர்குலக் குவளை வாடி மண்ணினி டைச் சுருங்கியிட வந்த பானு, தூவடிவேற் குமரேச னடிய னேன் புன் சொல்லினுக்கு மிரங்கியருள் சுரக்கும் பெம்மான், பூவடியா மிருபோது மூன்று போதும் பூசைபுரிந் தன்பினொடு புகழ்ந்து வா ழ்வாம். (௪)

## வீரவாகுதேவர்.

பொங்குகிரி களிற்றிலைமை யோதும் போது பொற்புடைய பொற்கிரிமுன் னிற்கு மாபோற், றங்குதிறற் புகழ்வீரர் தம்மை யெண்ணிற் றானேமுன் னெண்ணவருந் தலைமை யாளன், பங்க மிலா நீடிலகை மூடு * மல்லின் பகைவனவன் பகைவனவன் பகை வ னானேன், மங்கலிலாப் புகழ்வீர வாகு வாய வரிசிலைக்கைக் குரி சிலையாம் வணங்கல் செய்வாம். (௫)

## சமயகுரவர்.

§ வெங்குருவிற் சற்குருவா யுதித்துக் கூடன் மீனவன்மேல் வினைதீர்த்தோன் வினாத்தாள் போற்றி, துங்கமுறு மலைகடலிற் சிலைய தான தோணியில்வந் தவன்பாத தூளி போற்றி, யெங்கள் பிரான் றனையிருளிற் பரவை வாசற் கேவல்கொண்டோன் † பதப் பதும விருதாள் போற்றி, புங்கவர்சூழ் திருவாத வூரில்வந்த புண் ணியனு ரிணையடிகள் போற்றி போற்றி. (௬)

## ஞானப்பிரகாசதேசிகர்.

கடியதிரி மலவிருளைக் கடிய ஞான கரமுதவ வெதிர்செறிந்து கண்டோர் தங்கள், வடிவுடைய விதயசரோ ருகங்க ளெல்லா மல ரவவ மதிநிலவு மழுங்கித் தாழப், படியடியர் கண்டுதொழ மண்டு சீர்த்திப் பரன்கமலை யெழுந்தவருட் பானு வெண்மைப், பொடி யணியு மெழின்ஞானப் பிரகா சன்றன் பூங்கமல மலரடிகள் போ ற்றி போற்றி. (௭)

---

* அல்லின்பகைவன் அவன்பகைவன் அவன்பகைவனானேன் என்ப தற்கு, இருளினுக்குப்பகைவன் சூரியன் அவனுக்குப்பகைவன் பானுகோ பன் அவனுக்குப்பகைவன் வீரவாகுதேவர் எனப் பொருள்கொள்க.

§ வெங்குரு என்றது சீகாழியை. முன்னொருகாலத்து வியாழபகவா ன், தானேகர்த்தனென அகங்காரங்கொண்டவழித் தன்னிலைமைபிறழச் சீகாழியைமேவிச் சிவபிரானையர்ச்சித்துக், குருத்துவம்பெற்றாராகலின், இத்தலம் வெங்குரு எனப் பேர் பெற்றது.

† பதப்பதுமம்-பக்குவமுள்ளதாமரை ; அஃது அன்றலர்ந்தது.

### ஞானசம்பந்ததேசிகர்.

சீரணியு நுதலின்விழி மழுமா னுகந் திருந்துமெரி பொருந் துவிடந் தெரிந்தி டாமற், றூரணியன் பனாயாள வவர்போல் வந்த சைவசிகா மணியெவர்க்குந் தலைவ னெங்கோன், காரணியு நெடிய பொழிற் கமலை வேந்தன் கருணைமழை பொழியுமிரு கடைக்க ணுளன், பார்புகழு ஞானசம் பந்த னெந்தை பாமனிரு சரணமலர் பாவி வாழ்வாம். (அ)

### கச்சியப்பசிவாசாரியர்.

போதமுறு சூதமுனி புகன்ற காந்தப் புகழ்க்கடலிற் படிந்த தன்கட் பொருள தான, மேதகுவல் புனலருந்தி வைய முய்ப வெய் யதுயர்ப் பிறவியெனும் வெம்மை தீரத், தாதவிழ்பூம் பொழிற் காஞ்சிக் குவட்டி லேறிச் சலதியமு திணைநிகர்செந் தமிழ தான, காதன்மழை பொழிந்தவருட் கொண்ட லான கச்சியப்ப னிருபாத முச்சி வைப்பாம். (கூ)

### நூல்வந்தவழி.

வேறு.

நன்புவி யிடத்து மிக்க நைமிச வனத்து வாழுந்
துன்பில்சீர் முனிவர் கேட்பச் சூதனங் குரைத்த காந்த
மின்புறு கச்சி யப்ப னியம்பினன் றமிழா லன்ன
னன்புறு தமிழைப் போற்றி யறிந்தவா சுருக்கிச் சொல்கேன்.

---

### அவையடக்கம்.

கருக்கடன் முருக்கி முத்திக் கரைதரு காந்த நூலைச்
சுருக்கவே கல்வி யில்லாத் தொண்டனேன் றுணிந்த வாறு
திருக்கில்வான் முழுது மிங்கோர் செங்கையி லடக்கு வேனென்
றுருக்கர மில்லா னென்னு மூக்கமே போன்ற தன்றே. (கக)

அத்தமுஞ் சொல்லுஞ் சொல்லு மாதிமா தாத லானு
மெத்திய வனப்பு வேலோன் வியன்கதை யுறுத லானும்
பித்தனேன் றனது பாட்டிற் பிழைகள்வந் திடினுந் தீர்த்திட்
டுத்தமர் கொள்வ ரென்னு முரத்தினு லுரைக்க லுற்றேன். (கஉ)

தனக்கிணை தானே யான சம்பந்தன் கமலை வேந்தன்
கனக்கவே யென்பா லன்பாற் கருணைவைத் திடுத லாலே
யுனற்கருங் காந்தந் தன்னை யுரைத்தனன் சுருக்கி யல்லா
லெனக்குமிக் கதைக்கு நாடி லெத்தனை தூர மாமால். (கங)

பாயிர முற்றிற்று.

ஆகச் செய்யுள் கச.

சிவசண்முகன்றுணை.

# கந்தபுராணச்சுருக்கம்.



## புராணவரலாறு.

விரிகின்ற கடற்புனலுண் டிருண்டு மின்னி விண்மூடி வருங் கருமைக் கொண்மூ வீறி, யெரிகின்றவொளித்தாவ மொளிப்ப வோங்கு மெழினந்தி வனையும்பரிம்பர் வாழச், சொரிகின்ற வெள்ளமிகு பாலிசூழ்ந்த தொண்டைவள நாட்டுளது தொண்டைச் செவ்வாய்ச், சரிகின்ற வளைத்தளிர்க்கைம் மடவார் மேவுந் தடமாட நெடுவீதித் தமிழ்சேர் காஞ்சி. (க)

இன்னபரி சென்னவெழி லன்ன மேய விறைபாலு மெவராலு மியம்ப வொண்ணு, வந்நகரின் வளர்பெருமை சொன்னு லென்னு லடங்குமோ வடங்காதா லதன்கண் முன்னுட், § பொன்னவிருந் திருமார்பன் கமட மாகிப் புரங்கடிந்த கடவுளடி போற்றி வாழ்ந்த, நன்னலஞ்சேர் கச்சபா லயமென் றோது நாமவா லயமொன்று நண்ணிற் றன்றே. (உ)

அனையசின கரமதனின் மதனை வென்ற வமலனிரு கமலமல ரடிகள் போற்றிப், புனையுநறுந் துழாய்மவுலிக் கடவு டந்த போதனுறு போதுவளர் போத மேவு, முனைவர்பல ரடைந்தவன்செம் பதங்க டாழ்ந்து முண்டகமேன் முதல்வவொரு முதுசீர்க் கானந், தனையினிதி யாங்கடவம் புரிந்து வாழச் சாற்றுகென வனையானித் தன்மை செப்வான். (ங)

§ பொன்னவிருந்திருமார்பன் கமடமாகிப்போற்றியதை "முன்னொரு பிரமகற் பத்திடை நாரணன் மூரிநீர்—மன்னும்மந் தரமலை யாமையாய்த் தாங்கிவார் கடல்கடைந்—தின்னமு தஞ்சுரர்க் கீந்தபின் வெஞ்செருக் கெய்தியாங்—கன்னமுந் நீர்முழு தழக்கினு னுலகெலா மஞ்சவே. அச்சநீத் தாருயி ருய்வகை யருள்சுரந் தாங்குநீஇக்—கச்சபத் தின்னுயிர் செற்றதனேட்டினைக் கதுமென—நச்சிய வெண்டலை மாலிகை நடுவுறக் கொண்டனன்—பச்சிளங் கிள்ளைபால் வீற்றிருந் தருளிய பண்ணவன். இப்பெரும் பிழைதவிர்ந் துய்யுமா நாரண னெம்பிரான் — வைப்பெனுங் காஞ்சியிற் சோதிலிங் கத்தினை வழிபடூஉ—மெய்ப்படு மன்பினு விரந்திரந் தேத்தலும் விடைமிசைத்—துப்புறழ் செஞ்சடைத் தோன்றலங் கவனெதிர் தோன்றினன்" என்னுங்காஞ்சிப்புராணச் செய்யுள்களாலுணர்க.

ஒருதருப்பை யெடுத்தவனைத் தவனி மீதி லுருட்டியிது நின்ற வனத் துறைதீ ரென்ன, வருமுனிவ ரெல்லோரும் பின்ன ரேக வதுசென்று துன்றியவோ ரடவி யூடே, மருவியவ ணின்றிடவங் கிருந்தா ரன்ன வன ‡ நைமி சாரணிய வனமென் றுகப், பொருவில் புகழ் மாதவரோர் வேள்வி யாங்கே புரிந்தமலம் பொருந்தியினி திருந்த போது. (ச)

சூதமுனி யீதறிந்து வரலு நேர்போய்த் தொழுதனரங் கிழு தனலிற் றேய்ந்தா லொப்ப, மேதகுமன் புளமுருக முகமன் கூறி வீறுதம தாச்சிரம மேவச் சேர்த்திச், சோதிமணிப் பெரும்பீட மொன்று நாப்பண் டிலங்குறவிட் டதன்மீது துகளி லாவம், மாத வனை யினிதிருத்தி யருத்தி யோடு வல்லையிலர்க் கியமுதல வழங்கி னரால். (ரு)

மற்றதுபின் பின்னனெடுஞ் சடிலச் சென்னி மன்னியமா தவ ரனையான் மருங்கு வைகிப், பற்றலர்தம் புரமெரிய நகைத்த செவ் வாய்ப் பாலவிழித் தனிக்கடவுள் பால னான, செற்றநெடுங் கதிர் வேற்கைப் பெரியோன் காதை சிறியோமிங் கறியவுரை செய்வா யென்னக், கொற்றமுனி யதுவினவி விழிகள் வெள்ளங் கொள்ள வவ ரோடின்ன கூற லுற்றான். (சு)

ஒன்னலார் சோரிகுடித் தொளிருஞ் செவ்வே லொருவனது பெருங்காதை யுரைப்போர் கேட்போர், முன்னெலாம் புரிந்தவினை யனைத்துந் தீர்த்து முத்திதரு மதுகேட்ப முயன்றீர் மன்னோ, பின்ன லான் மறைந்தபிடர் முனிவீர் நீவிர் பெருங்காத லொடுகேண்மின் பேசு கேனென், றின்னலா னவைநவைக ளெவையும் போக்கு மேதமில்சீர்ச் சூதமுனி யியம்ப லுற்றான். (எ)

முற்காலத் தரன்புகன்ற மறைக ளியாவு முதன்முடிவு தடுமாற முனிவர் தேவர், நற்காருந் தனையிருந்த மாக்க ளெல்லா நல்லறிவு நீங்கிமய னண்ணி னரா, யற்காள கண்டனையு மறந்து வீறு மற மாற்றி மறமாற்ற வாற்றன் மாயோன், விற்காமர் நெடும்புருவ வா ணி கேள்வன் விண்ணவர்சூழ் தரக்கயிலை மேவி னரால். (அ)

விண்ணவர்கள் மகுடமுடி தடவுஞ் செந்தாள் விறனந்தி தேவ ரொடு விமலன் பாலியா, நண்ணியது புகன்றருள வேண்டுமென்ன நம்பனெதி ரடைந்திறைஞ்சி நவிற்ற லோடுந், தண்ணருளெம் பெ

‡ நைமிசம்—சக்கரம் ஒய்ந்தவிடம்.

ருமானிங் கவரை வல்லே தருதியென மீண்டுநெடுஞ் சார்ங்கபாணிக், கண்ணன்முத லிமையவரை விடுப்ப நாதன் கழறெழுது பணிந்தின்பங் கலந்து நின்றார். (கூ)

நின்றுபுகழ் மான்முதல்வா னவரை நோக்கி நிமலனும தராசுபுரி நெறிக ளெல்லா, நன்றுபெற நடந்தனவோ வென்ன மாயோனுதவுன தின்னருளி னடந்த விங்கா, ளின்றுமெமக் களித்தருள்வதொன்றுண் டன்ன தியம்புவனம் புவிமாந்த ரெவருந் தென்றற், கன்றுலவுங் குளிர்சோலைக் கயிலை மேய கடவுணினை மறந்துமறங் கருதி னூரால். (க0)

நற்போத மவர்படைத்து நினது பாத நணுகும்வகை யருள்சிறிது நல்கு வாயென், றற்போடு மொழிந்திடலு மொழியாச் சீர்த்தி யருளாள னெருகலையோ டவனி மேனீ, பொற்போடு வியாதனென வுதித்து வேதப் புகழ்க்கடலை நான்குவகை புரிந்தி யாருங், கற்போலுந் திரண்டபுயப் புயலே யின்பக் கதிபடையும் படிபுகறி கடிதின் மாதோ. (கக)

ஓங்குமறை யுணர்ந்துமுளந் தேரு தாரு * முணராரு மைய மகன் றுய்யு மாறு, பாங்குறுமோன் பதிற்றிரட்டிப் புராண முண்டு பண்டுநா நந்தியொடு பகர்ந்தா மன்னோன், ருங்குபுகழ் படைத்தசனற் குமர னென்னுந் தவமேவு முனிதனக்குச் சாற்றி னானல், வாங்குதிரைக் கடலுடுத்த புடவி மீது மற்றவன்பாற் கேட்டினிது வாழ்தி யென்றான். (கஉ)

இப்பணியை யப்பணியும் பணிசேர் சென்னி யிறையருள முடிமேற்கொண் டிறைஞ்சி யாங்கே, கைப்பதுமங் குவித்துவிடை கொண்டு நீங்கிக் கடிதுதன திடத்தடைந்து கடைந்த வேற்கட், டுப்பனைய துவாதர வாணி கொங்கைச் சுவடுபடும் புயனுதிச் சுரர்க ளியாரு, மொப்பகறம் பதம்புகுத விடுத்து வைகி யொருகலையோ டுதித்திடவங் குன்னி னானல். (கங)

புண்டரிகக் கடவுள்வழிப் பராச ரப்பேர்ப் புகழ்மேவு முனிவனிமம் பொழியும் போது, தண்டரளந் திரையிறைக்குங் கங்கை தன்னிற் றன்னிகர்யோ சனைகந்தி தடந்தோ டோய, வெண்டரங் கப் புவிபோற்ற வவர்பாற் றோன்றி வெதிரிகமா வனத்திருந்து

* உணரார் என்பதற்கு-வேதத்துக்கு அதிகாரியல்லாத நான்குவருணத்துப்பெண்களும், சூத்திரரும் எனப்பொருள்கொள்க.

வேத மியாவும், பண்டையுணர் வாலுணர்ந்தி யாரு முய்யப் படி மிசை § மா ணுக்கராற் பரப்பி னுனல். (கச)

ஆங்கதுபின் சனற்குமரன் பாலீ ரொன்பா னுனபுரா ணங்க ளுணர்ந் தடியேற் கீந்து, இங்கலவ னவோர்க்கு முரைத்தி யென்று செப்பினு னன்னவற்றுட் டிங்கள் வேணிக், கோங்கலர்மென் முலைப்பாகத் திறைக்கீ ரைந்து கொலைத்திகிரிப் படையோற்கு நான் கு கோலப், பூங்கமலத் தவிசிருந்தோற் கிரண்டு செந்தீப் புகழ்த்த பனற் கோரொன்ருப் பொலிந்த வன்றே. (கரு)

புரமூன்று மெரிக்களித்தோற் போற்றுஞ் சைவம் பொருவில் சீர்ப் பவிடியமே பொற்பு மிக்க, வரமாரு மார்க்கண்ட மிலிங்கங் காந்தம் வராகமே வாமனமே மச்சங் கூர்மம், பிரமாண்ட மிவை கள்சிவ புரான மாயோன் பெருங்காதை காருடநா ரதமே விண் டாங், கருண்மேவு பாகவத மாகு மென்ப வயன்காதை பதுமமே பிரம மாமால். (கசு)

கூறுபிர்ம்ம கைவர்த்த மிரவி காதை கொடுந்தழலின் கதை யாக்கி நேய மாமென், றூறில்பரன் கதைபத்திற் பத்தர் போற்று முயர்குமரன் கதைசுருக்கி யுரைத்தா னென்ப, மாறில்புகழ் வதிரி கமா வனத்து வைகி வாதரா யணனுகி மறைக ளியாவும், வீறு பெற நான்குநிலை புரிந்த வாற்ருல் வியாதனெனும் பெயர்படைத் தோன் வியன்மா ணுக்கன். (கஎ)

வளங்குலவு மலையரையன் மகளா யம்மை வளர்ந்தசெபன் முதலாக மன்னுஞ் செவ்வேள், விளங்குசுர ரரசளித்த கொம்பி னேடும் வேடர்குலக் கொடியோடும் வேழக் கூற்றின், களங்கமில் செக் கர்த்தவிசி லிருந்த திருக் கவின்முனிவன் றுரைகைபாகக் கழுற லோடு, முளங்குளிர்ந்து முனிவோர்கள் விரிவா லெங்கட் குரைத்தருள வேண்டுமென வுரைக்க லுற்றான். (கஅ)

புராணவரலாறு முற்றிற்று.

ஆகச்செய்யுள் - ௬௨.

---

§ மாணுக்கராற்பரப்பியதை "மயலறு பயிலரோ வைசம் பாயனர்— சயிமினி சுமந்துவாந் தவத்தர் நால்வர்க்கும்—வியலிருக் காதியாம் வேத நான்கையு—முயர்வுறு தவத்தினுன் முறைமி னேதினுன். மெய்ம்முனி ய னையரை விளித்து கீரினி—யிம்மறை யியல்பினே ரொவர்க்கு மீமென—வ ம்முறை நால்வரு மனைய வேதநூல்—செம்மையொ டளித்தனர் சிறந்து ளோர்க்கெலாம்." என்னும் கந்தபுராணச்செய்யுள்களாலுணர்க.

முதலாவது

# உற்பத்திகாண்டம்.

திருமருவு கயிலைமிசைக் கனக மான சினகரஞ்சேர் மண்டபத்துச் சிறந்த சீயப், பொருவிலெழி லணைமீது கணைமீ ருட்டப் பூவையொடு புரமெரித்தோன் பொருந்து போதின், முருகுமலர்க் குழலுமையா ளெழுந்து நாதன் முண்டகத்தா ளிணைவணங்கி முன்னு நின்று, குருகுவளைக் குலநெருங்கு கரங்கள் கூப்பிக் குமுதவாய் திறந்தினைய கூற லுற்றாள். (க)

இற்றைவரை வரைவளைத்த கரத்தோய் நின்னை யெண்ணாத தக்கன்மக ளென்னு நாமம், பெற்றனன்மே லதுபரிப்ப வெருவினேனப் பெயரகல வருடியெனப் பேச லோடுந், தற்றுபொழி லிமயநெடுஞ் சைல வேந்தன் றன்மகளா யுனைப்பெறுவான் றவஞ்செய் கின்றான், மற்றவன்பால் வளர்ந்திடுதி வந்தி யாம்பின் மணத்துமென விடைகொடிம லையிற் சேர்ந்தாள். (உ)

அங்கொருபூந் தடத்தினிடைக் கமல மீதி லமலநா யகிகுழவி யாகி மேவ, மங்கைதனை யாண்டுதவம் புரிந்து நின்ற மலையரையன் கண்டெடுத்து மகிழ்ந்து வான்றோய், துங்கமனைக் கொடுபோகி மேனை யான துணைவிகரத் தளிப்பவவ டொழுது வாங்கிப், பங்கமற வளர்த்தனளை யாண்டு செல்லப் பரனையுற வம்மைதவம் பண்ண வெண்ணி. (ங)

வென்றியுறு தந்தை யொடு மிந்தவாறு விளம்புதலு மலையரையன் விளம்பு வானீ, யின்றுதவம் புரிந்திடவே பொருது னுன் மேனி யிளம்பருவ மிதுதவிர்தி யென்ன வன்னை, மன்றலுறு கொன்றை முடிப் பரமன் காப்பன் மறுத்தறையே லெனவிசைந்து மாத ரோடு, குன்றிலொரு பாங்கர்தவச் சாலை யூடு கோதிறவம் புரிந்திருப்பக் குயிற்றி னானல். (ச)

செல்லாரும் பொழிலிமயத் தரனைச் சேரத் திருந்துதவம் புரிந்துமையா ளிருந்த காலை, யெல்லாருந் தழனுதற்கட் பெருமான் வின்னே றொல்லாரும் பரவவர மீந்த வாற்றால், வில்லாருங் கனக நெடு மாட நீடு வீதிமகேந் திரமூதூர் மீது வெம்மை, யல்லாருங் கடுவினைய தகுவர் சூழ வரசுபுரிந் திருஞ்சூர னமர்ந்தா னன்றே. (ரு)

சொற்றருமக் காலத்தின் ஞாலத் தின்பாற் றெல்லமறைப் பொருளினைமுன் சோதி பாங்கர்ப், பெற்றசன காதிமுதன் முனிவர் நால்வர் பெருந்தவங்கள் பலபுரிந்து பின்னு முன்னும், வெற்பினெ டுங் கயிலையெனுஞ் சைல மேவி வீறுமெழி னந்திவிட விடஞ்சேர் கண்டக், கொற்றவன்ற னடிவணங்கி முடிமேற் செங்கைக் கோக னகங் குவித்தினைய கூற லுற்றார். (சு)

அருமறையின் பலபொருடேர்ந் தின்னாள் காறு மடியரேம் புந் திவிரிந் தலைந்த தீண்டுப், பொருவிடைமேபோ யறிவடங்கி யாங்களுய் யப் புரிந்தருள வேண்டுமெனப் புகற லோடுங், கருமறலி யுரங்கிழி த்த பதுமச்செந்தாட் கருணைநெடுங் கடலிருமின் காமர் நன்னான், மருளுறுநம் முணர்வொடுங்க வுரைப்பா மென்ன மன்னுமவன் றிருத்தாண்முன் னிருந்தார் மன்னோ. (எ)

சங்கரன்முன் னவரிருப்ப நந்தி தன்னைத் தந்திதனை யுரித்தகர த் தலைவ னோக்கிப், புங்கவர்க ளெவர்வரினும் விடுவா யல்லை போர் மதவேள் வரில்விடுதி போதி யென்ன, வங்கவனே கினன்முனிவர் மகிழ்ந்து கேட்ப வாகமத்தின் பொருண்மூன்று மாதி யோத, விங் கெமது புந்திவிரி வொடுங்க ஞான மிறைவபுகன் றருள்வாயென் றியம்பினரால். (அ)

என்றிடலு நகைத்தருளி யாது மாங்கே யிசைத்திலனப் பொ ருளிருப்ப திவ்வா றென்று, துன்றுநெடுஞ் சடைமுனிவர்க் குணர் த்து மாற்றூற் றுலங்குமொரு கரமுரத்திற் றோயச் சேர்த்தி, மூன்ற குவர் புரமெரித்த பரமன் ஞான முத்திரையாங் குறிகாட்டி முனிவ ரோபோ, லொன்றொருநுண் கணப்பொழுதி யோக மாகி யுறைந்த னனங் கவரருள்பெற் றுய்யு மாறு. (சு)

பிள்ளைச்சந் திரமவுலிச் சிறுமான் செங்கைப் பெருமானிவ் வா றிருப்பப் பெருமை சான்ற, வுள்ளத்தன் பினராநற் றவருந் தத்த முணர்வொடுங்கி ஞானமுணர்ந் துறும்பே ரின்ப, வெள்ளத்துட் படிந்துசெய லொன்று மின்றி மேவினரோ ரிறைப்போது விமலற் காய, தள்ளற்றெண் டிையுடுத்த புடவி மாக்கட் கமரர்தமக் கெண் ணிலுக மாயிற்றம்மா. (க0)

விரிபதுமத் திருமருமப் பெருமா னாதி விண்ணவர்க்கு மண்ண வர்க்கும் வேந்த னாகிப், பொருவிலவ ருயிர்க்குயிரா யுணர்வு நல்கு ம் பொருவிடையோ னுமையோடு பொருந்த லின்றி, யருமுனிவர் பொருட்டாக யோகி போல வமர்தலா லனைவோரு மரிவை மார் தோண், மருவிமுயங் குதலின்றி யிருந்தார் கஞ்ச மலர்விதிக்கும் விதிக்குமுறை மாறிற் றன்றே. (கக)

இப்படியிப் படிவானத் திருந்து வாழு மெவ்வுயிரு முறுங்காலத் திருணஞ் சேய்க்குந், துப்பவுணர் பெருந்தகையாஞ் சூரன் செய்யுந் துயரினு லுயர்துறக்கந் துறந்து நீங்கிக், கைப்படுவெங் குலிசநெடும் படையான் முன்னங் கனவனாக ளிறகறுத்த கடவுள் கோல, மைப்பொலியு நயனவயி ராணி யோடும் வானவரோ டும்புவியின் மருவி னுனல். (கஉ)

வெள்ளிவரை யடைந்தரனை வணங்கு மாறு வேளையலா திருந்திடவும் வேலை நஞ்சங், கொள்ளுமடன் மிடறுடையோன் குனித்த செம்பொற் கோதண்ட வேதண்டங் கூடி யாங்கே, கள்ளுகுதார்ச் சயந்தனெடுங் கடவு ளோனைக் காரவுணன் சிறைபுரிந்த கடுஞ்சொற் கேட்டுத், தள்ளுமதற் கரிபதுயர் கொண்டு நாதன் றுட்கமல மலர்நினைந்து தவம்புரிந்தான். (கங)

புரிந்திடவு மிறைதவள விடைமேற் றேன்றிப் பொருவிறவத் தினைத்தனைநீ புந்தி தன்னில், விரும்பியதே தெனவறியான் போன்று கேட்ப வெஞ்சூர்க்காய்ந் தெமையாள வேண்டு மென்னத், திருந்தலனால் வருந்தலெலாந் தக்கன் வேள்வி சேர்ந்திருந்த தீமையெனச் செப்பிநந்த, முரந்திகழு மகனொருவ னவுணர்ச் சாடி யுமைப்புரப்பா னெனவருளா லுரைத்துப் போனுன். (கச)

ஆங்கமல னீங்குதலு மமரர் கோமா னுகுலமு மின்பமுங்கொண் டனைய வெற்பிற், றங்குபுக ழயிராணி யென்னு நாமத் தன்மனைவி பொன்மனைவி தன்பால் வைத்துத், தேங்கமழுங் கமலநிதிப் பொகுட்டின் மன்னுஞ் சென்னிநான் குடையானைச் சேர்ந்து தாழ்ந்து, திங்குபெறு சூர்புரியுந் துயரு நாதன் செப்பியது மவனோடு செப்பி னுனல். (கரு)

போயமரர்க் கிறையுரைத்த வாறு தேர்ந்து புகுந்தபடி முகுந்தனுக்குப் புகல வெண்ணித், தூயகம லத்திருந்து திருந்து வேதன் சுரர்குழுவு மகவானுஞ் சூழ வேகி, மாயனுட னரன்யோகத் திருந்த வாறும் வானவர்க டானவரால் வருந்து மாறு, மேயபல வுங்கூறவரியு மோர்ந்து விதிபதும முகநோக்கி விளம்ப லுற்றுன். (கசு)

எம்பெருமான் முனிவோர்கட் காக யோக மிருந்திடுத றவிர்ந்தருளி யிமய வெற்பி, லம்பிகையை மணம்புரிந்தோர் சுதனை நல்கவரன்பான்மா ரனைவிடுகென் றறைத லோடு, மும்பர்பெருங் குழுவோடு மகவா னோடு மொளிதருபா ரதிகேள்வ னுவந்து மீண்டு செம்பதும வகத்தினிதுற் றகத்து வேளைச் சிந்தனைசெய் திடவவனுஞ்சேர்ந்தா னன்றே. (கள)

வந்தமதன் றனைநோக்கி யேகன் யோக மருவுதல்விட் டுமைய வனை மருவு மாறுன், கந்தமலர் சிந்திவரு வாயென் றேதக் கரங் கொடிரு செவிமூடி யரன்பே ரோதி, யந்தமிலா வைபனைச்சென் றெய்யவஞ்சி யனேகவித மறுத்தறைய வலரோன் சீறி, யிந்தமொழி மறுத்திடிற்சூ ளுறைவோமென்ன விசைந்தனனிவ் வாசகமங் கிசைக்க லுற்றான். (கஅ)

மண்டுபவக் கடற்படிய நினது பாங்கர் வருஞ்சூளின் மாறுத லின் வாளு லாவுந், துண்டமதிச் சடைபோன்பாற் கணைக டேவித் துஞ்சினுநன் றுஞ்சுவருந் தொழிலு முண்டா, முண்டகவன் டவி சிருந்த முனிவ வென்பான் முனியலையா னிறைவனொடு முரட்போ ராற்றத், திண்டிறலி னேகுவனென் றிபம்ப வஞ்சேல் செல்கவென த் தனதுலகஞ் சேர்ந்தான் மன்னே. (கசு)

இருங்கிள்ளைப் பரித்தென்கா லிரத மீதே யிரதியொடு புகுந்து படர்ந்திந்து வேணிக், கருங்கண்டன் கயிலைமலை கண்டு வல்லே கர ஞ்சிரமேற் கூப்புபுதேர் கடிது நீங்கி, மருங்குள்ள தனதுபரி சனங் க ளாங்கே வைகும்வகை நிறுவிநறு மலர்த்தண் சோலை, நெருங்கந் த வரைமீது மாதி னோடு நெடுஞ்சிலைவே ளேறியிது நினைந்து செய் வான். (உ0)

விண்டுவரு ளெங்கணைவே ளனையதான விலங்கலிடை விலங் காப்புள் விலங்கு மோகங், கொண்டிடவெஞ் சரந்தூண்ட நந்தி சீற க்கொடுவாளி நெடுவாளிற் குழுமிநிற்பக், கண்டுமத னிறைஞ்சவர லென்கொ லென்று காரணங்கேட் டணிமேலை வாச றன்னு, லண் டர்பிரான் மொழிப்படிபோ கென்னப் போந்தாங் கரனையெதிர் கண்டாங்கே யயர்ந்து வீழ்ந்தான். (உக)

பின்னிரதி தேற்றவெழீஇப் பொருவா னிற்பப் பிரமன்முத லோர்மதன்செய் பெற்றி காண்பா, னன்னகிரிக் கொருபுடைபோய் மருவி னார்வே ளைங்கணைவிட் டானவைசென் றரன்பான் மேவ, வன்னிவிழி திறப்பமத னிறப்பத் தேவி வருந்துமது தெரிந்தமரர் வருந்தி நாதன், பொன்னடிநின் றேத்துதலு மியோகநீங்கிப் புந்தி தனி லந்திதனைச் சிந்தை செய்தான். (உஉ)

அன்னவனினைந் திடவறிந்து நந்தி யேகி யடிதொழுது நின்றிட நீ யலரோ னாதி, விண்ணவரைத் தருதியெனத் தருத லோடும் வே ண்டியதே தெனவுமையை விமல நீவேட், டெண்ணில்புகழ்க் கும ரனைத்தந் தருள்வா யென்ன விசைந்தவரை விடுத்திரதிக் கிமய மா தை, வண்ணமணம் புரிந்துனது கணவ னுவி வழங்குதுமே கென வியம வரையிற் சேர்ந்தாள். (உங)

இன்னமொழி மொழிந்தருளிப் பின்னரீச னிட்டமுட னிட்டையனுட் டித்தூ வாழு, மென்னவுளாத் தருண்மேவுஞ் சனக ஞுதி யிருந்தவரா யிருந்தவர்க ளேக வோதிக், கன்னிதவங் காணமுது மறையோன் போலக் கௌரிபா லுறவெழுந்து கரங்கள் கூப்பி, யன் னவனின் றிடுதலு மோர் தவிசின்மேவி யருந்தவநீ புரிந்திட லே தறைதி யென்றான். (உச)

என்றிடலும் விசையையுமை பரனைச் சேர்தற் கிச்சித்தா ளெனப்பரனை யிகழ்ந்துகூற, நின்றவுமை சினம்புரிந்து போதி போதி நீதியிலா வேதியநீ யென்ன வுன்னை, யின்றுமணந் திடவணைந்தே னென்று கூற விடர்மூழ்கி யிணையறுதா ளிணைக ளேவக், குன்றி னெருபுடைபோக விடையின் மீது குழகனு மெதிர்காட்சி கொடுத் தா னன்றே. (உரு)

நாயகனும் பரம்பரனை யெதிர்கண் டம்மை நாணமொடு பணிந்துகர நளினங் கூப்பிப், பேயனையே னுனையறியா துரைத்த வென் சொற் பிழைபொறுக்க வேண்டுமெனப் பேச லோடுந், தூயமதிச் சடைக்கடவு ளவைக ளெம்மைத் துதித்தனவாக் கொண்டோநீ சோரா லுன்னை, நேயமொடு நாளைமணம் புரியச்சேர்து நீயரிய தவம்புரித னிங்கு கென்றான். (உசு)

பொன்றுங்கு கனகவரை குனித்தோ னின்ன புகன்றகலச் சில வரிது பொருப்பன் முன்போய், நின்றுங்கு மொழிந்திடலு முவகை யென்னு நெடுங்கடலி னிடைப்படிந்து நிமலைபொல்வன், தென்றுயே வருகவென மனையிற் சேர்த்தா னிறைவனுயர் கயிலைபடைந் திலங்குமோ § ரேழ், பின்றாழ்செஞ் சடைமுனிவர் தம்மை யுன்னப் பிஞ்ஞகன்முன் னடைந்திறைஞ்சல் பெற்று நின்றார். (உஎ)

வே று.

அன்ன மாதவரா யாதி தெரிந்தே
மன்னு கின்றவிம வான்மக ளாகு
மின்னினைத் தரவி ளுவுதி ரொன்னப்
பொன்னு லாவுமிம யக்கிரி புக்கார். (உஅ)

மாதவங் கொளிம வானெதிர் கொண்டே
யாத னங்கண்மிசை யன்பொ டிருத்தி
யேது வெஃகியிவ ணெய்திய தென்ன
வாதி யோதிய தறைந்தன ரன்றே. (உகூ)

---

§ முனிவர்களெழுவராவார்:—அத்திரி, ஆங்கிரேசர், கௌதமர், சமதக்கினி, பரத்துவாசர், வசிட்டர், விசுவாமித்திரர் என்னுமிவர்களாம்.

கூறுதற் கிசைவு கொண்டது கண்டே
யாறுலாவு சடை யண்ணலை நண்ணி
மாறிலாத விம வானியை யோதி
வீறு தத்தமிடை மேவின ரன்றே. (௩௦)

ஈது நின்றிட விமக்கிரி மன்னன்
காத லோடமரர் கம்மிய னைக்கொண்
டோதிமக் கிரியி லூர்புனை வித்தே
யாதி முன்புற வணைந்து பணிந்து. (௩௧)

ஒன்று பங்குனியி லுத்திர மாகு
மின்று நன்றுபொழு தென்றிரு மாதை
மன்றல் செய்பவரு வாயென முன்போ
வென்றி தன்னொடுபின் மேவுது மென்றான். (௩௨)

நார வேணியர னந்தியை நோக்கிச்
சீரு லாவிய சிறப்புடை மன்றற்
கியாரை யுந்தருதி யென்றன னியாருஞ்
சேர நந்தியிறை சிந்தனை செய்தான். (௩௩)

உன்ன வக்கினி யுருத்திர ராதி
மன்னு ருத்திரர்கள் மான்முதல் விண்ணோர்
துன்னு மாமுனிவர் துன்று கணங்கண்
மின்னுறுங் கயிலை வெற்பிடை வந்தார். (௩௪)

வந்து நந்தியுறு வாயிலி னண்ணா
முந்து நந்தியான் முன்பு விடுப்ப
வெந்தை தாளிணை யிறைஞ்சினர் சூழ்ந்தா
ரந்த வேலையல ரோனிது செய்வான். (௩௫)

ஆசிலா மகுட மாதி கலன்க
ளீச னங்கணிய வின்பொடு நல்க
மாசிலா முதல்வன் மற்றிது கொண்டா
னேச மோடென நெடுங்கரம் வைத்தான். (௩௬)

வைத்து மெய்ப்பணிகள் வண்பணி யாக
நித்த னன்பொடு நினைந்து தரித்தே
மொய்த்தி யாவரு முரண்கொடு சூழ
வித்த கன்றிரு விடைப்புற முற்றான். (௩௭)

ஏற தேறின னெழிற் கயிலாய
வீறு நின்றதிரு வெற்பை யகன்றே
யூறி லும்பரொ டுருத்திரர் சூழ
மாறி லாவிம வரைப்புடை யுற்றான். (௩௮)

வேத மேவுதிரு வீதியி னண்ணிக்
காதன் மாதர்நனி கண்டு மயங்கக்
கோதி லாதவிம வானுறு கோயின்
மாத வங்கொடலை வாயிலில் வந்தான். (௩சு)

ஏங்கு ருவிடை யிழிந்தவ ணிற்பப்
பாங்கு மேனையெதிர் பால்சொடு வந்தே
யோங்கு தாளிணை யுவந்து விளக்கித்
தீங்கி ஞணமொடு சென்றன ளன்றே. (சo)

ஆறு லாவுசடை யண்ண லதற்பி
ஞறில் யாவரு முவந்தயல் சூழ
மாறி லாதவதூ வைக்கள னண்ணி
வீறு சிங்கவணை மீதுறு போது. (சக)

வேறு.

தென்பால்வடபா லுயர்ந்திழியத் தெரிந்துதேவர் வருந்துதலாற்
றுன்பாசகன்ற குறுமுனியைத் தொலையாமலயந் தனிலேவ
முன்பானதுபோற் படியிருப்ப முனிவரமரர் முகமலர்ந்தா
ரன்பாலரம்பையர் கள்சூழ வரன்பால்வந்தா ளம்பிகையே. (சஉ)

வந்துபரனைப் பணிந்திடலும் வள்ளறவிசி னிருத்தியென
வெந்தையோடு முமையிருப்ப விமவானடைந்தங் கெழின்மனைவி
யுந்துகரக நீர்வார்ப்ப வுயர்மாற்கரிய வொளிப்பதத்தைப்
பந்தவினைக ளறவிளக்கிப் பரிந்துபூசை புரிந்தனனே. (சங)

பூசைபுரிந்து நாரிகரம் புனிதன்கரத்திற் கொடுத்தரனுக்
காசைபொருந்து மம்பிகையை யளித்தேனென்ன வறைந்திடலு
மேசிலிமையோர் புகழ்ந்தார்க ளிருவர்கீத மிசைத்தார்கண் [தார்.
மாசில்கணங்கள் முழவறைந்தார் மடவார் பல்லோர் வாழ்த்தெடுத்

அங்கணினைய நிகழ்ந்ததற்பி னசலவேந்த னசலமுலைத்
திங்கண்முகத்தம் பிகைகேள்வன் றிருமுன்கனிபால் கொடுவந்தே
யிங்கிதயில வேண்டுமென விவைகொண்டாமென் றவைதம்மின்
மங்குன்மிடற்றோன் கரந்தொடலு மலரோன்சடங்கு தொடங்கினனே.

மன்றற்சடங்கு முடிந்ததற்பின் மாலுமயனு மகபதியுந்
துன்றுஞ்சுரரு மிமவானுஞ் சுற்றத்தோரு மற்றெவருங்
கொன்றைமுடித்த நெடுவேணிக் குழகன்றாளுங் குழகனிட
மென்றும்பிரியா வுமைதாளு மிணங்குமன்பால் வணங்கினரே. ()

ஈதுபுரிந்து முற்றுதலு மெமையாளுமையா ளிருந்ததை
யாதிகாமுன் னெடுஞ்சேட மனைவர்தமக்கு மளித்தனனப்
போதிலிரதி வந்தெந்தாய் போர்வேடன்னே யளித்தியெனச்
சோதிமதனை நினைந்திடலுஞ் சுரர்கள்வெருவத் தோன்றினனால். ()

மருவாரிதழி மதிபொதிந்து வளர்செஞ்சடில வானவனத்
திருமாலளித்த மலர்ப்பகழிச் சிலையான்வதனந் தெரிந்தருளி
யுருவாயிரதிக் கிருத்தியரோ வொழிந்தோர்க்கெல்லா முருவல்லா
தருவாயிருந்துன் னரசுபுரி கென்றேயவளோ டவன்விடுத்தான். ()

கன்னற்சிலைவே டனைவிடுத்துக் கௌரியோடும் விடைபேறி [ழிந்
மின்னுங்கயிலை யடைந்தெவர்க்கும் விடையையுதவி விடையயி
துன்னற்கரிய வரியணைமே லுமையோடிருப்ப வுயிரனைத்து
மின்னலகல விருங்காம வின்பமேவி யிருந்தனவே. (சுகூ)

பின்னரொருநா ளிரிமுதலாம் பெருஞ்சீரிமையோர் மேருவின்பான்
மன்னியிருந்தே யெமைவருத்தும் வலியசூரன் வலிகெடுப்ப
வன்னநடைமா தினைமணந்து மரனிந்திலன்மைந் தீனையெனவே
யுன்னிக்கயிலைப் பரம்பரனே ருற்றுவேண்ட நச்சினரால். (ருO)

வேளையெரித்த விழியாளன் வேளையறிந்து மீளுதற்கு
நாளுமுலவு காலைவிட னந்திதனைக்கண் டஞ்சியது
மீளவாலுங் கயிலைதனில் விண்ணோரடைந்து நந்திவிட
வாளும்பரனைத் தொழுதேத்த வரனிங்கேது வேண்டுமென. (ருக)

சற்றுந்தகவில் கொடுஞ்சூரன் றன்னுலிந்நா ளின்னன்மிக
வுற்றுவருந்தித் திரிந்திளைத்தோ முன்னைப்போல வொருசுதனை
வெற்றிபொருந்த வளித்தெமது விழுமந்துரப்ப வேண்டுமென[ன்.
வற்றுன்றியசீர்க் களப்பெருமா‡னறுமாமுகங்கொண் டாங்கிருந்தா

வே று.

செம்மை கொளாறு முகத்தொ டிருந்தே திவி ழி யாறினு மா
றுபு லிங்கம், வெம்மை யொடுந்தர வங்கவை சென்று வீ றுல கத்து
விரிந்திட வஞ்சிப், பொம்ம ருங்கவி னம்மை யெழுந்து புலம்பு
சிலம்பு பொலன் சழன்மோத, விம்மென வோடி யிருக்கை புகுந்
தா ளெங்கணு மாகி யிரிந்தனர் விண்ணோர். (ருங)

‡ திருமுகமாறுதல் "ஐந்து முகத்தோடதோமுகமுந்-தந்து-திருமுக ங்களாறுகிச் செந்தழற்கணுறு-மொருமுகமாய்த் தீப்பொறியாறுய்ப்ப,, என த் திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பாவிற் கூறியவாற்றாலுணர்க.

ஓடிய விண்ணவர் கூடினர் வந்தே யுந்திய தானவ ரானவர் தம்மைச், சாடிய விங்கொரு மைந்தனை யெந்தாய் தந்தரு ளென்றுனை வந்தனை செய்ய, வீடுறு வெம்மைகொ ளங்கி யளித்தா பெங்ஙன முய்வதி யாமென வோதப், பீடுறு மோர்முக மாகி யிருந்து பெருந்தழன் முன்பு வரும்படி முன்ன. (ருச)

அங்கிலே தன்னில் விரிந்திடு செந்தீ யாறு பெரும்பொறி யாகி யரன்றன், முன்னுற வந்திட வண்ண றெரிந்தே மொய்ம்புள தேயுவை வாயுவை நோக்கி, மன்னிய விப்பொறி தன்னை யெடுத்தே மங்கலில் கங்கையுள் வைத்திடு மென்றே, யின்னலில் சத்தி கொடுத்திட மாறி யெடுத்துயர் கங்கை யடுத்ததில் வைப்ப. (ருரு)

மங்கலில் கங்கையு மப்பொறி தன்னை வண்ண முறுஞ்சர வணமிசை வைப்பப், பொங்கெழி லேயிரு திக்கினு மான்முற் புங்கவர் நின்று புரந்தன ரப்போ, தங்கதி லாறு முகத்தொடு மீரா றத்த மொடுங்கம லத்தி னிடத்திற், சங்கர னேமுரு கேச னெனச்சீர் தங்க விருந்திட வண்டர்கள் கண்டார். (ருசு)

பன்னிரு மொய்ம்பு நெடுந்தகை தன்னைப் பால தருத்தி வளர்த்திட மார்பிற், பொன்னை யிருத்திய பச்சுரு வத்துப் புங்கவன் முற்படு புங்கவ ரெல்லா, மின்னறு மீனை விடுத்தது கண்டே வீறிய வாறு சிறுானெ மேவ, வன்ன மடந்தைய ரன்ன முலாவு மன்ன தடத்தி லடைந்து புரந்தார். (ருஎ)

ஓதிது நின்றிட முன்ன ரொழுந்தே யோடிய சங்கரி பின்பு திரும்பிச், சோதி யிடத்தி லடைந்து மடங்கல் சுமந்திடு கின்ற துலங்கணை மேவக், கோதில் சிலம்ப துடைந்ததின் முன்வீழ் கொன்னவ மாமணி யன்னவள் சாயை, யேய்தலு மொன்பது மங்கைய ராகி யெந்தை விளித்திட வின்பொடு வந்தார். (ருஅ)

வித்தக மங்கைய ரெம்பெரு மானை விருப்பொடு கண்டு கருப்பம தாகச், சத்தி சினந்து கருப்பய வாதே தாங்குமி னென்றிட வேங்கின ராங்கே,மெத்திய மேனி வியர்ப்பி லிலக்கவீர ருதித்தன ராரியை சொல்லா, லுத்தம மாதர்கள் பின்பொரு நாளி லொன்பது மைந்தரை யன்பொடு தந்தார். (ருகூ)

மாசறு மன்னவர் தம்பெயர் வீர வாகு வெனுந்திரு வள்ளல் வளக்கைக், கேசவ னும்பர் புகழ்ந்திடு வீர கேசரி வீர மகேந்திர னென்போன், வீசு புகழ்ப்பெறு வீர மகேசன் வீர புரந்தரன் வீர வரக்க, னுசறு வீர திவாகரன் வீர ராந்தகன் வீர மடைந்திடு தீரன். (சூ0)

மற்றவர் தங்களை யாதி தெரிந்தெம் மைந்தர்க ளென்றுமை மாதொடு கூறி, நற்றிறல் கொண்ட விலக்கர்க ளோடு நந்திரு மைந் தன தேவல் புரிந்தே, யுற்றிடு வீரென வோதுபு மாதோ டுந்து வி டைப்புற மொல்லை புகுந்தே, யற்ற மறுஞ்சர வணம தடைந்தா ளுசறு வானவ ரானவர் சூழ. (சுக)

மாசி லிமக்கிரி யின்புடை தன்னின் மன்று செழுஞ்சர வண முன மெய்தத், தேசுறு மன்னதில் வைகிய செவ்வேள் சிற்பர ணரி செறிந்தது கண்டான், பாச மகற்றர னம்பிகை யோடுன் பாலக னைக்கொடு வாவென வோத, வாசறு பூவி லிழிந்து நடந்தே யாறுரு மைந்தனை யம்மை யெடுத்தாள். (சுஉ)

அம்மை யெடுத்துழி யாறுரு மைந்த னாறு முகங்களு மாறிரு கையுஞ், செம்மை பொருந்தொரு மேனியு மாகச் செப்பினை யொ த்த திருத்தன நின்று, பொம்ம லுடன்சொரி பால *தருத்திப் பொற் புறு சிற்பர னைப்பணி விக்க, நம்மை யளித்திடு கந்தனை யன்பா ளுதை னெடுத்துர மீதி லணைத்தே. (சுங)

அந்தரி யோடு விடைப்புடை வைத்தங் காரன் மடந்தை யருக் கருள் செய்தான், சுந்தரி மைந்த னருந்த முலைப்பா றுண்ணென முன்னர் சொரிந்தது தன்னிற், சிந்திய தோடுபு ‡கந்தன் வளர்ந்த செழுஞ்சுனை யூடு செறிந்திட வங்கண், வெந்திறன் மீனென வாழ் பவ ருண்டே வீறிய தொல்லுரு மேவினர் மன்னே. (சுச)

கொற்றம துற்ற பராசர னல்குங் கோதக ⁰லாறு குமாரரு மன்னுன், சொற்றிடு சூள்கொடு மீனென வாழுந் துன்ப மகன்று

---

* அருத்தி—என்பதற்கு, ஆதனவள்ளத்திலேற்று உண்பித்து எனப் பொருள்கொள்க. உண்ணுமுலையென்னும் பெயர்க்கிழுக்காமாகலான். இத ற்கு முதனூலாசிரியரும் "ஆதிநாயகன் கருணையா யமலமாய்ப் பரம, போ தரிதா யிருந்ததன் கொங்கையிற் பொழிபா, லேதிலாததோர் குருமணி வள்ளமி தேற்றுக், காதன் மாமகற் கன்பினு லருத்தினுன் கவுரி." எனக் கூறியிருத்தல் காண்க.

‡ கந்தம் - ஸ்கந்தம் என்னும் வடமொழித்திரிபு. சேர்க்கையென் பதுபொருள்.

⁰ ஆறுகுமாரராவார்—தத்தன், அனந்தன், நந்தி, சதுர்முகன், பரிதிப் பாணி, தவமாலி என்பவர். இவ்வறுவரும், சிறுபருவத்தே, இச்சரவணப் பொய்கையில் மீன்களைப்பிடித்து விளையாடுங்கால், பகற்கடன்கிரப்பவந்த பராசரமுனிவர்கண்டு, இப்புன்றொழிலுடைய நீவிர் ? மீனுருவாக எனச் சபித்து, மீட்டும் அவர் பிரார்த்தனைக்கிரங்கி, சிவபெருமானருளால் இப் பொய்கையில் முருகக்கடவுள் திருவுருக்கொண்டமருங்கால், எடுத்தணைக் கும் அம்பிகையின்தனப்பாலின் பெருக்கையுண்டு முன்னுரு வெய்துவீராக என அனுக்கிரகித்தகல,அவ்வாறுயினர் என்பது சரித்திரமாகலின், மீனெ னவாழுந்துன்பமகன்றுயர்தொல்லுருவுற்" றென்முர்.

யர் தொல்லுரு வுற்றே, பெற்ற மிசைக்கிரி மாதொ டிருந்த பெருந் தகை முன்றுதி பேசி வணங்க, வற்றம தற்ற புகழ்கொள் பரங் குன் றத்திடை நீவி ரடைந்திடு மென்றான். (௬௫)

அந்தா மீதுறு மாரலை விண்ணோ ராரையு மன்புட னங்கண் விடுத்தே, யெந்தை பிரானுயர் வெள்ளி விலங்க லிணங்கி யதன்க ணிருந்திடு போதின், வெந்திறல் கொண்ட விலக்கர்க ளொன்பான் வீரர்கள் கந்தனை வந்தனை செய்தார், சுந்தரி மைந்த னெழுந்தவ ரோடுந் தூவிளை யாட றொடங்கின னன்றே. (௬௬)

மண்ணி லுலாவுறும் விண்ணி லுலாவும் வண்ண வபன்பத நண்ணி யுலாவுங், கன்ன னிருந்த தலத்தி லுலாவுங் கண்ணுத னன்னிய கன்னி லுலாவு, மெண்ணில் வளம்பெறு மண்புன றீகா லின்புறு விண்டனி லண்ட முலாவும், பண்ணியல் வீணை யிசைத்தினி தாடும் பாடு மரன்றரு பாலக னம்மா. (௬௭)

நீடுக டற்களை யொன்று படுத்து * நேமி நகத்தை நிலத்தி லழுத்து, மீடுறு திக்கர வங்களை வெற்பூ டின்பொடு கட்டி யிழுத்திடு மாகத், தோடிரு வோரையு முன்னியல் பன்றி யொருத்தர் பதத்தி லொருத்தனை யுய்க்கும், பீடுறு மெண்டிசை யாளர் பதங்கள் பிடுங்குபு வல்லை பிறழ்ந்திட வைக்கும். (௬௮)

தண்டரு கொண்டல் விசும்பி லுறுங்கோ தண்டம் வளைத்துயர் தாரகை யெல்லா, முண்டை யெனும்படி கொண்டிமை யோர்க ளுரங்கள் சிரங்களி னூடு தெறிக்கு, மண்டிது போல வனேக மியற்ற மற்ற தியற்றிய வன்மைய ரானொன், றண்டரு மன்னனு மேருவி னின்று மயற்கிது கூற வகன்றன ரங்கண். (௬௯)

வேறு.

அங்நே ரத்தினி லன்ன நகத்தை யலைத்தே
முன்னே நின்றோர் முகத்தொடு மாறு முகத்தோ
னன்னே யத்துட னாடி யுலாவுத னாடி
யின்னோ னேயிவை செய்தவ னாமென வெண்ணி. (௭௦)

வெவ்வே ளாக மெரித்தவன் மைந்தனை வெல்வா
னவ்வேள் விக்கிறை யும்பர்க ளோடு மவற்சூழ்ந்
தெவ்வே றன்னையு முய்த்தன னுய்த்தவை யெல்லாஞ்
செவ்வேள் மீதல ருற்றன வொத்தன சென்றே. (௭௧)

---

* நேமிநகம்—சக்கரவாளகிரி.

பிள்ளைத் தண்மதி சூடிய கண்ணுதல் பிள்ளை
யுள்ளத் தாலொரு விற்கொடு நற்கணை யொன்றால்
வெள்ளைத் தந்தியை யட்டன னட்டபின் விண்ணோர்
வள்ளற் சேழ்கணை யுய்த்தவ சத்தை வழங்கி. (எஉ)

ஞாலம் பால்வரு ஊன்றனை யொன்றுறு நான்மைக்
கோலம் பாலிய மன்றனை வென்றிரு கோலா
லாலம் பாவிய வங்கியை யங்கடல் செய்தான்
வாலம் பான்மொழி யந்தரி தந்திடு மைந்தன். (எ௩)

குன்று நின்றவ ரல்ல ரவன்புடை கூடி
நின்றார் யாவரு மோடுத லோடு நெடுஞ்சீர்
துன்று ஞமுக னங்கது கண்டு துரந்தே
முன்று னுற்ற களத்திடை வந்தனன் மொய்ம்பால். (எச)

வேறு.

மற்றதனை நாரதனு மாமுனிகண் டண்டர்குரு
வுற்றுழிச்சென் றோதுதலு மும்பர்கடம் வாழ்வெல்லா
மிற்றதுகொ லெனவேங்கி யெழுந்துகுக னிடத்தடைந்து
பொற்றிருத்தா ளிணைதொழுது புகழ்ந்தினைய புகல்கின்றான். (எரு)

அத்தநினை யறியாம லமர்புரிந்த வண்டர்கடம்
மெத்துபிழை பொறுத்தெழுப்ப வேண்டுமென வெண்மைநிறத்
தத்தியையு மத்தியின்மே லரசையுமற் றனைவரையும்
வித்தகனங் கெழுப்புதலும் விழுந்தார்க ளெழுந்தார்கள். (எசா)

உஞ்செழுந்த விமையோர்க ளுயர்குகனென் றுணராதே
வெஞ்சமராற் றினமென்வே மிகநடுங்கி யவனடிதாழ்ந்
தஞ்சலிசெய் தேத்துதலு மஞ்சலிரென் றருள்கூர்ந்து
குஞ்சரமா முகற்கிளைய குமரவேள் கூறுவான். (எஎ)

சேயெனமுன் பெமைக்கருதிச் செருப்புரிந்தீ ரினியெமது
தூயவிறல் காணுமெனத் தொல்லுலக மண்டமுயி
ராயவெலாந் தனதுருவே யல்லால்வே றில்லையென
நேயவொரு வடிவுகொண்டு நின்றானெம் பெருமானே. (எஅ)

அன்பொடுமற் புதத்தோடு மமரரெல்லாந் தொழுதேத்தத்
தொன்பொலிமுன் னுருவாகிக் குமரவே ணின்றிடலு
மின்பொடுநீ விளையாட விவ்விடைவே றுற்றவெலா
முன்பெனவைத் தருடியென முகிலூர்தி வேண்டினனால். (எகூ)

மகவேந்தன் வேண்டவுமை மகவேந்த லதன்பொருட்டான்
மிகவேவே றுற்றவெலாம் வேறின்றி முன்னுளவாந்
தகவேய்க வெனவெவையுஞ் சார்ந்தனவப் படி § நவிரப்
பகைவேலோன் குகன்றாள்கள் பணிந்தினைய பகர்கின்றான். (அ0)

இங்குநினை யருச்சிக்க வேண்டுமென விசைந்தருளிப்
பொங்குகயி லைக்கொருசார் பொருப்பினிடை விருப்பொடுபோ
யங்கமரர் பூசனைகொண் டருங்கயிலை மருங்கடைந்தான்
றங்குபுகழ்ப் புலவருமத் தனிவரையைத் தணந்தனரால். (அக)

வீசுபுக ழாறுமுக வித்தகனை யும்பரெல்லாம்
பூசைபுரிந் திடலாலே பொற்புறுமவ் வெற்பதுதான்
காசின்முரு கற்கிடமாய்க் கந்தவெற்பென் றொருநாமம்
பேசும்வகை பெற்றதினிப் பெருந்தகரே றியதிசைப்பாம். (அஉ)

நாடுபுகழ் நாடுதெனி னாரதன்செய் வேள்வியின்மாட்
டாடுபிறந் துயிர்கடமை யழித்திடவு மம்மகத்திற்
கூடுமுனி வருஞ்சுரருங் கோதிலரு நாரதனும்
பீடுடைய கயிலையெனும் பிறங்கன்மிசை யுற்றனரால். (அங)

உற்றபொழு திலக்கமுட னென்பதுவீ ரருஞ்சூழ
வெற்றிபுனை யருட்குமர வேளிருந்த படிநோக்கி
மற்றிவனங் குறைமுடிக்க வல்லவனென் றெல்லோரு
நற்றிருத்தா ளிணைவணங்க நம்பெருமா னவின்றருள்வான். (அச)

நொந்தணைந்தீர் புகுந்தபடி நுவன்றிடுதி மென்றருளச்
சிந்தைமகிழ்ந் தொருவேள்வி செய்யவொரு செச்சையதில்
வந்தெமையிங் கடநினைய மகந்தணந்து வந்தனமவ்
வெந்தகர்மண் ணுயிர்களொடு விண்ணுயிர்கொன் றுலவியதே. ()

வெய்யவத னடலடக்கி வேள்விமுடித் தடியேங்க
ளுய்யவளித் தருளெனவே யுயர்வீர வாகுவைப்பார்த்
தையவது தனைப்பிடித்திங் கணைதியென வவனேகிக்
கையில்விறற் றகர்பிடித்துக் கந்தனிடை வந்தனனே. (அசு)

அத்தகனைப் பரியாக்கொண் டவர்வேள்வி செயவிடுத்து
வித்தகனு முருகேசன் விளையாடி யமர்நாளிற்
றத்தைமொழிக் கலைமாது தலைவனுயர் கயிலைபடைந்
தத்தனடி பணிந்துபுறத் தணிவாயி லிடையடைந்தான். (அஎ)

---

§ நவிரம்=மலை.

ஆலயத்தின் முன்பிருந்த வணிமணிக்கோ புரத்தலத்திற்
கோலமுட னிருந்தருளுங் குமரவேள் கண்டருளி
ஞாலமளித் திடுவோனை நம்முன்வரு கெனவேவிச்
சீலமுறப் பணிந்திடுதல் செய்யாமற் பரவுதலும். (அஅ)

எதுபுரி வாயென்ன யான்படைப்பே னெனவருமோ
வேதமென வருமென்ன வியனிருக்கு விளம்பென்ன
வாதியினிற் குடிலையெடுத் தறைகுதலு மதன்பொருளை
யோதியபின் றேதெனவே யோதினு னுமைபாலன். (அகூ)

மன்னுகுடி லைப்பொருளை யறியாமன் மயங்குதலுங்
கொன்னுடைய நரசிங்கக் குட்டிதலைக் குட்டியுதைத்
தின்னலுறக் கந்தவெற்பிற் சிறையிடுவித் தநிலேகி
யன்னநடை யுமைபால னுவிகள்பன் னுட்படைத்தான். (கூ0)

அங்கதுவின் ஞெருநாளி லண்டரொடு முனிவரொடுஞ்
செங்கண்மால் கயிலைநெடுஞ் சிலம்படைந்து நந்திவிடச்
சங்கரனைப் பணிந்தயனைச் சண்முகத்தோ னிட்டசிறை
நங்கள்பிரான் றவிர்த்தியென நந்தியொடு நவின்றருள்வான். (கூக)

வென்றியுறு குமரனிடை மேவியாம் விடச்சொன்னே
மென்றுவிதி சிறைவிடுவித் திங்கணைவா யெனவெதிர்போய்
நின்றிதனைப் புகன்றிடலு நின்றிடிலிங் குன்றனையு
மின்றுசிறை படுத்திடுவ மென்றிடமீண் டிறைக்குரைத்தான். ()

இந்தமொழி கேட்டுநகைத் தேறேறிக் குமரனுறு
சந்தமலைப் புகுந்திடலுங் கழல்பணிந்தென் வந்ததென
வந்தணனை விடுத்திடென வதுசெய்யே னெனச்சினம்போ
லந்தமிலா னேதுதலு மயன்றனைமுன் புறவுய்த்தான். (கூஉ)

அந்தணனுக் கருள்புரிந்தே யறுமுகனைக் கவானிடைவைத்
தந்துகுடி லைப்பொருணீ யுரைத்தியென வுரைத்ததுகேட்
டெந்தைமகிழ்ந் தருங்கயிலை யெய்தினன் குறுமுனிக்குச்
சுந்தரமூ லப்பொருளைச் சொல்லினன் குமரேசன். (கூச)

வேறு.

அணியார் முருகேசன் வளர்ந்ததடத் * தமுதக்கொடிசுந்தரி யென்றிருவோர், தணியா நசையிற்குக ளைத்தழுவத் தவமுற்றது கண்டவர் தங்கனுறப், பணியா வெதிர்நிற்ப விரும்பியதென் பகர்வீரென வெம்மை மணத்தியெனப், பிணியான தறுத்தெனை யாளுமருட் பெருமா னவரோடிது பேசுவனால். (கூரு)

---

* இவர் விஷ்ணுமூர்த்தியின் புதல்வியர்.

பேரன்பு பொருந்திய நுங்கடமைப் பின்மன் றலியற்றுது மவ்வளவுஞ், சீரிந்திரன் வேடர்கள் பான்மகவாய்ச் சென்றே யிரு மென்றரு ளோடுவிடுத், தாருந்தொழுகந்த விலங்கலில்வந் தனி சேர் கயிலாய மடைந்தரனே, டேருந் துமையாளை வணங்கியவர்க் கிடையாக விருந்தன னெம்பெருமான். (கூசு)

அப்போ தினிலண்டர்க ளிந்திரன்மா லயன்மா கயிலாய மடைந்திடலுந், துப்பா ரருணந்தி தடுத்துவிடத் தோகைக்கொரு பாகனை யன்பொடுகண், டெப்போது மிடுக்கண் விளைத்திடுசூ ரொன் போன் புரிதுன்ப மிசைத்திடலு, மெய்ப்பார் குகனே டவுணன் றனைநீ வென்றே வருகென்று விளம்பினனே. (கூஎ)

அப்பான்மை புரிந்திடு வேனெனவே யடல்சேர் § பதினொன்றெ னுருத்திரரை, மெய்ப்பார் * பதினோர் படை யாவருளி வேலொன் று குகன்கர மீதுகொடுத், தொப்பா னதிலாத விலக்கர்களோ டொன்பா னெனுமுத்தமர் கைத்தலமேற், றுப்பார் பலவெம்படை யங்கருளித் துணையாக வுறும்படி சொற்றனனே. (கூஅ)

இத்தன்மை நிகழ்ந்தபி னூறுடனே யெட்டாகிய பூத விராசர் தமைச்,சுத்தன் பரிவோடு தெரிந்தருளித் தொல்பூத விராயிர வெள் ளமுட, னத்தம் பதினென்றுட னென்றுடையா னடல்சேர் படை யாவுறு மென்றருளி, மெத்துந் திறல்கொண் டிடுமோரிரதம் வேலோ னுறநல்கினன் வித்தகனே. (கூகூ)

இவ்வாறு கொடுத்து மதிச்சடைபோ னேகென்ன வலங்கொ டிறைஞ்சுதலுஞ், செவ்வா னுரமீதி லணைத்தருளிச் சீர்தங் கியநாரி திருக்கரமேன், மைவாழ் வுறுகண்ட னளித்தருள மாதன்பின் வயி ற்றி லணைத்திமையோ, ருய்வா னவுணப்படை முற்றுமழித் துறு வாயிவ ணென்ன வுரைத்தனளால். (கoo)

ஈதம்மை யிசைத்திட லுந்தொழுதே யிருவோரையு மன் புட னேவிடைகொண், டோதும் புகழ்வேல னகன்றுயர்தே ருற் றென் பதுபேரு மிலக்கர்களு,மேதந் தவிர்சாரத மன்னவரு மிமை யோரு மிராயிர வெள்ளமெனும், பூதங்களு மெங்கணு மங்கணு கிப் புடைசூழ வடைந்தன னம்புவிமேல். (கoக)

§ உருத்திரர்கள் பதினொருவராவார்:—மாதேவர், அரர், உருத்திரர், சங்கரர், நீலலோகிதர், ஈசானர், விசயர், வீமதேவர், பவோற்பவர், காபாலி, சௌமியர் என்பவர்களாம்.

* பதினொருபடைகளாவன:—இருப்புலக்கை, தவசம், வாள், வச்சிரம், அம்பு, அங்குசம், எறிமணி, கமலமலர், தண்டம், வில், மழு என்பவைகளாம்.

வேறு.

பாருலக மீதிலுமை பாலன்வரு போதிற்
றூரக னெனும்பெயர் தரித்ததொரு வெய்யோ
னேரரண மானகிர வுஞ்சகிரி கண்டார்
வீரமுறு வேலனயன் மேவிவரு விண்ணோர். (க0௨)

கண்டனர் வெருண்டனர் கலங்கின ரிடுக்கண்
கொண்டன ருளங்குலை குலைந்தனர் தளர்ந்தார்
திண்டிறல்கொள் வேலனிரு சேவடி வணங்கி
யண்டர்புகழ் நாரத னறைந்திது தூற்றான். (க0௩)

உற்றகிரி யீதுகிர வுஞ்சமிதி னேர்சார்
மற்றுமிக சற்றதொரு மாயநக ருடே
சுற்றவுணர் சேனையொடு சூரிளவ லாகும்
வெற்றிபுனை தாரகன் விருப்புட னிருப்பான். (க0௪)

வென்றியுற வின்றிவனை வென்றிடுவை யாயின்
வன்றிறல்கொள் சூரனை வதைப்பதெளி தென்னத்
துன்றுகதிர் வேலன்முனி சொன்னவை வினவிச்
சென்றிவன தாருயிர் சிதைத்திடுது மென்றான். (க0௫)

என்றுமி னடற்பெறு மெழிற்புயனை வேலோ
னன்றொடு தெரிந்தினைய நாகமதி னேர்சார்
வென்றியுள மாயநகர் மீதவுண ரோடும்
வன்றிறல்கொ டாரகன் வயத்தொடு வதிந்தான். (க0௬)

அம்புவி யழுந்தவரு மாயிரநல் வெள்ளத்
தும்பர்தொழு சாரத ருவர்க்கிறைவி னேருன்
றம்பியர்க ளோடுமிகு தானவர்க ளோடு
மொய்ம்பொடு செருப்புரிய முந்துபட றென்றான். ()

என்னவிது நன்றென விறைஞ்சிமுரு கேசன்
றன்னவிடை கொண்டினிய தம்பியர்க ளோடு
மின்னுகதிர் வேலனருள் வீரரத மேறி
மன்னுபடை யோடவுணன் மாயநக ருற்றான். (க0௮)

ஒற்றரிது சொற்றிட வுணர்ந்தவுணர் மன்னன்
செற்றமிக மூளவொரு தேரின்மிசை யேறித்
துற்றவனி கங்கள்புடை சுற்றவெதி ருற்று
னற்றமறு பூதரு மவர்க்கெதிர் புகுந்தார். (க0௯)

ஆதிக் குகனவ னழியப் பொருதிட லல்லா தெவரட வல்லா ரொன், றோதிக் குணநிசை வாய்தற் றனில்வள ருரமேவியபுய னுறு போதின், மேதிக் கணனொடு மாதிக் கதனிடை வீரத் தினகரன் வடதிக்கா, ரோதப் படைகிக ரனிகஞ் சுலவவி ருந்தா ரிருவர் தெரிந் தானே. (கரு)

பேரா விறலுறு வீரா திபனது பின்றெனன் றிசைவழி பெயர் போதிற், சூரா னவனது நகர்மேல் வெளிமிசை தோய்வோ னமர் புரி தொழில்வல்லோ, னோரா யிரமுக மீரா யிரமெனு மொண் கைக் கயமுக வசுரன்றான், பார விவனுயி ருண்பே னெனவெ திர் படவந் தனனிது பயில்கின்றான். (கசு)

வீறு மொருகிரி பறியா மிடலொடு விடவே வளர்புய மிசை பட்டே, நீறு யதுதச நாறு மலைவிட நிமலன் றிருவுரு நிலமேவி, வேறு யளவறு துகளா யினகதிர் மிகுவே லிறையவ னிளையோனு ட், பிறு மிளிரொளி வாள்கொண் டவனெதிர் சென்று னடுதிறல் குன்றுதான். (கஎ)

வாள்கொண் டிடுநெடு வாள்கொண் டவன்முக வண்கைத் திரளினை வலிமேவுந், தோள்கொண் டிடுமிறை தடியக் குகன் விடு தூதன் றனைபிரு தசநாறு, நீள்கொண் டிடுகர மேகொண் டடலுட னேசுற் றிடவவை நிலமீதே, வீள்கொண் டிடும்வகை வாள்கொண் டடலொடு வெட்டா வழிவுசெய் திட்டானல். (கஅ)

துன்றுங் கரநிரை தரைமேல் விழவமர் தோளான் முயறலு நீளாகத், தொன்றும் படியொரு சரண லவனை யுதைத்தே கடிதில் வதைத்தேமுற், பொன்னும் படிசம னுரமீ தூரமொடு புவியூ டுதை புரி புனிதன்போற், கொன்றுன் றியவிறல் மொய்ம்பன் மகிழ்வது கொண்டா னமரர்கள் கொண்டாட. (கசு)

வே று.

அன்னவனை யட்டபின ரிங்கரின் வாய்தலெலா மவுணர் சேனை, துன்னியதா தலினுலே வேற்றுருக்கொண் டேகுதலே துணிபாமென்றே, மன்னுமணு வுருவாகிக் கீழ்த்திசைக்கோ புரத் திருந்தூர் வளங்க ணோக்கி, மின்னுபுகழ் மகேந்திரமாஞ் சூருருட் போயினன்சீர் வீர வாகு. (உ0)

பங்கமுள கொடுஞ்சூர்க்கு முதன்மைந்த ஞனதொரு பானு கோபன், றுங்கமுள வக்கினிமா முகத்தோனே யிரணியனுந் துல ங்கு பேரோன், றங்கடல்வச் சிரவாகு மற்றுமு வாயிரவர் தமதின் னோக்கி,வெங்குணமந் திரிதரும கோபன்மனைச் சிகரமிசை மேவி னானல். (உக)

சாற்றியவிங் கெதுரிற்கக் கறையுறுவெஞ் சிறையினிடைச் சயந்த னென்போ, னேற்றமுள வமரரொடு மவுணர்புரி சிறைபதனு லிட ரின் மூழ்கி, யாற்றமெலிந் தானேயினங் தேத்தியயர்ந் திடவறிந்தங் கருணமீக் கொண்டு,சீற்றமுறு வேற்றடக்கைக் குமரனவன் கனவி னிடைச் சென்று னன்றே. (உஉ)

சிந்தைமகிழ் வோடுதொழு தையநீ யாரெனவே திகழு மீசன், றந்தருளு மைந்தனியாந் தன்குறைநின் குறைபுகன்றுன் ருதை யான, விந்திரன்வந் தெமைவேண்டத் தாரகனைக் கதிர்வேல்கொண் டெறிந்து சாடிச், செந்திநகர் வந்ததனி லிருந்தனமிந் திரனயன்மா றேவர் சூழ. (உ௩)

வீரவா கென்னுமொரு தூதுவனை யிங்குவர விடுத்து வீரச், சூரனு மவுணன்மக னொருவனொடு பலவவுணர் தொலையச் சாடிச், சீருலா நகரழித்து வரப்புரிந்து நாளையிவண் சேர்ந்து சூர்முற், போருலா மவுனரொலா மைந்திருவை கலின்மாளப் புரிது மாதோ.

பின்புனது திருத்தருது மென்னவவன் றனக்குனாத்துப் பெயர் ந்து மோகத், துன்பினுட னுறுமமரர் கனவினிடை மனமகிழத் தோன்றித் தோன்றி, யன்பினொடு சயந்தனுக்குப் புகன்றதுபோற் புகன்றுபுகன் றகன்று போக, வின்பமுறு கனவினைவிட் டெழுந் துதுயர் பொருந்தாம லிருந்தா ரன்றே. (உ௫)

வே று.

கொன்பாவு திறல்கொண்ட குமரேச னமரர்
முன்பாக வந்தேகு முறையிங் குனைத்தா
மின்பான புகழ்கொண்ட வெழில்வீர வாகு
பொன்பாவு நகருடு புரிசெய்கை சொல்வாம். (உ௬)

தண்டாத விறல்கொண்டு தருமங்கொல் கொடியோன்
விண்டாவு சிகரத்தின் மிசைநின் றிழிந்தே
பெண்டான வர்கள்சூழ விமையோர்கள் சிறைசேர்
கண்டார்கள் பயமேவு களமீ தடைந்தான். (உ௭)

அங்காரு மசுரேச ரதிமோக மாகச்
சிங்கார வேண்மந் திரத்தைச் செபித்தே
மங்காத வமரேசன் மகனோடு மிமையோர்
தங்கா விருந்திட்ட தலமுற் றிருந்தான். (உ௮)

தண்டாத விறல்கொண்ட தலைவன்றன் மேனி
கண்டான் விருப்போடு கரமுந்து சிரமேற்
கொண்டான் வரத்தென்கொல் கூறென் றுனைத்தா
னண்டார்கள் சிறையூ டமுழ்ந்துஞ் சயந்தன். (உ௯)

கால்கொண்ட விசைகொண்ட கழல்வீர வாகு
வேல்கொண்ட முருகேசன் விடுதூத னிரிப்
பால்கொண்ட சிறைவிண்டு பதமெய்த வேவெங்
கோல்கொண்ட சூர்முன்பு கூறற் கடைந்தேன். (௩0)

இப்பான்மை கேளா னிடும்போ ளிருக்கிற்
றப்பாம லிவண்வந்து தசநாள்க டம்மிற்
றுப்பாரு மவுணர்த் தொலைத்தும் பதத்தே
மெய்ப்பாக வைப்பான் விறற்கொண்ட வேலோன். (௩௧)

வேறு.

என்று பற்பல நன்று புகன்றிட வேறி லாத சயந்தனு மண்டருந், துன்று கைக்கம லங்கள் குவித்துநின் றூய செய்கை தொடங்குறி யைய்வென், றென்று மன்பொ டுரைத்திட வங்கண்விட் டொல்லை யேகியோ ராயிர யோசனைப், பொன்றி கழ்ந்திடு சூரவை மண்டபம் போகி முன்னுள பொன்னுரு வெய்தினன். (௩௨)

எய்தி யாயிர யோசனை நீளமு மெள்ளி டம்புறா வெள்ளிடையின்றியே, வெய்ய தானவர் சூழ்தர வீறிலா வீறு லாவு வளங்கள் விளங்குறத், துய்ய மாலை யிலங்கிய மார்பகச் சூர்ம டங்கல் சுமந்திடு மாதனச், சைய மீதுறல் கண்டன னண்டர்சூழ் சண்மு கற்கினி தாகிய தம்பியே. (௩௩)

கண்டு திண்டிறல் கொண்டிடு தோளுடைக் காளை சூரன் கடுந்திறற் சியமேற், கொண்ட வாதன மீதி லிருந்திடக் கொற்ற வேலவனெற்றென வோதியான், மண்ட லத்திடை நின்றிட நீதெனு வள்ளறன்னை மனக்க ணினைத்தலு, மொண்டி றற்குகன் மண்டரு ளாலரோ வோர ரித்தவி சவ்விடை யுற்றதே. (௩௪)

வந்து மன்னவன் முன்ன ரிருந்திட வாகை கொண்டிடு வாகுமகிழ்ச்சியோ, டெந்தை யாகிய கந்த னளித்ததீ தென்று சென்றதினெய்திய காலையின், வெந்தி றற்பெறு சூரிது கண்டுநீள் வித்தை செய்பவ னென்று வெகுண்டுரைத், தூந்து சீருள வீரனை யாரைநீ யோது வாயென வோதுதன் மேயினன். (௩௫)

தேவர் தங்க ளிடுக்க ணகற்றவே செர்தின்மேவி யிருந்திடு கந்தவே, ளோவி லாவரு டன்னுட னென்னையே யுன்னை மேவி யுரங்கிள ரண்டனைப், பாவ மார்சிறை விட்டிட வெண்ணுதி பாரினீதி பயின்றர சாளுதி, யாவ தீது மறுத்திடின் மாள்வையென் றன்பினோடு மறைந்திட வேவினன். (௩௬)

என்று கூற மிகுந்த சினத்தினே டிறில் சூர னெனும்பெயர் பெற்றுளோன், மன்ற வாணகை யின்னு முளைத்திடா மைந்தனேவிங் கெனக்கிது செப்புவா, னன்று நன்றிது பேதைய னுதலா

னச்சு ரூமொழி ஈச்சிவர் தோதிஞ, யின்று நின்னுயிர் தந்தன னே குதி யென்றி யம்பலு மேந்த லியம்புவான். (௩௭)

ஆதி யாயிப் பரம்பர னாகிய வாறு மாமுக வண்ணலேப் பாலனென், றோதி னுபவன் மேன்மைகள் கேளௌ வொப்பின் மேன்மை யுணாத்திட வெப்பசூர், காதி யங்கவன் மேன்மைகள் பின்னருங் கட்டு ளாக்குதி யென்றய றுன்றிய, தாது லாவு தொடைப்புய வாயி ரந் தான வர்க்கிது சாற்றுதன் மேயினன். (௩௮)

ஓற்ற னாகி யடைந்த விவன்றனை யூறு செய்திடல் வீறல வாத லாற், பற்று மின்சிறை யூடுப டுத்துமின் னென்று பாவி பகர்ந்திட வாயிரந், துற்ற தானவர் பற்றிடு வானயல் சூழ வீரன் றுலங்கொரு கையினு, லுற்ற வொன்னலர் சென்னி பிடித்துமன் மீத டித்திட வொல்லே யிறந்தனர். (௩௯)

எந்தை வேலுக் கினியிளா யாகுதி யீது திண்ண மிருந்திடு போவனென், றுந்து சீருள வீர னகன்றிட வுற்ற வாதன மொல்லே யெழுந்துநீ, ளந்த ரத்தின் மறைந்து படர்ந்ததா லந்த வேலே யருந் திறல் கொண்டசூர், வெந்தி றற்புனே யுஞ்சத மாமுக வீர னேடு விளம்புதன் மேயினன். (௪0)

ஆதி மைந்தன் விடுத்திடு தூதனிங் காயி ரத்தனா யட்டகல் கின்றனன், காது மன்னவ னுக்கெதிர் கிட்டிநீ கட்டி வாவென்று கையனிசைத்தலு, நீதி கொன்ற விலக்கர்க ளோடுபோய் நில்லு நில்லென வொல்லே யியம்பியே, போதும் வீரன் வெரிந்புடை கிட் டலும் பொங்கு கோபம் புரிந்து திரும்பினன். (௪௧)

செற்ற மோடு திரும்பிய வீரனேர் சென்றி லக்கர் திருந்து கரங்களிற், பற்று பல்படை விட்டிட மொய்ம்பன்மேற் பட்டு நுண்டுகள் பட்டன வண்ணலங், குற்ற சூளிகை யொன்று பறித்துநே ரொன்ன லார்மிசை யுந்த விளாந்துபோ, யற்ற மற்ற விலக்கர் கலக்கமோ டாவி விட்டிட வட்டது கெட்டதே. (௪௨)

நூறு கொண்ட பெருந்தலே கொண்டவ ஞபு ரத்திடை வந்த வர் மைந்தருள், வீறு கொண்டவன் மீமிசை பல்படை வீச வீரன் விளங்கொர் சிகரியை, மாறு கொண்டு பறித்து விடுத்திட வல்லே யாயிர வாளிக ளேவியே, நீறு கண்டொரு நூறு சரங்கடா னேரி லான்மிசை நிசனெய் தானரோ. (௪௩)

விட்ட வாளிகள் பட்டிட மொய்ம்பினன் வெய்பன் முன்னர் விளாந்து படர்ந்துகைப், பட்ட வில்லேப் பறித்து முறித்திடப் பாவி நூறு கரங்கொடு பற்றலு, மட்டில் வீரப் புயங்கொடு தள்ளியே மார்ப கத்தை மிதித்தொரு தாளினு, லொட்ட லன்றனி நூறு சிரத் தையு மொல்லே தள்ளி யுயிர்கவர்ந் தானரோ. (௪௪)

வேறு.

அட்டது பின்ன ரரும்புகழ் வீரம்
பட்ட புயங்கள் படைத்துள வள்ள
றுட்டர் வெருண்டு தொலைந்திட வங்கோர்
மெட்டுரு வங்கொடு நின்றன னன்றே. (சரு)

தேவர் வணங்கு திறற்புய வீரன்
பூவடி வங்கொடு பூமிசை நிற்ப
மேவிய வைம்பது வெள்ளம தாகுங்
காவல ரன்னது கண்டு வெகுண்டார். (சகூ)

வந்து விரைந்து வளைந்து சினந்தே
பந்தி பொருந்து படைக்கல முந்தக்
கந்தன் விடுத்திடு காளை கறுத்தே
யிந்த வியற்கை யியற்றுத லுற்றான். (சஎ)

அடித்து முதைத்து மரற்ற வெறிந்தும்
பிடித்துட லங்கள் பிசைந்து பிழிந்தும்
வெடிக்குர லைம்பது வெள்ளமும் விள்ள
முடித்தனன் மொய்ம்புள மொய்ம்புள வீரன். (சஅ)

அட்ட வதற்பின ரங்கொரு † வேரந்
தொட்டறம் விட்டிடு சூரவை மன்றம்
பட்டிட விட்டுழி பட்டது கண்ணு
லெட்டரு மன்ற மிடிந்தது மன்னோ. (சகூ)

தியவர் * பண்ணை செறிந்திடு மன்ற
மாய்வது கண்டு வயம்பெறு சூர
னாயிர மொய்ம்புள வாயிரர் தம்மைத்
தூயவ னோடமர் துன்ற விடுத்தான். (ருo)

உந்திடு மாயிர வொட்டலர் கிட்ட
வந்திடு முன்னர் வயம்புனை வாகு
சுந்தர மேவிய சூரன தூரை
யந்தர மாக வழித்திட லுற்றான். (ருக)

மண்டப கோபுரம் வாரி யெறிந்தும்
விண்டு மதிற்றிரள் வீழ வுதைத்தும்
வண்டுறு தண்டலை வல்லை பிடுங்கி
யெண்டிசை யின்கணு மேக வெறிந்தும். (ருஉ)

---

† வேரம்—செய்குன்று. * பண்ணை—கூட்டம்.

அங்கிவை யாதி யனேக விதத்தாற்
பொங்கு வளங்கொள் புரத்தை யழித்தே
துங்க விறற்பெறு தூயவ னிற்ப
வெங்குண வாயிர வீரர் தெரிந்தார். (ருங)

நீங்கினர் கண்டு சினந்து வளைந்தே
பாங்குறு மெண்ணில் படைக்கல முய்ப்ப
வோங்கு மராமர மொன்று பறித்தே
யாங்கவர் தம்மை யடித்து முடித்தான். (ருச)

பாதக ராயிரர் பட்டது கண்டே
தூதுவ ரோடுபு சூரனொ டோதக்
காதியி ருப்பவோர் காதல னான
மாதிறல் வச்சிர வாகு வெழுந்தான். (ருரு)

பற்றுறு தந்தை பதங்கள் பணிந்தே
யொற்றனை வென்றிவ ணுற்றிடு கின்றேன்
மற்றெனை யேவுதி வல்லையி லென்ன
வற்றமில் சூரன் விடுத்தன னன்றே. (ருசு)

தந்தை யிருந்திடு சங்க மகன்றே
யுந்திய தன்மனை யூடு புகுந்தே
யந்த மிலாத வடற்படை கொண்ட
சிந்தை மகிழ்ந்தொரு தேர்மிசை யுற்றான். (ருஎ)

வேறு.

தேனாஞ் ஞூறு வெள்ளம தாகுந் திறல்யானை
போனாஞ் ஞூறு வெள்ளம தாகு முயர்மாக்க
ளீனாஞ் ஞூறு வெள்ளம தாகு மெழினன்கு
பேனாஞ் ஞூறு வெள்ளம தாகும் பிறசேனை. (ருஅ)

இவ்வா றுகுஞ் சேனைக ளோடங் கிருமைப்போர்
செய்வா னுன்னித் தன்னிக ராம்வச் சிரவாகு
மைவாழ் கண்டத் தன்டர் பிரானார் மகனேவுஞ்
செவ்வான் மேனித் தூயவ னேரோ சென்றானால். (ருகூ)

செற்றா ராகுந் தானவர் ஞானத் திறலோனைச்
சுற்றா நின்று படைக்கல முந்தத் துகளில்லோன்
குற்றா நின்று முதைத்து மெறிந்துங் கோபத்தோ
டெற்றா நின்றுங் கொன்றன னம்மா விறைதன்னில். (சூ0)

வேறு.

வேறு மனேக விதத்தாற்
சீறி யெதிர்ந்திடு சேனே
யூறு பொருந்திட வூழிச்
சூறை புரிந்து தொலைத்தான். (௬௧)

அங்க ணிறந்தவ ரல்லால்
வெங்கண மாகிய வெய்யோர்
தங்கண் மனங்க டளர்ந்தே
யெங்கணு மாகி யிரிந்தார். (௬௨)

மாதிறல் வச்சிர வாகு
வீது தெரிந்தட லேந்தன்
மீதுற வாயிர வெங்கோ
லூதை யெனச்செல வுய்த்தான். (௬௩)

வந்த சரங்களே வல்லே
யுந்து கரங்கொ டொடித்தே
சிந்தின னின்றுழி தீயோ
னிந்த வியற்கை யியற்றும். (௬௪)

வெம்பதி னுயிர வெய்ய
வம்புவி டக்குக னன்பார்
தம்பி யெழுக்கொடு தாக்கி
மொய்ம்பொடு சிந்த முறித்தான். (௬௫)

வேறு.

முறித்தபி னேயிரு மெய்ச்சிர வச்சிர மொய்ம்புள்ளோன்
மறித்து மரும்பதி னுயிர வாளி மனத்துடே
கறுத்து விடுத்து மிகுத்த வெழுத்துகள் கஸ்டேபின்
றெறித்தன னேந்தெனு மாயிர வாளிகள் செய்யோன்மேல். ()

பட்டுழி யோரிறை ரொந்து விரைந்து படர்ந்தன்னு
னெட்டிர தத்தை யுதைத்திட வேறொரு நீடேர்மே
லொட்டல னுற்றுழி யவ்விர தத்தையு மொண்கையா
லெட்டி யெடுத்து விசும்பிடை போக வெறிந்தானல். (௬௭)

தேரொடு வானி லிலக்க மியோசனே சென்றேபின்
பாரில் விழுந்தொளிர் வாளது கொண்டு பகைத்தோர்தம்
மாருயி ருண்டிடு வீரனே நேர வவன்றுனுஞ்
சீரிய வாள்கொ டெறிந்து சிரங்கள் சிதைத்தானல். (௬௮)

அங்கவ னுருயிர் கொன்றவ னின்றுழி யாசாப
வெங்கதி ரோனு மறைந்தனன் மாலையு மேவிற்றாற்
சங்கரன் மாமக னப்பதி யெல்லை தணந்தேயின்
மங்குல் விசும்பு வழிக்கொ டிலங்கையில் வந்தானே. (௬௯)

அண்டர் வெருண்டிடு மாளி முகத்தவ னப்போதிற்
கண்டன னின்றவ ருன்மக னுவி கறுத்தேமுன்
னுண்டவ னிங்கிவ னுமென வோத வுருத்தேகி
மண்டு திறற்பெறு சேனைக ளோடும் வளைந்தானால். (௭௦)

வீரரில் வீரன் வெகுண்டுறை வாளுரு விச்சென்றே
யாரவு னப்படை முற்று முலாவி யடும்போதிற்
பாரமு ருயிர வாளி முகங்கள் படைத்துள்ளா
னேருற வேகி யடித்தன னுயிர நீள்கையால். (௭௧)

அடித்த கரங்களை யங்கொரு பாணிகொ டப்போதிற்
பிடித்தவ னுந்து கரங்கள் சிரங்கள் பெயர்ந்தோடித்
துடித்திட வாள்கொடு வீசி யடற்புனை தோள்வீரன்
வடித்தனி வேல னமர்ந்திடு செந்திலில் வந்தானே. (௭௨)

கந்த னிருந்திடு கோயில் புகுந்து களிப்போடு
மந்தமி லன்பொடு முன்பு வணங்கி யணித்தாய்பின்
றுந்திய சூரன தெண்ணமு மேனைய வுங்கூறி
யிந்திர னோடு சயந்த னிருப்பு மிசைத்துற்றான். (௭௩)

மற்றிது நின்றிட வச்சிர வாகு மடிந்தானென்
றொற்றர்கள் சொற்றுழி வெற்றிகொள் சூரோன் வுற்றுள்ளோ [ன்
சற்றல வீறிடர் கொண்டொரு மந்திரி தானேது
மற்றமில் புந்தியி னுலிடர் சிந்தி யமர்ந்தானால். (௭௪)

அங்கது போதினி லப்புற வண்ட மதிற்சேருஞ்
செங்கம லத்தப னைக்கொணர் வித்தடல் சேர்சூரன்
மங்கிய தன்பதி முன்பி னிலங்க வகுப்பித்தே
துங்க விரிஞ்சன கன்றிட வன்பொடு சொற்றானால். (௭௫)

அன்னது காலையின் முன்னர் விடுத்த வடற்றூதர்
மன்னிய செந்திலில் வந்தரன் மைந்தன் மருங்குள்ள
கொன்னுறு சேனை வினவி யகன்று கொடுஞ்சூரன்
றன்னை யடைந்து பதங்கள் பணிந்திதனைச்சொல்வார். (௭௬)

அற்றம தற்றவி ராயிர வெள்ள மடற்பூதர்
மற்றவர் மன்னவர் நூறுட னெண்மர் வளைத்திண்டோட்
கொற்ற விலக்கரொ டொன்பது வீரர் குழாத்தோடும்
வெற்றி தருங்கதிர் வேலவன் ஞால மிசைச்சேர்ந்தான். (௭௭)

அங்குறு தாரக னென்கிர வுஞ்ச வடற்குன்ற
மங்குற வெஃக மெறிந்துயர் செந்திலில் வந்தோரொற்
றிங்கு விடுப்ப விலங்கை யழித்திவ ணெய்துற்றே
பங்கமில் யாளி முகன்றனை கொண்டு படர்ந்தானால். (எஅ)

தெண்டிரை வாவிநம் மாநக ருடு திறற்கந்தன்
மண்ட னிகத்தொடு வந்தமர் செய்ய மனந்தன்னிற்
கொண்டன னின்னது மெய்யென வெய்ய கொடுஞ்சூர
னெண்டிறல் சேர்தம ராக்கொளர் வித்துரை செய்கின்றான்.

வேறு.

வானோர் தமைச்சிறையில் வைத்தசெயல் வானோ
ரானோர் தமக்கிறைவ னாகியுட னேதக்
கோனோர் விறற்பெறு குமாரனை யளித்தெம்
மேனோவு செய்திட விடுத்தருளி னானேல். (அ௦)

இன்பா ரரன்சுதனி ராயிரவெள் ளஞ்சே
ரன்பான பூதரு மலக்கணி லிலக்கத்
தொன்பா னெனப்படு முரங்கொளினை யோருந்
தன்பால் வரக்கடிது தாரணியில் வந்தான். (அக)

வீரான தாரகனை வெற்பொடு தடிந்தே
மாரூத செந்திநகர் வந்தது லிருந்தே
யாரூர் முடிப்பா ரளித்தகுக னம்பா
லூரான தற்றிடுமோ ரொற்றனை விடுத்தான். (அஉ)

அன்னானி லங்கையை யழித்திவ ணடைந்தென்
முன்னா விருந்தெனை முனிந்தே யிகழ்ந்தே
கொன்னாரு மென்பதி குலைத்தே யிளஞ்சேய்
தன்னாவி கொண்டுறு சபத்தினொடு சென்றான். (அங)

ஈந்தம் பெருப்பதியி னூளபர னல்கு
மைந்தன் செருப்புரிய வந்திடுவ னென்றே
முந்துந்து தூதுவர் மொழிந்தனர்க ளென்னா
வுந்துஞ் செருச்செய வுசாவின னிசாவில். (அச)

அப்போது பற்பல ரனேகவித மோதக்
கைப்போ தமைத்தரி கலந்த தவிசின்கண்
டெப்போ டிருந்ததொரு சூரன்முக நேரே
மெய்ப்போடு சிங்கமுக வீரனிது சொல்வான். (அரு)

விளைத்தார் மிடைந்திடு வியன்புய வமைச்ச
ரிளைத்தாடல் செய்திடு மிலங்கனிக மன்னர்
* வளைத்தாசின் மைந்தர்க டமக்கியலும் வன்மை
யுளைத்தாரோர் புந்தியு முளைத்தில ருனக்கே. (அசா)

கொன்னார் புகழ்க்குலவு கொற்றவர் செவிக்கே
மின்னு ரமுற்கணை விடுப்பது கடுப்ப
வென்னாளு நன்னிலைமை யென்னுமது தன்னைச்
சொன்னா ரமைச்சர்க ளெனும்பெயர்கொ டேயோர். (அஎ)

வாலுற்ற தண் § புனல் வயங்கிய பயம்பின்
பாலுற்று லாமயிலை பற்றுமிகு முண்டி
போலுற்ற நுண்பொருள் புரிந்துபடு மாபோன்
மேலுற் றிடுஞ்செயல் வினவுகிலை யந்தோ. (அஅ)

நந்தா வளங்குலவு நாகவுல கோரை
முந்தான காலமதின் மொய்ம்புட னலைத்தோர்
சிந்தா குலத்திறைடு சிந்தினர்க ளல்லா
துய்ந்தா ரொருத்தரை யுரைப்பவிவ ணுண்டோ. (அகூ)

மீனஞ் சுமந்துபுகழ் விண்ணவர்க ளெல்லா
மீனம் பொருந்திட வியற்றினை மகத்தின்
கோனந்தண் மாநகர் குலைந்திட முனிந்தா
யூனந் தருஞ்சிறையி லும்பர்களை வைத்தாய். (கூ0)

நந்தா வளங்குலவு நாகர்சிறை யின்னு
மந்தோ விடுத்திலை யதற்குவடி வேலோன்
வந்தா னமர்ச்செய வரங்கடரு நாளின்
முந்தா னுயர்த்தவன் மொழிந்தது மறந்தாய். (கூக)

இக்கால நூறிறைடு மெட்டுகெ மிருந்தெம்
மெய்க்காசில் சத்தியில் விளிந்திடுதி ரென்று
னக்கால முற்றதிவ ணப்படியி லன்றோ
மிக்கான தாரகனை வென்றதுயர் வேலே. (கூஉ)

மின்னுளை வேதியரை மெய்க்குரவர் தம்மைப்
பொன்னு டரைப்பொறை பொருந்து முனிவோரை
மன்னுசி ருர்தமை வருத்தியவ ரன்றே
வென்னாளும் வெந்நரகி லெய்தியுழல் வாரே. (கூ௩)

---

* வளைத்த என்பது வலித்தல் விகாரம்.

§ புனல் வயங்கிய பயம்பு - தடாகம்.

ஈண்டாகை யான்முருக னேடம ரியற்ற
வேண்டாவின் னோர்கள்சிறை விட்டிடுவை யாயின்
மீண்டா சமுங்கயிலை வெற்பினிடை நாகம்
பூண்டான் மகன்கடிது போயிடுவ னன்றே. (௬௪)

இன்பான விப்படி யியற்றுகிலை யாயிற்
கொன்பாவு மம்பிகை குமாரனமை யெல்லாந்
துன்பாக வேல்கொடு தொலைத்திடுவ னென்றே
மின்பாவு சிங்கமுக வீரனுரை செய்தான். (௬௫)

என்றீது சிங்கமுக னின்புற விசைப்ப
நன்றீது நன்றென நகைத்தானணி சீறித்
தன்றீதி லாததொரு தம்பிமுக நேரே
யொன்றீது சூர்முத லுரைத்திடுத லுற்றான். (௬௬)

வேறு.

இந்திரன் றனக்கும் பூதர்க டமக்கு மிளஞ்சிறு பாலனை டிமையவர் தமக்கு,முந்துநீ நெஞ்சி லஞ்சினை போலு முமைமொரு பாகனு மொப்பிலாக் கடவு,ணர்தனிச் சத்தி வெல்லுமென் றதுவு நான்முடி விழைத்தது நான்முன்பு கேளேன், புந்தியிற் புதிதொன் றுன்னியே யுரைத்தாய் பொய்மொழி சொல்லவும் வல்லையா யினை யால். (௬௭)

அப்படி யுரைத்தா னேனுமக் கடவு ளளித்திடு வரமா ரழித்திட வல்லார், மெய்ப்புறு சத்தி யழித்திடு மென்னில் வேறதோ சத்தியும் விமலனு மதனு, லிப்பெரு வரங்கள் கொடுத்தவ னழியா னென்னிணு ளமரரை யான்சிறை செயக்கண், டொப்பின்மான் முதலோ ரஞ்சியே யிருந்தா ரொருசிறு பாலனோ வொழித்திட வல்லான். (௬௮)

என்னவே குகனைப் பாலனென் றெண்ணி யிகழ்ந்துதன் னுயிரை யிழந்திடு கின்ற,முன்னவ னிசைப்பப் பின்னவன் பின்னு முனியலை யொன்றின மொழிவனென் றுரைப்பான், பொன்னுல கமரர் தமைச்சிறை படுத்திப் புவியினி னீதி புரிந்திடா வதனைத், தன்னிக ரான சங்கர னறிந்துன் றன்னைவந் தடுவான் றன்னுள நினைந்தான். (௬௯)

இன்னதீர் வரங்கள் கொடுத்தயா மழிப்ப தியல்பல வாதலா லிருமையபே படைத்து, மன்னியே யிருந்த சூரனைப் பிறர்க்கும் வதைப்பரி தெனவே மனத்திடை நினைந்து, பொன்னுறு தனதா முருவமா மொருசீர்ப் புதல்வனாற் புகமுறப் பொருக்கென முடிக்கத், தன்னுதல் விழியா லாறுமா முகத்தோர் தனிப்பெருங் குமர னைத் தந்தனன் பரனே. (௧௦௦)

அற்றமி லுருவ மாகுவ னருவ மாகுவ னருவுரு வகன்ற, பெற்றிய மாவன் மறைகளுந் தெரியாப் பெரியவன் பெரியர்க்கும் பெரியான், முற்றிடும் பொருள்க ளனைத்[illegible] தனிப்பெருந் தோன்றன், மற்றவன் [illegible] பாலனென் றறைந்[illegible]ல்லையிங் கவனுன் மாளுதி மாதோ. (கoக)

ஆதலா னீயு நின்பெருங் கிளை[illegible] மனபுறு வளத்தோ டமர்ந்திட வேண்டிற், றீதிலா வமரர் சிறை[illegible] விடுத்தல் [illegible]யென வெய்பவன் சிந்தைமேற் சினமுற், றாதை[illegible] கியாற் சூடின் டியர்சர வணத்தலே யுண்டபா லனையோ, சோதியென் றுணைத்தாய் பேதையென் றிகழ்ந்து சொல்லினுன் வெவ்வுணாச் சூரனு மவுணன் (கoஉ)

முற்றுணர் சிங்க முகத்தினு னன்மை மொழிந்ததற் கிழிந்தோன் முனிந்துரைத் திடவுஞ், சற்றுநம் மொழியுட் கொண்டில னந்தோ தலையினில் விதியையார் தவிர்த்திட வல்லார், மற்றிவன் மடித றிண்ணமா மதன்முன் மடிதலே கடனென மனத்திடை நினைத்துச், சிற்றறி வுடையேன் சொற்றன பொறுத்தி சேரலார் தமையடச் செல்குவ னென்றுன். (கoங)

என்றவன் றிறல்கொண் மடங்கன்மா முகத்தோ னின்புற விசைப்ப விருந்திறற் சூர, னன்றுநன் றெனவே மகிழ்ந்தவன் றன்னை நயமொடு புல்லிப் புகழ்ந்துநின் னகர்ப்போ, யொன்றுதி குகனீண் டடைந்திடில் விளிப்ப னெல்லைமே வுதியென் றுவப்புடன் விடுப்பச், சென்றுதன் புரம்புக் கமர்ந்தன னெவருஞ் செலவுணாத் துறையுட் சேர்ந்துசூ ரிருந்தான். (கoச)

இன்னவா றவுணர் தொழுங்கழற் கொடுஞ்சூ ரெழிலிவந் தெழிலினே டினிதுகண் படுக்கும், பொன்னுலாம் புரிசை மகேந்திர புரியிற் புரிந்துவீற் றிருந்தது புகன்றன மன்னே, மன்னுமா லயன் முன் னிமையவர் வணங்க மடங்கலந் தவிசின்மேல் வனசமாளிகைமே, லன்னம்வாழ் கழனிச் செந்தின்மா நகர்வா றுமுகத் திறைசெய லறிவுற வறைவாம். (கoரு)

மூன்றுவது மகேந்திரகாண்டம் - முற்றிற்று.

ஆகச் செய்யுள் - சருங.

வேலுமயிலுந்துணை.

---

கoக-வது செய்யுளில், முதன்மூன்றடிகளிலும் ஒவ்வொரு சீர்கள் பிரதிகடோறும் குறைந்தே யிருக்கின்றன.

சிவசண்முகன்றுணை.

கந்தபுராணச்சுருக்கம்.

ஆறன்காவது

# யுத்தகாண்டம்.

## முதனாட்பானுகோபன் யுத்தம்.

மின்னிகர் சடிலத் தவிர்மதி முடித்த வித்தகன் மத்தக விழி விழித் தாங்குப், பொன்னுறு மருணத் தடமலர் மிடைந்த பொதும்பர்சூ ழுதயவான் பொருப்பின தும்பர், துன்னுசெங் கிரணத் திரவிவந் தெழவுந் தோகையோர் மருங்குடைத் தோன்றன்முன் றேன்று,கன்னல்விற் றடக்கைக் கடவுண்மாண் டதுபோற் கதுமென வழிந்தது காரிருட் கங்குல். (க)

இவ்வகை யுலகிற் றுணங்கற லகல விரவியா மொருவன்வந் திருவிசும் பெழவு,மொய்வள ரவுணப் பேரிருண் மடிய முருகனும் பரிதியு மானெனடு மெழுந்து, செவ்வொளிக் கனகத் தேரின்மேற் புகுந்து சேனையோர் வானுளோர் செறிந்துசூழ்ந் தேத்தப், பௌவநீர் கடந்து சூரன்மூ தூரிற் பாங்குறு வடதிசைப் பாலடைந் தனனே. (உ)

அங்கணவ் வமைபத் திமைபவர் புனைவ னறுமா முகமுடையண்ணறன் னருளாற், கொங்கல ரிருங்கா மருங்குசூ ழேமகூடமாம் பெயருடைக் கோநகர் குயிற்றச், சங்கரன் மதலை கொடிநெடுந் தடந்தேர் தனைத்துசிர் மந்திரத் தணைந்தது தன்னிற், பொங்கெழின் மடங்கற் சேகரத் திடையே பொருந்திய வணைமேற் பொருந்திவீற் றிருந்தான். (௩)

வேறு.

வீறுகொண்ட தானையோடு மேன்மைகொண்ட வேலவ
னிறில்பா சறைத்தலத்தி லிந்தவா றிருப்பவீ
றுறிலாத சூரன்முன்ன ருற்றுவா ரதன்சொலச்
சீறியின்ன தொற்றரோடு செற்றமோடு சொற்றனன். (ச)

வாரிமன் னவற்பிடித்து வாருமென்ன வேகியே
கோரமோடு பற்றிமுற் கொணர்ந்திடச் சினந்துநீ
வீரமோடு மாறுகொண்டு வீறுகொண்ட தெவ்வரைச்
சேரவிங்கு விட்டதென்னை செப்புகென்று செப்பினன். (ரு)

அந்தவேலை வேலை மன்ன னமரரோடு குமரவே
ளூர்துவானி னேகினு னுயர்ந்தபூத ரெங்கணே
வந்திடக் கலங்கினேன் மலங்கினேன் வருந்தினேன்
பந்திகொண்ட பூதர்தம் பாட்டினுக் கமைந்திலேன். (௬)

ஏழையென் றடுப்பதெங்ங னென்றுகூறி நின்றிடத்
தாழ்விலாத வொற்றர்வந்து சண்முகக் குமாரவேள்
வாழூரம் பெரும்பதிக்கு வடதிசைக்க ணெய்தினன்
சூழ்பதாதி யோடுமென்று சொல்லவீது சொல்லினன். (எ)

இரவியைத் தளைந்துளானை யிங்கழைத்தி ரென்னலும்
பரவிபேகி யொற்றர்சொற்ற பானுகோப னைத்தரச்
சிரமொரார்தன் மைந்தனோடு சேனையோரை வென்றுநீ
விரைவிலிங்கு வருதியென்று விடைகொடுப்ப வேகினன். ()

ஆங்குதன் மனைக்கணுற் றடற்படைக் கலங்கள்கொண்
டேங்குறாத தானைவெள்ள மிருபதான வாயிரம்
பாங்கினோடு பாங்கினிற் பரந்திரைந்து சூழவே
தீங்கிலாத விசயனாதி யனிகமன்னர் சேரவே. (௯)

கந்துகங்கண் மூப்பதான வாயிரங் கலந்ததோர்
சுந்தரஞ் செறிந்திலங்கு துய்யவைய மேறியே
வெந்திறற் பெருஞ்சமர்க்கு மேவுகின்ற வாறுகண்
டுந்துரா ரதன்குகன்க ணெல்லைவந்து சொல்லினன். (௧௦)

எந்தையான கந்தவே ளிலங்குவீர வாகுவாஞ்
சுந்தரன் றனைத்தெரிந்து சூரனிவ் விடத்தியாம்
வந்தவா றுணர்ந்துதன் மகன்றனைப் பதாதியோ
டிந்தவேலை நம்மொடே செருத்தொடங்க வேவினன். (௧௧)

சேனையான துன்றவின்று சென்றுவென்றி யொன்றிநீ
யூனமின்றி வருதியென் றுவப்பினோ டுரைத்தலு
மானனங்க ளாறுகொண்ட வண்ணலைத் தணைந்துபோய்த்
தூநலங்கொள் படைகள்கொண்டு துய்யவைய மேறினன். ()

சுந்தரங்கொ ளெண்மருந் துலக்கமா மிலக்கரும்
வெந்திறற்கொள் பத்துநூறு வெள்ளமான பூதருந்
தந்திரங்கொள் சுப்பிராதி தானைமன்ன ருங்குழீஇ
வந்துசூழ வேகினன் மகிழ்ச்சிவீர வாகுவே. (௧௩)

தலைமைகொண்ட பாசறைத் தலத்தினைத் தணர்துபோய்
நிலைமைகொண்ட சூரனூரி னின்மதிற் புறத்துறத்
தொலைவில்பூத ருஞ்சினங்கொள் சூரன்மைந்த னனிகமும்
பலபடைக்க லஞ்சொரிந் தெதிர்ந்துபோர் பயின்றவே. (கச)

தெண்டிசைக்கு நேரெனத் திரண்டிரண்டு சேனையு
மண்டியோதை செய்துநின் றடுஞ்செருப் புரிந்திடச்
சண்டமுற்ற வவுணருஞ் சலந்தரித்த பூதரு
மண்டுசோரி வாரிசோர மட்டிலார்கள் பட்டனர். (கரு)

மேனலங்கொள் பூதர்தாம் வெகுண்டு சென்று மேவலா
ரானையோடு மானைதன்னை யாளியோடு மாளினைச்
சேனையான தேரினோடு தேரைவாரி மோதலு
மூனமுற்ற வவுணர்தா முடைந்துவாடி யோடினர். (கசா)

அற்றவேலை யவுணர்தம்மி லனலி யென்னு மன்னவன்
செற்றமோடு வந்தெதிர்ந்து தீதிலாத பூதர்மேல்
வெற்றிகொண்ட கணைகள்சிந்த வெந்திறற்கொள் பூதரு
டுற்றசிங்கன் முனிவினோடு மொல்லைசென் றெதிர்ந்தனன். (கஎ)

மீண்டுகொண்ட வனலிதேரில் விரவிநின்ற புரவியைத்
தண்டுகொண்டு மோதலுந் தளர்ந்திறப்ப வெய்யவன்
கண்டுகோல் சொரிந்திடக் கனன்றவன்றன் வையமுற்
றண்டலன்கை விற்பறித் தடற்கொள்சிங்கன் வீசினான். (கஅ)

அற்றமற்ற சிங்கன்மீதி லனலிதண்டின் மோதலும்
வெற்றிகொண்ட சிங்களங்கன் வெய்யன்மார் படித்தவற்
பற்றிநின்று சுற்றிநற் படித்தலத் தடித்திடத்
தற்றுநின்ற வவுணருடு சண்டனீது கண்டனன். (ககூ)

கண்டசண்ட னடுவனென்று கழறும்வேலை சிங்கனவ்
வண்டலன்றன் வையமுற் றவன்றடம் புயத்தின்மே
லொண்டிறற்கொள் கந்தபின்மோத வவனுமுந்து சிங்கன்மேற்
றண்டின்மோத விருவருந் தளர்ச்சியெய்தி வீழ்ந்தனர். (உ௦)

மற்றிவ்வேலை யவுணர்தம்மின் மாயனோடு பூதரிற்
செற்றமுற்ற நீலனான சீலனங் கெதிர்ந்துநி
ன்றற்றதண்ட முந்தமாய னுந்துமார்பில் வந்துபட்
டிற்றுளா னெனக்கலங்கி யிந்தவா றியற்றுவான். (உக)

நீலன்மீது சூலமொன்று நீசன்விட் டிடப்படச்
சாலவே வருந்திநின்று தக்கமாயன் முன்புபோய்க்
கோலமார்பின் மீதுபாணி கொண்டுமோதி யண்டர்தங்
காலனைப் பிடித்தவன் களத்திணிற் கறித்தனன். (உஉ)

கண்டமீது விண்டிடக் கடித்திரத்த முண்டுயிர்
கொண்டபோது சண்டனேடு கோதில்சிங்க னங்கெழுந்
தொண்டிறற்கொ டண்டுகொண் டுருத்தெழுந்து சிங்கனை
வண்டலன் கவுட்கரத் தடித்தனன் முடித்தனன். (உங)

அன்னகாலை யவுணர்தம்பி லசமுகத்த னணுகவே
மன்னுகின்ற பூதர்தம்மின் மதுவெதிர்க்க வஞ்சகன்
மின்னுனைச் சரங்கள்சிந்த வெய்யன்வைய மீதுபோ
யொன்னலன் கலங்கவேலை யோதைபோ லொலித்தனன். (உச)

ஆர்த்தபோதி லசமுகத்த னபர்வதாக வன்னதைப்
பார்த்துவீர னல்லையுய்ந்து போகெனப் பகர்ந்துநீள்
சீர்த்திகொண்ட மண்ணிடைத் திரும்பவல்லை நில்லெனு
வார்த்தைபேசி வந்தெதிர்ந்து மறிமுகத்த னிதுசெய்வான். (உரு)

மையிலாத பூதன்மீது வன்சரம் பொழிந்திடக்
கையினால் விலக்கல்செய்து கையன்முன்பு சென்றவன்
கொய்யுளைச் சகட்டினைக் கொதித்தெடுத்து வேலையிற்
றுய்யன்வீச வையமீது துண்ணெனக் குதித்தனன். (உசு)

குதித்து வந்து பூதன்முன்பு கூடிமற் றெழுதிற்செயப்
பதத்தினு லுரத்தொடம் பரத்தின்மீ தெறிந்திடக்
கதித்தபூவின் மேவியே களங்கமற்ற மதுவின்மேற்
கொதித்துமாயை யான்மறைந்து கொடியநேமி விட்டனன். (உஎ)

தந்திரங்கொண் மதுவின்மீது தகர்முகத்தன் விட்டிடும்
வெந்திறற்கொ டிகிரிதான் விரைந்துசென்று பூதனங்
குந்துகின்ற படையிலாம லுறுதலிற் றிரும்பியே
வந்துதியன் முடிதடிந்து மாலிடத் தடைந்ததே. (உஅ)

ஆயகாலை யவுணர்மன்ன ரனிகமோடு மணுகலா
லேயபூத ருடையவே யிலக்கர்மேவு தண்டகன்
போயெதிர்ந்து பல்லவம் பொழிந்தழிப்ப வீதெலாந்
தியசூரன் மாமகன் றெரிந்தெதிர்ந்து வந்தனன். (உகூ)

வந்தெதிர்ந்த குறளினேர் மடிந்துடைந் திடச்சாஞ்
செந்திமுர்த்தி வந்திடச் சினத்தினோடு முக்கிர
னுந்துசூரன் மைந்தன் முன்ன குற்றவன்ற னூதுதே
ரந்தரத்தின் மீதுபோக வங்கெடுத் தெறிந்தனன். (௩0)

நன்னுதேரி னோடுபோனு காடுமட்டு மேகியே
மண்ணின்மேல் விழுந்துசென்று வன்றிறற்கொ ளுக்கிரன்
திண்ணமுற்ற வங்கமீது செங்கையா லடித்துநீள்
விண்ணின்மீ தெடுத்தெறிந்து வேறுதேரி லேறினான். (௩௧)

காசிலேழு லோகமுங் கடந்துபின்ன ருக்கிரன்
வீசுசீர்கொள் படியின்மேல் விழுந்தனன் கிடந்தன
னேசிலாத தன்மடிநீ டிரும்பினாகி யேனையோர்
பூசலான வெந்தொழிற் புரிந்திரிந்து போயினார். (௩௨)

ஈதுகண் டிலக்கர்வந் தெதிர்ந்துகோல் சொரிந்தவன்
றீதுகொண்ட தேரினைச் சிதைப்பவேறு தேரின்மே
லாதைபோல வாவினின் றுறுஞ்சரங்கள் கோடிவிட்
டேதமற்ற வீரர்வில் லிலக்கமுந் துணித்தனன். (௩௩)

விற்றுணித் தளப்பில்வாளி வீரர்மே லழுத்தலு
மற்றுநே ரிலாவிலக்கர் வாடியஞ்சி போடினா
ருற்றவிச் செயற்றெரிந் துரங்கொள்வீர கோளரி
செற்றமோடு மெற்றளேந்த தியன்முன்பு வந்தனன். (௩௪)

வந்தளப்பில் கோல்சொரிந்து வஞ்சன்விட்ட கோலெலாஞ்
சிந்தியாயி ரஞ்சரஞ் செலுத்திவெய்யன் மார்பையங்
குந்துசா ளரம்படுத்த வுள்ளநொந்து மாயவன்
வெந்திறற் படைக்கலத்தை வீரன்மீது வீசினான். (௩௫)

வீசலுற்ற படைவிளைந்து மேனியுட் பொருந்தலு
மாசிலாத வீரனும் மயங்கியே விழுந்தன
னோசில்வீர பானுவந் தெதிர்ந்துவெய்யன் வைபமுற்
றோசைநாணி விற்பறித் தொடித்தெறிந்த வெல்லையின். (௩௬)

தூயவீர னாகமீது சோரிநீர் குதித்திட
மாயவஞ்சன் வாளினான் மனஞ்சினந்து குத்தலுந்
தீயன்மீ தணிந்தவச் சிரக்கவச மற்றிட
வோய்வில்வீர பானுவு முரத்துவாள் செலுத்தினான். (௩௭)

சூரன்மைந்த னுட்சினந்து தூயனெற்றி குத்தலும்
வீரபானு வீழவே வெகுண்டுவீர ராந்தகன்
கோரமோடு வந்தெதிர்ந்து கோல்களா யிரங்கடுய்
வாரமோடு மவுணனிட்ட மவுலியங் கறுத்தனன். (௩௮)

வேதன்முன் கொடுத்தவேலை வெய்யன்விட் டிடப்படப்
போதலோங் தயர்ந்தனன் பொருந்திமற்றை யைவருந்
தீதினு னுடுந்தனுச் செருப்புரிந் துடைந்திடக்
காதல்வீர வாகுவீது கண்டுசென் றெதிர்ந்தனன். (௩௯)

தீதில்வீர வாகுவைத் தெரிந்தெதிர்ந்து தீயவன்
வேதனல்லை மாலுமல்லை வேலினானு மல்லைபோர்
தூதனியெ னோடுபோர் தொடங்கவல்லை கொல்லென
மாதிறற் பரித்துயர்ந்த வாகுவீது கூறுவான். (௪0)

வீரம்வீரர் சிறிதுமே விளம்புவார்கொ லோவெனச்
சூரன்மைந்தன் முனிவுகொண்டு சோனைமாரி மானவெங்
கோரவாளி தூவலுங் குவட்டைவென்ற மொய்ம்பனு
மேருலாவு கணைசொரிந் திருஞ்செருப் புரிந்தனன். (௪௧)

மண்ணிலோடு மெட்டதான மாதிரத்தி லோடுநீள்
விண்ணிலோடு நீலவேலை மீதிலோடு நேமியின்
கண்ணிலோடு மண்டமுன்பு கடிதிலோடு மீளுமா
லெண்ணிலாத வன்மைகொண்ட விருவரோறு மிரதமே. (௪௨)

சூரன்மைந்தன் விடுசரங்க டெய்யவன் றடுத்திடும்
வீரவாகு விடுசரங்கள் வெய்யவன் றடுத்திடு
மாருமஞ்ச விந்தவா றருஞ்சரம் பொழிந்துநீ
டீரமேவு மிருவருஞ் செருப்புரிந் துலாவினர். (௪௩)

வெந்திறற்கொள் வீரன்விட்ட விசிகமாரி சிந்திவன்
கந்தவாகை வாகுவின் கரத்துவில்லை வல்லையங்
கந்தமற்ற சூரன்மைந்த னுயிரஞ் சரங்களாற்
சிந்தவே துணிப்பவீர னிந்தவாறு செய்குவான். (௪௪)

பின்னுமோர் நெடுந்தனுப் பிடித்தொரா யிரஞ்சரந்
துன்னவே விடுத்தவன் றுலங்குவிற் றுணித்தபோ
தன்னவெய்யன் வேறுவிற்கொ டாயிரஞ் சரங்கடாம்
மன்னிரும் புகழ்ச்சிவீர வாகுமேல் விடுத்தனன். (௪௫)

விட்டபோது வீரவாகு வெஞ்சரங்க ளேழிறு
லொட்டலன்றன் மவுலிதள்ளி யொல்லைபத்து நூறுகோ
றெட்டுவெய்ய னாணமுந் துணித்திடத் துலங்கிய
மடடில்சிர்கொள் பரிதிகண்டு மன்டுமோகை கொண்டனன். (சசு)

கோரமான வாயிரங் கொடும்பெருஞ் சரங்கடாம்
வீரவாகு நெற்றிமீது வெய்யன்மைந்த னெய்யவே
சோரியுண் டமுழ்ந்திடத் துலங்குசெங் கரத்திறு
லிருமம் பினைப்பறித் தெறிந்துவீர னிதுசெய்வான். (சஎ)

சித்திரங்கொள் பானுவைச் செயிர்த்தவீறு சேவகன்
வத்திரத்தி லாயிரம் வயங்கொண்மார்பி லாயிர
மெத்துதோளி லாயிரம் விறற்கரத்தி லாயிர
மத்திரங்க ளொல்லைசென் றழுந்துறத் தூரந்தனன். (சஅ)

கந்தனெந்தை யிளவல்விட்ட கடியவாளி கொடியவன்
வெந்திறற்கொ ளங்கமெங்கும் விரவியங் கழுந்தலால்
வந்துவந்து சோரிமூட வாடிநொந்து கந்துகப்
பந்திகொண்ட தேரின்மீது பானுகோப னின்றனன். (சகூ)

அன்னபோதி லீதுகண்ட வன்றனாது சேனையோர்
மன்னுவீர வாகுமுன்பு வந்தெதிர்ந்து போர்செயத்
துன்னுவிற்கொள் வாளிகொண்டு துற்றசேனை முற்றவுஞ்
சின்னபின்ன மாகவே செறுத்துநின் றறுத்தனன். (ருo)

பின்புமுன் புடைந்திறந்த பெருகுபூத ரியாவருந்
துன்பிலா விலக்கருந் துலக்கமான வெண்மரு
மின்பமா மகிழ்ச்சியோடு மீடினோடு கூடியே
மன்பெரும் புகழ்ச்சிவீர வாகுவின்க ணேகினர். (ருக)

துற்றசோப மற்றபின்னர் சூரன்மைந்தன் வீரனோர்
செற்றமோ டெதிர்ந்துநூறு நூறுகோல் செலுத்தியே
வெற்றிமொய்ம்ப னேறுகின்ற வீறுதேரை நூறவு
மற்றுமோர் சகட்டில்வீர வாகுவல்லை வாவினன். (ருஉ)

வாவிநூறு நூறுகோலில் வஞ்சகன்கை வில்லுடன்
மேவுகின்ற தேரழிப்ப வேறுகேரி லேறிவெம்
பாவிமற்று மோர்தனுப் பரித்திரா யிரஞ்சரந்
தாவிவீர னாகமீது தோயவங் கழுத்தினன். (ருங)

ஆகமீது பசுமிவன் தமுழ்ந்தவீர வாகுவுஞ்
சோகமங் குனர்ந்திமோழ தூங்கவாளி தூவியே
மாகர்தெவ்வன் வில்லொடித்து வாளியா யிரங்கடா
மேகவிட்டு வெய்யனேறு மிரதமுங் கெடுத்தனன். (ருச)

மற்றுநூறு வாளிகொண்டு மார்பைவாயில் செய்பவோர்
வெற்றிவையம் வெய்யனேற வீரவீரன் விசிகமங்
குற்றவா யிரந்துரந் துரந்திறந்த நெறியினூற்
றுற்றிடுஞ் சிலீமுகங்கொ ணேியங் கறுத்தனன். (ருரு)

இந்தவாறு கண்டுவில்லி னிவனைவெல்வ தரிதெனு
முந்துபானு வைத்தளர்ந்த மொய்ம்பன்வீர மொய்ம்புசே
ரந்தவீர னுதியான வாருமோக மாகவே
வெந்திறற்கொண் மோகமான வேல்விடுத்து நின்றனன் (ருசா)

வந்தவந்த வேலினுன் மயங்கிவீறு பூதரு
முந்துசீ ரிலக்கரும் முரண்பொருந்து மெண்மருங்
கந்தனேவு தூதனுந் தளர்ந்துகந்தி னிற்றலு
மந்தமற்ற கணைகள்சிந்தி யவருருத் துளைத்தனன். (ருஎ)

ஆயகாலை முருகனீ தறிந்தமோக வேல்விடுத்
தேயுமோக வேலழிப்ப வேருலாவு வீரரோ
டோய்வில்வென்றி மொய்ம்பனங் குளந்தெளிந்து தானவன்
சேயின்மீதி லாதிவேல் செலுத்துமா றெடுத்தனன். (ருஅ)

கண்ணுதற் பரன்படைக் கலந்தொடுக்கின் மாய்வுறப்
பண்ணுமந்த வுந்துவேல் பரித்துவந் திலேனெனு
வெண்ணிமாய மாயொளித் திருக்கைவெய்ய னேகலும்
விண்ணினின் றகன்றருக்கன் மேல்கடற் படிந்தனன். (ருசு)

நண்ணலன் கரந்துபோன செய்கைதன்னை நாடியே
திண்ணமுற்ற தண்டமோடு திண்டிறற் புயத்தினேன்
றுண்ணெனத் திரும்பியே துலங்குவெற் பெறிந்தவேற்
பண்ணவன்றன் முன்பணிந்து பாசறைக்கண் மேவினான். (சாo)

## வேறு.

இந்த வாறிவ ணின்றிட விரவிபம் பகைஞன்
புந்தி தன்னிடை யளவிலாப் பெருந்துயர் பொருந்த
ரொந்தி ருந்தன னிவையெலா மொற்றர்போய் நுவல
வந்த வேலையி லறிந்தனன் சூரனு மவுணன். (சாக)

அறிந்த தானவ னிளையான் படையொடு மணுகிச்
செறிந்த சேனையும் பெருங்கிர வுஞ்சமாஞ் சிலம்பை
யெறிந்தவேற்படைக் குமரனுஞ் சமரில்வந் தெதிர்ந்து
மறிந்தி டும்படி பொருவனென் றுன்னியே வதிந்தான். (சா௨)

வண்டு லாவரும் வண்டுழாய் மிலைச்சிய மவுலித்
திண்டி றற்பெறு மரியுரத் திலங்கிய திருப்போ
லெண்ட விர்தவெண் சிகரச் சாகரத் திடையே
சண்ட வெங்கதிர் பரப்பிவந் தெழுந்தனன் றபனன். (௬௩)

கந்த மாமலர்ப் பொதும்பர்சூழ் கமலைமா நகர்வா
ழெந்தை ஞானசம் பந்ததே சிகன்றனை யெதிர்ந்தார்
பந்த வாணவப் படலம்வின் டிரிந்திடும் படிபோ
லந்த ரம்புவி மறைத்தபே ரிருளகன் றதுவே. (௬௪)

---

## இரண்டாநாட்சூரபன்மன்யுத்தம்.

அன்ன காலையி லிலக்கவெள் ளம்படை யணுகத்
துன்னு சிரசு ரேந்திர னுடனதி சூர
னென்ன நின்றிடு தம்பியர் மைந்தரா மிருவர்
மன்னி டும்படைத் தலைவரா யிரதமேல் வரவே. (௬௫)

சீர்பு ரிந்திடு மொருபெருந் தேரின்மேற் றிறற்சூ
ரூர்பி ரிந்துபோர் புரிந்திட வருதல்கண் டோடிக்
கூர்பு ரிந்திடு குலிசவேற் கரத்தினன் கூற
வேர்பு ரிந்திடு குமரவே ளறிந்தன னிதனை. (௬௬)

அறிந்து மாருதச் சாரதி யியற்றுதே ரணுகிச்
சிறந்த சிருள விளையவ ரிரதமேற் செல்லப்
புறந்த ராதவீ ராயிர வெள்ளமாம் பூதர்
செறிந்து சூழ்ந்திடத் தானவன் படைக்கெதிர் சேர்ந்தான். (௬௭)

சேர்ந்த காலையிற் பூதரு மவுணருஞ் சினங்கொண்
டார்ந்த பற்பல படைக்கலஞ் சொரிந்துமின் னார்த்து
நேர்ந்து கிட்டியங் கிருஞ்செருப் புரிந்தனர் நெடுஞ்சீர்
சார்ந்த சாரத ரின்னன பின்னர்செய் தனரோ. (௬௮)

ஆயி ரம்பெருந் தேரினைக் கரங்களா லள்ளி
யாயி ரங்கரி கெட்டிட மோதுவ ரதற்பி
னாயி ரங்கரி பாணிகொண் டெற்றியே யடற்பத்
தாயி ரம்பரி யழிவுறப் புரிகுவ ரடலால். (௬௯)

கோடி வெம்பரி பாணிகொண் டாயிரங் குலவுங்
கோடி யாகிய வவுணரை யடித்துயிர் குடித்தார்
வாடு றுவிறற் றகுவரும் பூதரை வளைவுற்
றீடு சேர்ந்திடு பற்பல படையினா லிறுத்தார். (௭0)

வீறி வந்திடு தானவ ரானவர் வெகுண்டு
சீறு சாரத ருடல்பதை பதைத்திடச் சிதைத்த
வீறி லாவிறற் பூதமன் னவர்தெரிந் தெதிர்போய்
மாறு றும்படி தானவர் தானையை வதைத்தார். (௭௧)

பிணங்கள் சோரிவெற் பாறுபோன் மேவுறப் பெருஞ்சீர்க்
கணங்க டானவர் கணங்களை யடுதிறங் காணூஉ
விணங்கு சீரதி சூரன்வந் தறுமுக லிருதாள்
வணங்கு பூதர்மேற் பொழிந்தனன் பகழியா யாரி. (எஉ)

அந்த வேலையிற் பூதரி லுக்கிர னணுகித்
தந்தி மாமுகன் முன்னவன் சுதன்மிசைத் தண்டோன்
றுந்த வுந்துமக் கதையதி சூரன துரத்து
வந்து * சாலிகை சிந்திய தவுணர்கண் மயங்க. (எ௩)

மூடு சாலிகை சிந்தலுஞ் சிந்தையுண் முனிந்து
பாடி லுக்கிரன் மீதுநா றுயிரம் பகழி
கூட விட்டுழிக் குருதிநீ ரொழுந்தது கொதித்தோ
ரீடு வெற்புவிட் டவுணர்கோன் றேரினை யிறுத்தான். (எச)

மற்றொர் வையமேற் பாய்தலு முக்கிர வலியோன்
செற்ற மோடுதேர்ப் பரிகளை யுதைத்திடத் தீயோன்
றற்று நூறுகோல் விடுத்தலு நெடியகைத் தடியா
லிற்றி டும்படி விலக்கவே திரதமே றினனே. (எரு)

வேறு.

ஏறி நின்றவதி சூர னுக்கிரனை யீறு செய்வனென வெண்ணி யே, சீற னற்படை யரும்பு னற்படை திறற்ச மன்றனது தின்ப டை, வீறு கின்றதொரு காலி னுந்துபடை மின்ப டைத்தவிதி தன் படை, மாற னெண்படை விடப்பி டித்துடல் வருந்து றுதவை ய ருந்தினன். (எசு)

விட்ட விட்டபடை முற்று மூற்றுதிறன் மிக்க வுக்கிரன் விழுங் கலுந், துட்ட னைவதி சூர னதிபடை தொட்டி டப்பரனை யுக்கி ர, னிட்ட மோடுதொழு தஞ்செ ழுத்தினை யியம்பி நின்றிடலு மெ ந்தைதன், னெட்டி ரும்படை திரும்பி முக்கணுடை நின்மலன் புடை யடைந்ததால். (எஎ)

ஈது கண்டரி முகத்தன் மாமக னிலங்குதேரினு மிறங்கியே, கோது செய்யுமொரு தண்டு கொண்டுமிகு சூளி மன்னனெதிர் கூடி வன், போது கொண்டதொடை கொண்ட தோண்மிசை புடைப்ப வக்கதை பறித்தவன், றீது கொண்டவுர மீத டித்துழி சிறந்த தொ ல்லுயிர் துறந்தனன். (எஅ)

இன்ன வாறது தெரிந்து நெஞ்சக மெரிந்து தானவர்க ளிந்தி ரன், மன்னு பூதர்கள் பதைத்து மாளும்வகை வாளி சிந்தியெதிர்

* சாலிகை-கவசம்.

வந்தபோ, தின்ன லற்றகுறன் மன்ன ரிற்கனக னென்று மன்னவ னெதிர்ந்துமின், றன்ன வஞ்சனொடு போர்பு ரிந்திடலு மாயி ரங் கணை விடுத்தனன். (எகூ)

மெத்து மத்திர முருக்த னிற்பட மெலிந்த னன்கடிது வீறு முன், மத்த னென்பவ னெதிர்ந்து போர்புரிய வஞ்ச னெண்ணில் பல வாளிதூஉ, யெய்த்தி டும்படி யிமைப்ப மத்தனெதி ரெய்தி வெய்ய சமர் செய்திடப்,பத்து நூறுகணை சிந்தி மத்தனு மயர்ந்தி டகடிது பண்ணினான். (அ0)

வீறு சிங்கனது பின்பு முன்பணுகி வெஞ்செ ருப்புரிய வஞ்சக, னூறு வெங்கணை விடுப்ப வன்னவனு நொந்து நின்றிடலு முந்துசீ, ரேறு சாரதர்கள் மன்னர் பின்னுளரி யாவ ரும்பொரு திளைத்திட ச்,சீறி வந்தன னிலக்கர் தம்பியுயர் திண்டி றற்குலவு தண்டகன். ()

தார கன்றன்மகன் வந்தி ரத்திலுயர் தண்ட கன்கணைக ளாயிரம்,வீர மோடுவிட நொந்து தந்திதரு வெய்ய னெண்கணைக ளெய்யவே, சீரு லாறுதல் படப்பெ ருந்துயர் செறிந்தி டக்கடிது சோமுகன், கோர மோடணுகி யாயி ரங்கணைகள் கொண்டு தேரழிவு கண்டனன். (அ௨)

தேர ழிந்திடலு மானை மாமதலை சீறி வேறிரத மேறியே, வீர மோடுவெரு சோமு கன்றன்மிசை ‡வென்றி யோர்படை விடுப்பவங், கேரு லாவுமவ னுந்த ளர்ந்தன னிலங்கு சீர்விசயன் வந்துநீ, டார கன்றன்மகன் வில்லை வல்லகணை யாயி ரங்கொடு தடிந்தனன். ()

கொண்ட வில்லழிய வந்தெ திர்ந்துபொரு கொற்ற வீரன்விறல் பற்றலன், கண்டு தண்டது விடப்ப டத்தளர் கலக்க முற்றன னிலக்கரி, லன்டு மேனைய ரடைந்து விற்சமர் புரிந்து டைந்திடலு மாசிலா, மண்டு வீரமுள கந்த னுக்கிளவல் வந்து வெய்யனொ டெதிர்ந்தனன். (அச)

கைத்த னுத்தனை வளைத்து மெத்திய கடுஞ்ச ரஞ்சிதறி வெய்யவன், மைக்த னுத்தனை மறைப்ப வன்னவனு மன்னு மாயிரவல் வாளிதான், சுத்தன் மீதுபட விட்டொ ரேழுகணை தொட்டு விற்றடிய விற்கொளாப், பத்து நூறுகணை சிந்தி வெய்யனுறு தேனை வில்லொடு படுத்தனன். (அரு)

வேறு தேரவுண னேறி விற்கொடியர் வீர வாகுவுறு தேரினை, நூறு கோலதனி னூறுகா லதனி னூபு ரத்துவரு சேவகன், மாறி லாவிறல்கொள் பார்வி தேரினிடை வாவி மேவுதிறல் வாளினாற், பேற தாமொரு கரந்து ணித்துமி பிடித்த தண்டுகொ டடித்தனன்.

‡ வென்றி யோர் படை - வெற்றியை யுடைய வேல்.

ஊறில் வீரனவு ணஞ்சி ரத்திடை யுதைத்து மீளுதலு மொன் னலன், சீறி வாள்கொடு தொடர்ந்து வந்துழி திரும்பி யங்கவனை வாளினு, லூறி னுனவுண ரஞ்சி யோடினர் நுவன்றி டற்கரிய சீரினல், வீறு சூரனிது கண்டு பூதர்குழு மீது வெம்மையொடு மேவினுன். (அஎ)

முந்தி வந்துயர் தனுக்கு னித்தனன் முழங்கு நாணொலி வழங் கலுஞ், சிந்தி னார்சில ரிரிந்து ளார்சிலர் திகைத்து ளார்சிலர் செகத் தின்மே, லிந்த வாறுமிகு பூதர்சோர் தனர்க ளிபாண்டு பத்துட னி ரண்டுதா, னந்த நாணொலி யொழிந்த தில்லையெனி லார வன்றன்வி றல் கூறுவார். (அஅ)

இன்ன செய்கைதனை மன்னு சாரத விராசர் கண்டவ ணெதிர்ந் தபோ, தன்ன வஞ்சனொரு பத்து நூறுதொட ராயி ரந்தழுவு கோ டியா, மின்னல் வெங்கணை பொழிந்த போதவ ரழிந்த போதூல் லிலக்கராம்,வெஞ்சி டாதவிறல் வீரர் வந்தணுகி வெந்தி றற்கணைகள் சிந்தினர். (அகூ)

ஆடல் கொண்டவ ருரக்க ரத்தனு வனைத்தை யுங்கணைக ளா யிரங்,கோடி சிந்தியவை சிந்தி யத்தொகைகொள் கோல்வித்தவர் க டேொலாம், பாடு றும்படி புரிந்தி லக்கமொடு பத்து நூறுசெறி பல்லவ, மீடி னேடுதவி வீரர் மேனிக ளிளைத்தி டும்படி துளைத் தனன். (கூ0)

ஈது கண்டுதிற லெண்மர் தங்களி லிருந்தி றற்பெறு திவாகரன், தீதி லாதகணை சிந்தி வந்திடலு நூறு நூறுகணை சிந்தியே, யோது வீரனது விற்று ணித்தவ னுரம்பி ளந்துழி விழுந்தனன்,யோதி லா விற லரக்கன் வந்தவுணர் கோவின் முன்புகணை தூவினுன். (கூக)

தூவி யங்கதனில் வென்றி யின்றிமிட றுன்று வாளினெடு சூரர்கோன், மேவுதேரணுகி வில்லை வெட்டவவன் வில்லொடி டிந்த தில்ல வல்லையே, யோவி லாதசுதிர் வாளொ டிந்ததட லுந்த ரக்கனை யொர் தாளினுற், பாவி யண்டமிசை செல்ல வுந்தலும் விழுந்த னன்கடிது பாரின்மேல். (கூஉ)

வீழு மன்னதை வெகுண்டு கண்டுமிகு வெற்றி பெற்றிடு மகேந் திரன்,ரூழ்வி லாவிறல்கொள் சூரன் முன்புபல சாய கஞ்சிதற வெ ய்யவன், சூழு நூறுகணை தூய னங்கமிசை தோய விட்டுழி விழுந்த னன், வாழ்வு கொண்டபுகழ் வீர தீரனெதிர் வந்து பல்கணைகள் சிந்தினுன். (கூங)

ஈடு சோவரு வீர தீரன்மிசை யேறி னுடைவுண னேழுகோல்,
கூட விட்டுழி விழுந்த னன்கடிது கொற்ற முற்றிடும கேசனு, நீடு
சூரனெதிர் வந்தெ திர்ந்தொரு நெடும்ப டைக்கலம் விடுப்பவே,
பீடு கொண்டவுர மீது பட்டுமிகு தூளி பட்டது பிறங்குவேல். ()

வந்து பட்டகதிர் வேல ழிந்திட லுமன்னு தானவர்கள் மன்
னவ, னுந்து மின்றகணை யேழு விட்டிட வுரம்பொ ருந்திய மகேச
னின், கந்து றழ்ந்திடு புயங்க லந்துடல் கனைப்ப மொய்ம்பது துளைப்
பவே, சிந்தை நொந்தன னிகழ்ந்த விச்செயலை வீர கோளரி தெரிந்
தனன். (௯௫)

கண்டி தண்டர்புகழ் வீர கேசரி கடுஞ்ச ரஞ்சிதறி வந்துபின்,
பண்ட லன்றனது வைய முற்றுர மடிக்க வேகரம் வெடிக்கவே,
மண்டு சூரனொரு கையி னாலிவனை மாலு றுங்கடலில் வெஞ்சினங்,
கொண்டெ திர்ந்திட விழுந்து பின்னரு மெழுந்து சேனையொடு கூடி
னான். (௯௬)

மால்ப டைத்தவிற லிந்தி ரன்குறுகி வன்ச மன்படை விடுத்
தலும், பால்ப டைத்தமொழி மாயை மைந்தன்மிசை பட்டு மட்டி
றுக ளாகவெங், கோல்ப டைத்தவனா ருயி ரங்குலவு கோடி வெங்
கணைக ளேவலுங், கால்ப டைத்தவிசை போல மேவிய கலந்து ழைத்
திட விளைத்தனன். (௯௭)

மன்னு வெற்றிபுனை யந்த கன்கடிது வந்து பல்கணைகள் சிந்
தலு, மன்ன வன்கணை விலக்கி வெந்தகுவ னாயி ரங்கணைக ளால
வன், மின்னு தேரினொடு விற்று ணித்துமரு மம்பி ளந்திட விழுந்த
னன், வெந்நி டாதவிறல் கொண்ட வண்டர்புகழ் வீர வாகுவிது
கண்டனன். (௯௮)

கனத்த தேரினொடு வந்தெதிர்ப்பவது கண்டு மாயைதரு கன்
டகன், மனத்தி லொற்றனென வுன்னி யின்னமுமென் முன்ன
ரொற்றனென வந்தியே, லனத்தமெய்த்திலை தனுப்பி டிக்கிலுன தாவி
கொண்டிடுவ னென்னவே, சினத்த பாவிமக னாவி கொண்டதிற
லாள னின்னமொழி செப்புவான். (௯௯)

உற்ற தூதனு மமைச்சு மாகுவ னுரங்கொ டெவ்வர்மிசை செல்
குவன், வெற்றி வேலுடைய கந்த னெந்தையருள் வேறு முள்ளபணி
செய்குவன், முற்றும் வல்லவனி யான மர்ப்புரிதி யென்ன வொன்
னலன் முனிந்துநின், கொற்ற வாளிகளொ ராயி ரங்குலவு கோடி
வீரனெதிர் தூவினான். (௧00)

வீர வாகுவு மளப்பில் வெங்கணை விடுத்து வெய்யன்விடு வெய்
யகோல், சேர நூறியொரு நூறு கோனுதல் செறித்தி டக்கணை சி
தைத்திட, மூரி சேரவுன னெட்டு வெங்கணைகள் மொய்ம்பன் மொ
ய்ம்பிடை யழுத்தலுஞ், சோரி யுண்டுபிடர் தன்னை யன்னவை து
ளைத்த வும்பர்கடு ளங்கவே. (௧0௧)

வென்றி கொண்டுய வண்ணல் பின்னர்பல வெய்ய சோலவு ணன் வையமேற்,றுன்றி யொன்றுபல பாக ரங்கமிசை சோரி கண் டிட வழுத்தல்கண், டன்று காசிப னளித்த தானவனெ னாம்ப தொன்கணையின் மொய்ம்பினு,னின்ற தேரதனை நூற வேறுமொரு நீடு தேரின்மிசை கூடினுன். (கO௨)

கூடி வாயுவொடு தேயு வின்படை கொடுஞ்ச மன்கதிர் நெடு ம்படை, யிடு சேர்வருணன் வாடு ருநிருதி யிந்தி ரன்படை யிலங் குசீர், சூடு வேதனொடு மாத வன்படை தொடுத்து மொய்ம்பினன் விடுத்திடப், பாடில் சூரன்மிசை வந்து வந்தவைகள் பட்டு மட்டி றுகள் பட்டவே. (கOங)

மட்டு லாவுதொடை யண்ண லங்கதுபின் மங்கை பங்கு டைய வள்ளறன், னெட்டி ரும்படை விடுப்ப வன்னபடை நேரி லாவிறல்கொள் சூரனும்,விட்டு மொய்ம்பொடு விலக்கி யாறினொடு வீறு மொன்பது விறற்சரங், தொட்டு வீரனது கைத்த லச்சிலை துணித்த னன்றகுவர் துள்ளவே. (கOச)

மூண்ட கோபமொடு மொய்ம்ப னங்கொரு முரன்கொள் வே லினை விடுத்தலு, மாண்டு சூரன்மிசை பட்டு வல்லியி லழிந்து போகுதலு மன்னவன், பூண்ட வன்மையொரு தண்ட முந்தவது வந்து மார்பிடை புகுந்திட, வீண்ட சோரியொடு நீண்ட தேரின் மிசை வீர வீரனும் விழுந்தனன். (கOரு)

செய்கை யின்னது தெரிந்து தேரினெடு சிரு றுஞ்சர வண ப்பெயர்ப், பொய்கை தன்னிடை வளர்ந்த நங்கடவுள் போயெ திர்ந்திட வழுத்தினர்க், குய்கை தந்தருள் குமார வேள்வடிவ முற் று நோக்கிமிகு செற்றமாய், நைகை கொண்டதொழில் கொண்ட வஞ்சனிது நம்பி ரானொடு விளம்புவான். (கOசு)

உன்ற னேடுவரு சேனை யானவ ரொழிந்து போயின ருவர்க் கெலாம், வென்றி கொண்டவிறை யாகி வந்தவனும் வெந்துயர்க் கொடு விழுந்தன, னின்றி ளங்குமர னை நீகொலம ரொன்னெ டேபுரிய வல்லையின், வன்றி றற்றனை யழிப்ப னிங்கொரு கணத்தி னென்றனன் மறத்தினுன். (கOஎ)

வஞ்ச னிதுசொல வேளு னாப்பனிள மைந்த னென்றெமை மதித்தனை, நஞ்சு லாவிய களத்த னெற்றிவிழி நண்ணு கின்றபொ றி யொன்றுகாண், விஞ்சு கின்றவுல கங்கெ டுப்பது விவேக மற்ற வொரு பேதைநீ,யஞ்சு றுததிறல் வீரர் பாலர்பெரி யோர்க ளென் றுமதி யார்கள்காண். (கOஅ)

யாவ ரேனுமமர் செய்ய வந்திடி லெதிர்த்து போர்புரிவ ரிங்கி னிச், சேவ கத்தொடு பெருத்த நின்வலி சிறுத்த நம்பெரிய தின்மையா, லோவ றும்படி கெடுப்ப மென்றிட வுருத்த ளப்பில்கணை யொன்னலன், றாவ வேலவனு மெண்ணில் வெங்கணை தொடுத்து விட்டவை தடுத்தனன். (கoசு)

தடுந்து வேன்முருக னேழி ரண்டுகணை தான வன்றனது தோளின்மேல், விடுத்த போதுகணை பட்டொ டிர்துவிழ வேறு மாயிரம் விறந்சார், தொடுத்த வன்சிலை துணிப்ப வஞ்சனொரு துங்க வேல்விடவு மேழொடேழ், வடித்த வெங்கணையி லந்த வேலையுற வந்த வேலை யெதிர் சிந்தினன். (ககo)

வீறு பின்றதொரு வில்லெ டுத்தவுணன் வேலன் விட்டபல கோலெலா, நூறி யேழ்கணை புயத்தி லெய்யவவை நண்டு சட்ப டூம் வேலவன், சீறி யையிரு சரத்த வன்சிலை சிதைத்தொ ராயிரகல் வாளியா, லேறு தேரழிய நூறி வேறுமவ னேறு தேர்களற வெய்தனன். (ககக)

வன்மை கொண்டசிலை வைய மற்றிடலும் வைய முற்றவுணர் மன்னவன், திண்மை கொண்டதொரு முத்த லைப்படை செலுத்த வீரிரு சரங்கள்விட், டுண்மை கொண்டகுக னன்ன தைக்கடி துருத்த றுத்துமிகு கோல்கடுப்த், தன்மை கொண்டதொழில் கொண்ட வன்புனை மதாணி யானவை தடிந்தனன். (ககஉ)

ஈது கண்டவுண ராரு மங்கணுகி யெந்தை கந்தனை வளைந்தின், ரேது போர்புரிய வாழி வேலன்விட வுற்ற சேனையவை முற்றவுங், சோது றும்படி கெடுத்து மற்றது குமார வேள்கையுற வெய்யசூர், வேதன் மால்படை விடுப்ப வேலவை விழுங்க வாதிபடை விட்டனன். (ககங)

விட்ட வெம்படை குமார வேளொரு விறந்க ரங்கொடு பிடித்தவன், கெட்டி டாதவகை புந்தி சிற்சில கிளத்த வங்கதை மதித்திலன், மட்டில் சேனையொடு பின்பு சேர்துமென மாய மாகிமனை யேகலும், பட்ட சோகமோ டயர்ந்த யாவரு மெழுந்து வேலனயல் பாவினர். (ககச)

மற்றிவ் வேலைமிகு பூதர் சூர்நகர் வடாது வாசறனி லேகியங், குற்றி ருந்தவதி சூர னேப்படை பொடுங்கெ டுத்தெயி லுடைத்துவிண், டுற்றி ருந்ததொரு கோபு ரங்கடிது தொட்டு வேலையிடை யிட்டவூர், சற்ற ழித்தனர் திரும்பி னூர்கடிது சண்மு கத்தனயல் கூடினர். (ககரு)

வெந்தி றற்கொண்மிகு சார தக்குழுவும் வீர ரும்புடையின் மேவவே, யெந்தை கந்தனுயர் பாச றைப்பதியி லேகி மந்திரம தெய்தியே,சிந்து ரப்பகை சுமந்து நீடொளி திருந்தி டுந்தவி சிருந்தன, னந்த ரம்படி யிருண்டி டும்படி யருக்கன் மேல்கட லடைந்தனன்.

நலந்தி ருந்துமரு ணக்க திர்க்கமல நாய கன்கடிது வந்தெனைக், கலந்தி ருந்தவ னகன்று போனசெயல் கண்டு நீதிமுறை கொண்டிடா, துலம்பு ரைந்தபுய விந்து வென்னையுற வுன்னி வந்தன னெனுநினைந்,திலங்கு மம்பர மடந்தை நக்கென வெழுந்த தாரகை யினங்களே. (கக௭)

ஓடி யுற்றசெய லொற்றர் சொற்றிட வுணர்ந்துபானுவை முனிந்துளா, னீடு தந்தையிடை வந்து முற்பக னிகழ்ந்த வச்செயனிகழ்த்தியின், றீடு கொண்டவரை நாளை வென்றிடுவ னென்னவன்னவன் விடுப்பநீன், மாட மாளிகைகொள் வீட டைந்ததனில் வைகி வைகறை யெழுந்தனன். (கக௮)

## மூன்றுநாட் பானுகோபன் யுத்தம்.

எழுந்து மாயைதனை முன்ன முன்னணுகி யேது வேண்டுமென வோதலு, மிழிந்த வன்புதல்வன் முன்ன மென்னொடமரெய்தி வென்றவனை யின்றுநா, னழிந்தி டும்பரிசு வெல்ல வோர்படை யளித்தி யென்றிடலு மார்வமே,பொழிந்த மாயையொரு மாய வெம்படை கொடுத்து விண்ணினிடை போயினள். (கக௯)

அன்ன வஞ்சனது பின்னர் பின்னுள வடற்ப டைக்குல மெடுத்துநீண், மின்னு தேரணுகி யைம்ப தாயிரமென் வெள்ள மானபடை சூழவே, மன்னு மப்பதி மதிற்பு றத்தணுகி மாவின் மாமுகமோ ராயிரந், துன்னு தூதன்வத னந்தெ ரிந்தினைய வாச கங்கடிது சொல்லுவான். (க௨0)

வீர வாகுவெதிர் சென்றி யானிவன் விரைந்த டைந்தது விளம்பியே, போரி யற்றவவன் வந்தி டும்படி புகன்று மீள்கென வகன்றுபோய்ச், சிரு லாவிவளர் பாச றைப்பதி செறிந்து வீரனை யறிந்துகன், டீர மற்றிடு மனத்து வெய்யவ னிசைத்த வாசக மிசைத்தனன். (க௨க)

இயம்பு போதுகதி ரைத்த ளைந்தவனை யின்று கொல்லவருவேனெனப், பயம்பொ ருந்துவகை தூத னேடிவை பகர்ந்து விட்டிளைய ரோடுநீள், வயம்பொ ருந்துகும ரேசன் முன்பணுகி வந்தனைத்தொழில் புரிந்துபின், னயம்பொ ருந்துவிடை கொண்டு சென்றுகவி னண்ணு தேரின்மிசை நண்ணினன். (க௨௨)

கொன்னு றுந்தனது சேனையோ டணிகொள் கோயில் பாசறையகன்றுபோய்ப், பன்ன ரும்புகழ்கொ டெவ்வ னின்றிடு பறந்தலைக்கள மடைந்திட, வின்ன லற்றமிகு பூதர் தானவ ரெதிர்ந்து வெஞ்சம ரியற்றினர், மன்னு பூதரொடு வெய்ய தானவர்கள் வல்லை சிற்சிலர் மடிந்தனர். (க௨௩)

தான வத்தலைவ ராரும் விரமுறு சார தத்தலைவர் யாவரு, மீனமுற்றிடு மிலக்க ரெண்மரு மெதிர்த்து வெஞ்சம ரியற்றவே, யூன முற்றவ ரிறக்க வெற்பகைவ னுந்து தேரினொடு வந்திட, மான முற்றதிறன் மொய்ம்ப னுங்கடிது வந்து தேரினொ டெதிர்ந்தனன்.

அற்ற வேலைதனி னுற்ற வில்லினை வளைத்தி லங்கு * பிறை யாசுகம், வெற்றி மேகமென நாகர் தெவ்வன்விட வீறு கொண்ட தொரு வில்லினை, மற்று நேரில்குமரன்ப தத்தினை வணங்கு வீர னும் வணக்கியே, துற்றி டும்பிறை நெடுஞ்ச ரம்பல தொடுத்து நேருற விடுத்தனன். (௧௨௫)

காரி லேகுவன விண்ணி லேகுவன கஞ்ச னூடரி கலந்துவா, மூரி லேகுவன பாரி லேகுவன வுந்து சீகர முலாவுமுந், நீரி லேகு வன வெற்பி லேகுவன நீள்வு சொண்டபுக முண்டமுன், சிரி லேகு வன தூய வன்றனொடு தியவன்றனது செய்யதேர். (௧௨௬)

சைய மொத்தவவர் வைய மிந்தவகை சாரி வட்டம துலாவ லும், வெய்ய வாயிர நெடுஞ்ச ரஞ்சிதறி வீரன் மார்பிடை யழுத்தி டத், துய்ய னுயி ரெனும்பெ ருங்கனைக வேவி வென்றியுறு சூர்ம கன், செய்ய தேரதனை நூற வேறுமொரு தேரின் மீமிசை செறி ந்தனன். (௧௨௭)

செறிந்து வில்லினை வளைக்கு முன்னருமை செம்ம லுக்கிளை ய சேவகன், முறிந்தி டாதகணை யாயி ரங்கொடவன் மொய்ம்பு ரங் குனைபடுத்தலும், பிறிந்தி டாதவிற லும்பர் வேல்கொடு பெருந்தி றற்புனை திருந்தலன், மறிந்தி டும்பரிசு வெல்வ னென்றவுணன் வாருணப்படை விடுத்தனன். (௧௨௮)

மேயு மப்படையை வீர னங்கிபடை விட்ட ழித்திடலு மொ ட்டலன், வாயு வின்படை விடுப்ப மொய்ம்பனொரு மாசு ணப்ப டை விடுப்பவே, போயு ரத்துவரு வாயு வின்படையை யுண்டு வஞ்சனெதிர் போதலு, மாய னூர்திபடை தீப னுந்தவெதிர் வந்த வெம்படை முறிந்ததே. (௧௨௯)

உந்து நந்திபடை பின்பு மொய்ம்பன்விட வூதை போலது வி ரைந்துபோய், வந்த காருட நெடும்ப டைத்திறலை வல்லை சிந்துத லும் வஞ்சக, னந்த கன்படை விடுப்ப வங்கதையு மட்ட சொட் டல னயன்படை, வெந்தி றற்கொள விடுப்ப நந்திபடை முன்பு வந்தது விளிந்ததே. (௧௩௦)

மிக்க வெற்பகைவன் மாய வன்படை விடுப்ப நந்திபடை முன்புவந், தக்க ணம்பொரா மாடன் மொய்ம்புடைய வண்ண லங்கது தெரிந்துபின், றக்கன் வேள்வியை யழித்த வன்படை விடு ப்ப மால்படை தகர்ந்திட, நக்க னூர்படை யெடுத்து வெந்தகுவ னன்ன லார் வெருவ விட்டனன். (௧௩௧)

---

* பிறை யாசுகம் - அர்த்தசந்திரபாணம்.

முரண்ட ரும்புயனு ணம்பன் வெம்படையை மொய்ம்பி னோடு விட வங்கெதிர், திரண்டு வெம்படையு நீள்பெ ருஞ்சம ரியற்றி விட்டவனை யெய்தவே, திரண்ட கந்திணை புனைந்த தோளுடைய திபசூரனரு டையவ, னரண்ட ருந்தனது மாயை யாலிலகு மம்ப ரத்திடை யொளித்தனன். (கஙௌ)

ஆய போதுசதி ரோன்ம றைந்தன னருந்தி றற்குலவு தான வன், மாயை தன்படை விடுப்ப வள்ளன்முத லான சேனையை வளைந்துமா, லேய வேகமிகு கட்டி யேகியினி தாய நீர்க்கடலி விட் டிடத், தீப ரிற்பெரிய தியனங்கது தெரிந்து நெஞ்சக மகிழ்ந் தனன். (கஙௌ)

மகிழ்ந்து தாதையுறு கோயி னண்ணியவன் வண்ண வொண் கழல் வணங்கியே, நிகழ்ந்த வாறுதனை யோத வன்னவ னிறைந்த வார்வம துறைந்திடப், புகழ்ந்து மைந்தனை யவன்ற னுதுமனை புக்கி ருந்திட விடுத்தன, னிகழ்ந்து டாநெறிகொ ளுர தன்குமர வேண்மு னுற்றிவை யிசைத்தனன். (கஙச)

அற்ற வேலதனி லாறு மாமுக னடற்கொள் வேல்விட வளக் கர்வாய், வெற்றி வேல்கடிதி லுற்று மாயையை விலக்கி யேகவடல் வீரனுந், துற்ற யாவரு மெழுந்து வந்தணிகொள் சூர னூரையெ திர் கண்டபின், கொற்ற மேவுகும ரேச னுக்கிளைய காளை யின்ன மொழி கூறுவான். (கஙரு)

கரந்து மாயைகொடு வென்று சென்றவொரு கள்வ னைத்தலை யறுத்தலா, லுரந்த நுங்குமர வேண்மு னேகில னுனைத்த வீது முடி யாதெனி, லிருந்தி டேனெனது வில்லு நானுமெரி யெய்து வேனென விபம்பியே, விரிந்த சேனையோடு சூர னூரரண மேலை வாசலிடை மேவினன். (கஙசு)

அங்கி ருந்தபுலி மாமு கன்பொரு தழிந்தி டக்கனலின் வாயு வின், றுங்க வெம்படை செலுத்தி வாணகர் தொலைப்ப வும்பனை யலைப்பவன், மங்கு லேழையும் விடுப்ப வங்கவைகள் வந்து மா மழை சொரிந்துநீள், வெங்க னற்றனை யழிப்ப வன்னசெயல் வீர வாகுவெதிர் கண்டனன். (கஙஎ)

## மூன்று நாளிராத்திரி இரணியன்யுத்தம்.

### வேறு.

கண்டான் வெகுண்டான் வடவைப்படை விட்ட காலை
விண்டா னிறைந்த புயனீர்தனை யுண்ண வீழ்ந்து
தண்டா முகிற்கள் கடலோடிய வீது தன்னை
யண்டார் புகழுந் திறற்றூதர் சூரோ டறைந்தார். (கஙஅ)

அப்போது சிறி யமர்க்கேகுவ னென்ன வங்கண்
ணிப்போடி லங்கு மறையாயிர மோர்ந்த தூயன்
மெய்ப்பான சூரன் மகனுடக னென்று மேலோ
னிப்போது கேளென் றவன்றுள் பணிந்தி திசைப்பான். ()

வில்லார் கனகத் திருநாடதி னுற்ற விண்ணோர்
பல்லோர் தமையாஞ் சிறைசெய்தது வீறுபாவ
மல்லா துமன்றி படுமோவவர் தம்மை வென்ற
தெல்லார் நயனப் பெருமான்வர மன்றி யாதே. (கச0)

ஏறுற்ற தேவ னெடுமொறுகொண் டார்க ளெல்லா
மூறும் பிறந்தா ரிருந்தார்தமை யோத வுண்டோ
மாறற்ற செல்வ மளித்தோன்மகன் மேவின் மாறு
மாறற் றவனைப் பணியாதமர் செய்ய லாமோ. (கசக)

மன்று குகனம் பிழைபாலமர் செய்ப வந்தான்
பொன்னுட் டமரர் சிறைவிட்டவன் முன்பு போந்தங்
கென்று யகனே சொடிபோம்பிழை யெண்ண லென்றே
சொன்னு லறுமா முகன்மீண்டிடு மென்று சொற்றான். ()

ஈங்கிது பால னுரைசெய் திடும்போ திடும்போன்
நீங்கான கோப முடனேசில வார்த்தை செப்ப
வாங்காதன் மைந்த னறிபேன்பிழை யெண்ண லண்டார்
நீங்கா விறப்ப வமர்செய்குவ னென்று நின்றான். (கசங)

இன்பாகி வெய்யோ னனையான்றனை யேவ வேகிக்
கொன்பாவு தன்னி லனுகிப்படை யான கொண்டு
மின்பாவு நாலா யிரவெள்ளவெஞ் சேனை மேவப்
பொன்பாவு பூத ருறுசெம்புல முன்பு போனான். (கசச)

வேறு.

‡ முச்சிர முள்ளவன் வச்சிர முள்ளவன் மொய்ம்பினன் முன்பினன் முறனுறு மிரணிய, னச்சமில் சேனைவெள் ளத்தைநாற் றிக்கினு மாயிர மாயிர மாகவே யேகவிட், டெச்சமில் குடதிசைச் சேனைபோ டேகின னீடுசேர் வீரனு நால்வகைத் திக்கினு, மெச்சு தன் றுனையைப் பொரவிடுத் தவுணர்கோன் மேவுறுந் திக்கிலே மேவினன் றானுமே. (கசரு)

---

‡ முச்சிரமுள்ளவன் வச்சிரமுள்ள வன்மொய்ம்பினன்முன்பினன்முரண் உறும் இரணியன் என்பதற்கு-மூன்றுசிரங்களையுடையவனும், வலியவச்சிரம்போ லுள்ள புயங்களையுடைமையால்வச்சிரவாகுவெனப்பெயர்பெற்றவனும் மூத்தவனுமாகிய வலிமைபெற்ற இரணியன் எனப்பொருள்கொள்க.

சாரதத் தானையுந் தானவத் தானையுந் தங்களிற் போர்செயச் சண்முகற் கிளையவன், றிரமூற் றிரணியன் றனனொடும் வந்தவெஞ் சேனையிற் பல்லவச் சேனையைச் சிந்தியே, கோரமூற் றடுதலுந் தகுவர்கோ னாயிரங் கோல்விடுத் தாயிரங் கோடியாய் நீடிய, பாரிடச் சேனையைப் பாரிடத் தேயடப் பாங்குறும் பூதர்தா மேங்கியே யோடினர். (கசசு)

சாரதத் திறையவ னீலனும் பேரினன்றனவன் முன்புபோய்த் தானவன் மேவிய, தேரொடுத் தம்பரத் தெறியவே தேரொடுஞ் சென்றுமீண் டிடுதலுஞ் சீலனு நீலனு, நேருறச் சினமொடே மாக மேல் வேகமாய் நில்லுநில் லென்றுபோய் நீசன்மா மைந்தனைப், பாரமெய்த் தாளினு வருளவே யுதையவே பாரின்மேல் வீழ்தலும் பாய்ந்தனன் மேனிமேல். (கசஎ)

தன்பதத் தாலவன் றனைமிதித் திடுதலுந் தாழ்ந்திடும் விறலி னன் வீழ்ந்திடுஞ் சோரியன், றுன்புடைத் தாயிபோர் மேனிதன் போலவே துஞ்சுறு விஞ்சையாற் றேன்றுவித் திடுதலு, நன்புகழ்ப் பூதனுங் கண்டதைச் சாடவே நணிதொடர்ந் திருபத நலியவே மெலியவே, மன்புகழ்த் தேர்மிசைத் துபரகன் றேறினன் வாளிபூ தன்மிசை வஞ்சனுஞ் சிந்தினன். (கசஅ)

மண்டுதி வாளிதான் வந்துபட் டிடுதலும் வாடிவெம் பூதனு மண்ணின்மே னின்றிடக், கண்டனன் வீரனற் றேரொடுங் குறுகியே கையன்மா யத்தினைக் கையினிற் கவினுறக், கொண்டதோர் ஞானவே லாலழித் திடுதலுங் கொடியனே ராயிரங் கோல்விடுத் திடவிளைந், தொண்டிறற் புயமுடைக் காளைதன் மார்பகத் துந்து கோல் வந்துபட் டொல்லைதா னூற்றதே. (கசகூ)

மாணுறுந் திறலுடைக் காளைபின் பாயிர வன்சரஞ் சிந்தியே மன்னவன் பின்னுறுந், தூணியுந் தூணிசேர் வாளியும் வாளிசேர் தூவிலுந் தூவிலார் துங்கவன் றேரையு, நாணுறும் படிகெடுத் தவனுரம் பல்றுளை நண்ணவே செய்துபின் னன்னல னன்னிய, சேணிருந் தேரொலா நூறுநா றம்பினுற் றேவர்கொன் டாடவே சிந்தினன் றனரோ. (கரு0)

இச்செயற் கண்டுபின் னென்னலா னெள்ளுவா னீங்கியான் முடிகுவ னெந்தையு முடிகுவ, னிச்சயம் பிறர்களு முடிகுவர் முடிவரோ னீள்கடன் செய்யவோர் கிருதரிங் கில்லையா. லச்செயற் புரியநா னுறுவனென் றுன்னியே யருவமாய் மீனமா யாழியுட் போயினன், பச்சிமத் திசைதனக் கெதிர்படுந் திசைதனிற் பானு வந் தானிருட் பந்தியைச் சிந்தியே. (கருக)

ஆனவிச் செயலினை யொற்றர்கண் டேகியே யடலுடைச் சூரன்முன் பணுகியங் கறைபவே, யினமுற் றிடுகொடுஞ் சூரன்மா மைந்தனங் கெரிமுகன் கடிதுவந் தெனைவிடுத் திடுதியா, ஞானமுற் றறிவுறத் தெவ்வனைச் செறியிங் கொல்லைவந் திடுவனென் றுரை செயா நின்றிட, மானமுற் றிடுவிறற் புதல்வபோய் வென்றுபின் வருதியென் றேவினான் மன்னர்தம் மன்னவன். (கருஉ)

## நாலாநாள் அக்கினிமுகன்வதை.

என்றுசொற் றிடுதலும் புரமதிற் கடிதுவந் தேருலா வும் பெருந்தேரின்மீ தேறியே, துன்றிமொய்த் திடுமடற் சேனையோ ரெண்ணிலார் சூழவந் தேகியே தூயவெம் பூதர்சேர், வென்றியுற் றிடுநெடுஞ் செம்புலத் தனுகரும் வீருசா ரதர்களும் விறலுலா நிரு தரு,நின்றுபற் பலபடைக் கலமெறிந் தெதிருறு நிடுவெஞ் சமரமர் விலைமைசெய் தாரரோ. (கருங)

அந்தவேலையில்விறல் வியர்வில்வந் துதையமா மரியசிர் வீரர் போ யவுணர்தஞ் சேனையிற், பந்திகொண் டிடுநெடுஞ் சாயகஞ் சிந் தியே பாடுகொண் டிடுதலும் பதகரங் கோடினர்,சிந்தைதீர் மேகனே சோமனே யாதியா நிருதமன் னவர்செருப் பொருதவவ் வாறுகண், டுந்துசி ரெண்மரிற் றிறலுடைச் சதமக னெல்லைசென் றெய்தின னென்னலார் தங்கணோர். (கருச)

போர்புரிந் தெதிர்பொருந் திந்துகன் டகனையும் புயலினன் றன்னையும் பொன்றுறப் புரிதலு, மேர்புரிந் திடுமுரத் தேனையோ ரோடினு ரெரிமுக னிதுதெரிந் தெரிமுக னாகியே, கூர்புரிந் திடு நெடுங் கணைசொரிந் தடலொடுங் கொள்ளைவெம் பூதரைக் கொன் றுசேர் நின்றிடச், சீர்புரிந் திடுதிறற் சதமகன் கண்டனன் சீற்றமேல் கொண்டனன் சிலைகுனித் தானரோ. (கருரு)

வெய்யவக் கெதிரனேர் தடுசரம் பொழிதலும் விறலுடைத் தகுவனு மிகுசரஞ் சிதறியே, சைபமொத் திடுபுயத் திறலுடைச் சதமகன் றனுவையுந் தேரையுஞ் சாபவன் டேணியும், வையகம் புகழவே நூறியோர் நூறுகோன் மார்பிடைச் சிந்தலும் வன்மை போய் நிற்பவீ, தொய்யெனக் கண்டவன் றுணைவரா மெழுவரு மொல்லைசென் றெய்தினா ரொன்னலான் முன்னரோ. (கருசு)

சிலைவளைத் தளவிலாக் கணைதனைச் சொரிதலுந் திறலுடைத் தகுவனுஞ் சிலசரந் தினைபவர், மலையினைப் பொருபுயத் தெய்யவே யவரவன் மாமுகத் தாயிர மார்பிலத் தொகைபுயந், தலையிடத் தாயி ரங் கையிடத் தாயிரஞ் சாபகந் தொட்டவன் றேரையுந் தடிதலுங், கொலைபுடைக் கொடியனேர் தேரின்மீ தேறினன் கோல்விடுத் ததனையுங் கூறுசெய் தாரரோ. (கருஎ)

தோழித் தவனுடம் றுளைபடுத் திடவுமோர் தேரின்மீ தேறி யே சிவனருட் படையினைச், சிருடைத் தருவர்கோ னெழுவர்மேல் விடுதலுந் தீநெடும் படையெனச் சிந்தையி தெண்ணியே, வீரமும் றிடபுனற் படைவிடச் சோதிவேல் வினைவினுண் டனுமியேற் வீர ணாக் கொன்றதால், வாரியிற் பொலிதரும் பூதரா னவொலாம் வா ய்புடைத் தலறினர் வாடினு ரோடினர். (சருஅ)

ஈதெலாங் கண்டனன் பூதனாக் கையமைத் திங்குநீ ரஞ்சன்மி னென்னவங் கோதியே, யாதிகண் டனில்வருங் குமரனுக் கிளையவ னனன்முகக் கொடிபுன்முன் பணுகவே யிருவருஞ், சோதிவெங் கணைகடூ யமர்புரிந் தார்கள்பின் சூர்மகன் பரன்மகன் றூயமுன் டத்திடைத், தீதுறுங் கணைகளோ ராயிரந் தொடுதலுஞ் செய்ய வன் சிறியிச் செய்கையின் செய்குவான். (சருகூ)

ஆயிரங் கணைகடூ யவுணர்கோ னிரதமு மங்கையிற் சாபமு மழிவுசெய் திடுதலும், வேயுறுந் தோளுடைப் பதுமைதன் பால கன் வேறுதே ரேறியோர் வீறுதன் டேர்ந்தவச், சேயிருந் திறலுடைக் கதையையோர் கணையினுற் சிதைவுசெய் திடுதலுஞ் சிலைபிடித் தவு ணர்கோன், வாயுவின் படைசமன் படைகதிர்ப் படைவிட மற்ற வப் படைவிடீஇ மாற்றினன் வீரனே. (கசூ0)

ஆனைதன் பின்னவன் பின்னவன் பின்னரு மனன்முகத் தவ னுரத் தம்புநா றுய்ப்பவே, யீனமற் றிடுமணித் தேரின்மீ தேவிழு ந் தெருவைநீர் பெருகவங் கெரிமுகன் றுயருறீஇத், தான்முனம் வழிபடுந் தன்னகர்க் காளியைத் தன்னகத் துன்னலுந் தானையோ டெய்தினுள், மானமும் றிடுதிறற் றெவ்வனாக் கொல்லுவன் மைந் தவஞ் சேலெனு வந்தனள் பூதர்மேல். (கசூக)

துங்கவெம் பூதர்மேற் சூலமொன் றுந்தவச் சூலமங் காலமே போலவந் திடுதலுஞ், சங்கரன் மாமகன் பின்னவன் சீறியேழ் சாய கங் கொண்டதைத் தடிதலுஞ் சண்டிகை, வெங்கொடுஞ் சினமொ டே பின்புமோர் சூலவேல் விடுதலு மாயிரம் வெஞ்சரந் தூண்டி யே, யங்கது தன்னையு மங்குவித் திடுதலு மண்ணல்சேர் தேரின்மீ தார்த்துவந் தெய்தினுள். (கசூஉ)

பாங்குறுங் காளியென் கையுமோர் கையினுற் பற்றியே மார் பகத் தெற்றியே நிற்றலு, மேங்கியே சோகமா யெருவைநீர் விழவி ழுந் திடரகன் றிடவெழுந் தேத்தினுள் வாழ்த்தினு, ளாங்குநின் றிலள்வினாந் தேகினு ளீதுகண் டங்கிமா முகனெழுந் தடல்பெ றுஞ் சிலைபிடித், தோங்குநா றம்பினன் மொய்ம்பினன் றேரறுத் தூதிய மாயதென் றாதினன் சங்கமே. (கசூங)

தீதிலா வீரனி ரேழுகோல் கொண்டுபின் றீமுகத் தீயவன் சிலையறுத் திடவவன், வேதனர் படைதனைக் கடவலுந் திறலினன்

வீரபத் திரன்படை விடுதலுங் கடிதுபோய்ப், போதனூர் படைத னைச் சிந்திவெந் தழன்முகன் பொன்றவே முடிகளேர் தன்னைல் கைப் புக்கதா, லாதரச் சுரரொலா மொய்ம்பன்மேல் மலர்சொரிந் தாடினூ ருவகையா லவசமே யாயினர். (கசுச)

வன்னிசேர் மாமுகன் பட்டதைக் கண்டவன் மட்டிலாச் சேனையோர் மானமும் வீரமுந், துன்னவந் தெய்தியே பலபடைக் கல மெலாந் தூவிவெம் போர்செயத் தூயவன் சீறியே, மன்னிடும் புய லெனக் கணைசொரிந் திடுதலும் வாடினூ ரோடினூர் மாண்டுளா ராயினு, ரன்னதன் பின்னரொண் பூதரு மெழுவரல் லாததம் பியரு மங் கருகுவந் தெய்தினர். (கசுரு)

அன்னபோ தெழுவராந் துணைவரைக் கண்டிலான் யாவதானூர்கொலோ வாவிபோ னூர்கொலோ, வென்னவே யுக்கிரன் கனன் முகன் படையினு லெழுவரும் பொன்றினு ரென்றுகூ றிடுதலு, மின்னுயிர்த் துணைவரா மவர்விடந் துழிபடைந் திருகணீர் சொரியவங் கெதிர்விழுந் தலறினு, னன்னயத் தம்பிமீர் தம்பிமீ ரென்றன னனிபுலம் புற்றன னுடருந் திறலினன். (கசுசு)

வேறு.

இன்ன பான்மையிற் றுயருழந் தறுமுக னிளையோன்பின்
மன்னி ருந்திறற் றுணைவரை யெழுப்புவான் மனங்கொண்டு
பின்னு றுங்கணைத் தூணியி னொருகணை பிடுங்காவங்
கன்ன தின்றலை யுயிரினு லெழுதுவா னடலோடும். (கசுஎ)

வெற்றி வேலுடைக் குமரனுக் கிளையவன் விடுத்திட்டே
னுற்ற வந்தகன் காண்கவென் றம்பிய ருயிர்கொண்டாய்
நற்றி றங்கொலோ விடுமெதி கடிதென நனிதிட்டிச்
செற்ற மோடுதன் சிலையிடைப் பூட்டியே செலவுய்த்தான். (கசுஅ)

மாற்ற ருங்கட லேழையுங் கடந்துபோய் வயமேவுங்
கூற்றன் முன்னரோ வீழ்தலுந் தெரிந்தனன் குறித்துள்ளத்
தாற்ற வஞ்சினன் றேடினன் கயிலையி னடைந்திட்டான்
வீற்றி ருந்தன ரவ்விடை யெழுவராம் விறலோரும். (கசுகூ)

பூண்ட போரிடை யிறந்தவெங் கணமெலாம் புடைசூழ
வாண்டி ருந்தன ரந்தகன் றெழுதன னடன்மேவி
நீண்ட தோளினன் றேடினன் வம்மென நிகழ்வோத
வீண்டு தானையோ டெழுவரு மமர்க்களத் திடைவந்தார். (கஎ0)

இலங்கு தத்தம துருவினிற் புகுந்தன ரெழுந்தேபின்
னலங்கொள் வீரனை வணங்கலு மனையவ னயமோடு
மலங்கன் மார்புறத் தழுவினன் மகிழ்ந்தன னதுபோதின்
விலங்கு ருவிற லந்தகன் வந்தனன் விறலோன்முன். (களக)

தொழுது வீரநீ யென்றனை முனிந்தனை துணையோனைப்
பழுது செய்வனே வவர்பெருங் கயிலையிற் படர்ந்தானொன்
றெழுது வாசகங் கண்டபி னியற்றிய தெழிலோன்முன்
முழுது மோதினன் முனியலென் றேகினன் முரட்காலன். (களஉ)

ஈதெ லாந்திற லொற்றர்கண் டேகியே யிருஞ்சூரன்
பாதம் வந்தனை புரிந்தன ரெரிமுகன் பட்டானென்
றோதி னாரவ னரற்றினன் புலம்பின னுறுபோதிற்
காதன் மைந்தர்மூ வாயிரர் வந்தனர் கடியோன்முன். (களங)

## மூவாயிரர் வதை.

வந்து தந்தைவெந் துயரறச் சிலமொழி வகுத்தோதி
வெந்தி றற்சமர்க் கேகுதும் யாமென விடைகொண்டு
பந்தி கொண்டதே ரேறியங் களவிலாப் படைசூழ
வுந்து வீரனும் படைஞரு முறுகளத் துற்றாரால். (களச)

மாய மேசெயு மவுணரும் பூதரு மலைவாகி
யோய்வில் பற்பல படைக்கலஞ் சொரிந்தம ருறுபோதிற்
றீயர் சேனையும் பூதர்தஞ் சேனையுஞ் சிலமாளப்
போயெ திர்ந்தனர் கடிதுமூ வாயிரம் புகழ்வீரர். (களரு)

கதிர்கொள் வாளிதூய்ப் பூதரை யடுதலுங் கணமன்ன
ரெதிர்பு குந்தம ரிழைத்திட வவரிவ ரெழின்மெய்யிற்
பதிவு றும்படி கணைவிட விடரொடும் படிநின்று
ரதிர்த ருங்கழ லிலக்கரி லாயிர ரதுகண்டார். (களசு)

கண்டு வீரனைத் தொழுதனர் விடைகொடு கடிதேகி
யெண்ட ரும்புகழ் விசயனே யாதியா யிரவீரர்
மண்டு கோன்மழை சொரிதலு மவருமம் மழைதுவ
வண்டி ருந்திற லிருவகைக் கணையுநேர்ந் தமர்செய்த. (களஎ)

ஆய காலைமூ வாயிர ராயிரத் தவர்தேரைச்
சாய கங்கொடு சிதைத்தலுந் தூயவர் சரந்தூண்டித்
தீயர் தேரையுந் தனுவையுந் துணித்தனர் தேர்புக்கார்
மாய வந்தவர் சீறியே யீறிலா வரையுய்த்தார். (களஅ)

வீறு வெம்பலாங் கணையினாற் சிதறியே விறற்கோறாய்ச்
சீறி வெய்பர்மெய் துளைத்திட வவுணரிற் சிலரின்றே
ரோறு தேரொடுத் தாவரிமே லெழிந்திட வெழில்வீரர்
மாறில் பூமிசைப் பாய்ந்தனர் பின்னரும் வந்துற்றார். (கஎகூ)

செற்ற வெங்கணை சொரிதலு மவுணரிற் சிலரின்றே
ருற்ற கைச்சிலே பறித்தொடித் திடவவ ருரமீதே
யெற்றி னாரவர் தாமுமங் கெற்றினா ரிகல்கூடி
மற்ற மிற்றனைப் புரிந்தன ரிருவகை வலியோரும். (கஅ0)

ஈது செய்தலும் விசயனே யன்றிமற் றெல்லோரும்
போத மொந்தன ரவுணருக் குடைந்தனர் புறந்தந்தார்
தாது லாந்தொடை விசயனுட் சீறியே சாஞ்சிந்தித்
தீது லாவுசூர் மைந்தரைத் துணித்தனன் சிதைத்திட்டான். (கஅக)

இறந்த பேர்களுந் துணிந்துள பேர்களு மெழுந்தேபின்
மறந்த ருஞ்செருப் புரிந்திட வியந்தனன் மனநொந்தே
சிறந்த வேலனே நினைத்தலுங் ககனமேற் செவ்வேள்வந்
துறைந்து நின்றுதன் றுடொழு விசயனுக் குரைசெய்வான். (கஅஉ)

மாய்ந்த வஞ்சக ரறுவது மெழுவது மலரோன்மு
னீந்த நல்வர மவரினிக் கெடவிதை யெறிகென்றே
காய்ந்த வெஞ்சினக் காரிவே லருளினன் காந்திட்டா
ளுய்ந்து ணர்ந்தன னிதனையுன் மத்தனு மசுரேசன். (கஅ௩)

மிக்க மாயவள் படையினை விடுத்தலும் விசையன்று
னக்க ணந்தனிற் காரிதன் படைவிட வதுபோந்து
புக்க மாயவள் படையழித் தவுணர்கோன் புகழ்மைந்தர்
தக்க மும்மையா யிரரையுங் கொன்றது சயமாக. (கஅச)

மும்மை யாயிரம் புதல்வர்கண் முடிந்ததை முரணுற்றார்
மம்ம ரோடுகேன் டோடினர் சூரன்முன் மருவுற்றீ
தம்ம வோதலு மாற்றினன் புலம்பின னதுபோதின்
வெம்மை கொண்டசெங் கதிரவ னடைந்தனன் மேல்வேலே. ()

எண்ட ரும்புகழ் மதுரையே கதிர்விசும் பிருண்மேவுங்
கொண்டல் மண்டமன் குண்டரோ தாரகைக் குலமெல்லா
மண்டர் நாயக ரடியரோ செக்கரோ யழறிங்கட்
டுண்டம் வாதில்வே காதெழு மேடெனத் துலங்கிற்றே. (கஅகூ)

## நாலாநாளிராத்திரி தருமகோபன்வதை.

இன்ன பான்மையிற் கங்குல்வந் திடுதலு மிருஞ்சூரன்
றன்னை வந்தடைந் தறப்பகை புத்திசிற் சிலசாற்றி
யொன்ன லார்தம துயிர்குடித் தொல்லையின் டுருவேனென்
றன்ன வன்றனை விடைகொடு புறந்தனி லடைந்திட்டான். (க௮எ)

* புண்ட ரீகமா மாதிரப் போதகப் பிடர்புக்கே
யண்ட ரஞ்சுற வெண்ணிலாப் பெரும்படை யயல்சூழ
மண்டி ருந்திறற் பூதர்சூழ் பறந்தலை வந்திட்டான்
சண்ட முற்றிடு மவுணரும் பூதருஞ் சமர்செய்தார். (க௮௮)

இருதி றத்தரு மெண்ணிலாப் படைபெறிந் திகல்கொண்டு
பொருதி றஞ்செய வவுணரி லமைச்சரும் புகழ்வேர்வில்
வருதி றத்தரு மெதிர்ந்தனர் சமர்த்தொழின் மருவுற்றூர்
திருமி குத்திடு மவுணரும் பூதருஞ் சிலர்மாண்டார். (க௮௯)

இலக்க வீரரும் வன்மைபோய் நொந்தன ரிதுகண்டு
விலக்க ரும்புகழ் வீரமார்த் தாண்டனும் விறலோன்சென்
றலக்க ணுற்றிடக் கணைசொரிந் தமைச்சரை யடனேக்கித்
தலக்க ணின்றிடுந் தானவ ரெதிர்ந்தனர் சமர்செய்தார். (க௯௦)

ஓங்கு பூதர்கள் பலபடை விடுதலு முடைந்தார்க
டங்கு லாவிய வறப்பகை கண்டிது சினமேவித்
தாங்கி ரும்புகழ்ப் பூதர்மீ தளவிலாச் சரஞ்சிந்த
வாங்கு மேனிமேற் படுதலு மெலிந்தன ரடனீங்கி. (க௯க)

காலிற் கொன்றிடு மருப்பினாற் கொன்றிடுங் கவின்மேவும்
வாலிற் கொன்றிடுங் கரத்தினாற் கொன்றிடும் வயப்பூதக்
கோலச் சேனையை யிவ்வகை கொடியவன் கொடுவேழஞ்
சாலக் கோறலுஞ் சாரத ரோடினர் தனைமீதே. (க௯உ)

கண்டு வென்றிசேர் கதிரவன் கடிதுபல் கணைசிந்திப்
புண்ட ரீகமீ தழுத்தலு மயர்ந்தது பொலிசீற்றத்
தண்டர் மாற்றலன் சீறியே நூறுகோ லவையேவிக்
கொண்ட சோரிநீ ரொழுந்திட வழுத்தினன் குளமீது. (க௯௩)

உதிர மோடுதன் றேருறத் தீயவ னொருவேலை
யெதிர்வி டுத்தலும் வீரமா புரந்தர னென்போனாற்
கதிர்நெ டுங்கணை விடுத்தது தடுத்துவெங் கணைமாரி
துதிபொ ருந்திய வவுணன்மேற் பொழிந்தனன் சுரர்போற்ற. ()

தரும கோபனே வாலவை விலக்கியோர் தண்டுந்த
மரும மீதது வந்துபட் டிடுதலு மயக்குற்றான்
கரும மீதுகண் டடல்பெறுந் தோளினன் கடிதேக
வரும வன்றன்மேற் பொழிந்தன னிழிந்தவன் மழைவாளி. (க௯௫)

---

* புண்டரீகம் என்பது - தென்கீழ்த்திசையானை.

விட்ட வாளிபட் டொடிந்திட வீரனோர் விறல்வேலை
யொட்ட லன்றன்மேல் விடுத்திடச் சென்றவ னுரத்தூடே
பட்டு வெரிநிடைப் பறிதலு முளம்பதை பதைப்புற்று
மட்டில் சோரியோ டிருந்தனன் கரிமிசை மயலாகி. (கசூசு)

அந்த வேலையி லவன்கரி மனஞ்சினந் தடன்மேவுந்
தந்தி மாமுகந் தினையவற் கிளையவன் றடந்தேரை
யுந்து நாற்பெருங் கோட்டினாற் றூக்கியே யுயர்பாகன்
சிந்து மம்படி புடைத்தது கரத்தினாற் றிறலோடும். (கசூஎ)

ஆன காலையில் வேறுதே ரேறியே யடல்வீரன்
கான மாமலைக் கரிகரம் பிடித்தனன் கவுண்மோதி
யீன முற்றிட வப்புறத் துலகிடை யெறியப்போய்த்
தான வர்க்குளந் துளுக்குற விழுந்தது தரைமீது. (கசூஅ)

விழுந்து மண்மிசைத் துன்பொடு கிடத்தலும் விறல்வெய்யோ
னெழுந்து தண்டமொன் றுந்தினு னன்னதை யெழில்வீரன்
செழுந்த ஷிச்சுடர் வாளினாற் சிதைப்பவச் சிரமுய்த்தா
னழுந்து சீருள வச்சிரங் குறுகிய தடலோன்முன். (கசூகூ)

வந்த வச்சிரம் பாணியிற் பிடித்துவஞ் சகன்மீதே
யுந்த வங்கது படுதலும் பதைபதைத் துடன்வீழச்
சுந்த ரங்கெழு தாளினு லுதைத்திடத் துகடீரு
மந்த ரத்தனை யலைத்தவ னிறந்தன னவர்துள்ள. (உ00)

ஈது கண்டவன் றண்டமங் கோடிய திடர்மூழ்கிப்
பூத லத்துறு வெங்கரி யெமர்துபின் புகழ்ந்தேத்தி
மேத குந்திறல் வீரனை விடைகொடு விறல்சேர்தன்
மாதி ரந்தனிற் படர்ந்தது பூதர்கண் மகிழ்ந்தார்த்தார். (உ0க)

செற்ற மேவிய வறப்பகை மடிந்தவச் செயறன்னை
யொற்றர் நோக்கினர் வாடின ரோடின ருரைசெய்ய
வற்ற மாந்துயர்ப் பரவையு ளழுந்தின னறிவின்றி
யுற்ற பாவைபோ லிருந்தன னவுணரி லுரமிக்கான். (உ0உ)

## ஐந்தா நாட்பானுகோபன்வதை.

இருந்த காலையி லிறையவன் கறையடி யிருந்தோலாற்
பரிந்து மத்தகங் காறுமெய்ம் மறைந்திடும் படிபோர்த்துத்
திருந்து செஞ்சடை காட்டிநின் றிடுவதோர் திறம்போலக்
கருந்தண் வேலையிற் செங்கதி ருதித்தனன் கதிர்வீசி. (உ0௩)

அற்றை வேலையிற் காசிப னுதவிய வசுரேச
னிற்று ளானெனத் துயருழந் தயர்வுறு மியனேக்கி
வெற்றி பூதையுஞ் சிந்தையும் பிற்பட விரைந்தோடி
யெற்ற ரேந்தவம் பணிந்தன ரொற்றர்தா மெழுந்தார்பின். (உ0௪)

சிறந்த வீரரை மாயையாற் கட்டிமுன் றிரைவேலை
யுறைந்தி டும்படி யெறிந்தபி னிகழ்ந்தன வுரைசெய்ய
வறந்த விர்ந்தவன் றவிர்ந்திடாப் பெருந்துய ரதின்மூழ்கி
யிறந்த தேயினி நம்பெரு வாழ்க்கையென் றெழுந்திட்டான். (உ0௫)

எழுந்து தந்தைதன் கோயிலுட் புகுந்தவ னிருதாண்முன்
விழுந்து நின்றுவேற் குமரனைத் தூதனை மிகவேநா
மழிந்து போவதே யன்றிவென் றிடுவதிங் கரிதண்ட
ரொழிந்தி டச்சிறை விடுப்பதே நன்றென வுரைசெய்ய. (உ0௬)

மஞ்ச நெஞ்சகத் தஞ்சினை போலுநின் மனையேகித்
துஞ்சி வைகுதி யென்னபா னுரைத்ததைத் துகடீர
நெஞ்சு கொண்டிலன் வெருளிகொண் டானென நினைவாகி
வஞ்ச னேன்பிழை பொறுத்தியென் றுரைத்தனன் மகிழ்வாக. ()

அறைந்து போர்க்கவன் றனைவிடை கொண்டவ னகன்றேபின்
குறைந்தி டாப்பெருந் தேர்மிசை யேறினன் குழுவாகி
நிறைந்த வெண்ணிலாச் சேனைகள் சூழ்தர நெடுங்கூளிப்
பறந்த லைக்களஞ் சென்றன னிரவிதன் பகையானன். (உ0௮)

வேறு.

அந்த வேலையிற் பூத வீரரு மவுண வீரரு மடலி னேடெதிர்த், துந்து போர்செயத் தூசி யாகிமுன் புற்ற பூதரங் குடைவ தாயினர், வந்து பின்புறும் பூதர் தானவர் மாறு மாறுமா றூன போர்செயச், சுந்த ரந்தருஞ் சூரன் மாமகன்றூவி னன்கணை தூய பூதர்மேல். (உ0௯)

வாளி பட்டிடப் பூத ராயினேர் வாடி யோடினர் மங்கை பாலகன், றூளி னன்புறுந் திறல்கொண் மொய்ம்பினன் றூன வப்பெருந் தானை யானதைத், துளி யாகவெங் கணைபொ ழிந்திடச் சூரன் மாமகன் றூயன் முன்புபோய்க், கோளி ருங்கரச் சிலைவ ளைத்தனன் கோர வாயிரங் கோல்வி டுத்தனன். (உ௧0)

ஆயி ரஞ்சர மகல மூழ்கிவெந் நகல வேபக லாத மொய்ம்பினன், தீய துன்பமோ டாயி ரஞ்சரந் தீபன் மொய்ம்பிடைச் செலவி டுத்தலு, நோயு முந்துபின் பண்ணல் வில்லையோர் நூறு கோவினு னூறி நிற்கவோர், மாய்வில் வேலினைத் தீய னெற்றியுண் மன்ன வுய்த்தனன் வாகை வாகினன். (உ௧௧)

பெருகு சோரிநீர் மிகவெ ழுந்திடப் பெருகு துன்பமாய்ப் பின்றெ ளிர்தனன், முருகு கொண்டிடுந் தொடையல் வீரனேர் மூரி வெஞ்சிலை முரனெ டும்பிடித், தருகு நின்றிடுந் தகுவ ரஞ்சவே யனில மன்படை யங்கி யின்படை, கருகு மெய்புடைக் கொடியனேர்விடக் கடிய லும்மவை கடவி மாற்றினன். (உகஉ)

மாற்றி வஞ்சகன் கதிர வன்படை மலரி னன்படை மால்பெரும்படை, சீற்ற மாகியே விடலு மன்னவை செலுத்தி வீரனுந் தடுத்து நின்றிட, வாற்றல் கொண்டிடுந் தனது மாயையா லரிய தேரினோ டம்ப ரத்தினிற், றேற்றி டாதொளித் திறுதி மாரிபோற் றூவி னன்சரந் தூய வீரன்மேல். (உகங)

கள்ள வஞ்சகன் முன்பு பின்புமாய்க் கணைசொ ரிந்திடக் காமர் மெய்யெலாம், வெள்ள மானசெங் குருதி யோடவே வீர வாகுவும் வெகுளி கொண்டபின், றள்ள ரும்புகழ்ப் போத கப்படை தனைவி டுத்தலுந் தகுவன் மாயமங், கெள்ளி யாவரு நகைசெ யும்படி யிரிய விண்ணிடைத் தெரிய நின்றனன். (உகச)

மற்ற வன்றனைக் கண்டு சீறியே வஞ்ச காவினி பெங்க ணேகுதி, நிற்றி நிற்றியென் றம்ப ரத்தின்மே னெடிய தேரொடுங் கடிதிலெய்தியே, கற்று ணைப்புயன் கொண்ட லாமெனக் கணைசொ ரிந்திடக் கண்டு மண்டுகோ, லெற்ற ளைந்தசூர் மைந்த னுந்தவங் கிந்த வாறுபோ ரியற்றி னாரோ. (உகரு)

கிட்ட வர்திடுஞ் சேணி லேகுறுங் கிளரு மொன்றையங் கொன்று சென்றுநேர், முட்டு மெட்டதா மாதி ரத்தினு மூரி வானினு முடுகி யேகுறு, மிட்ட மானதே ரிருமை வீரரு மிகழு வார்செருப் புகழு வார்சரந், தொட்டு வால்விறற் சங்க மூதுவார் சூளி யம்புவார் சூழு வாரரோ. (உகசு)

வரையி லோடுமா முகிலி லோடுமேல் வான மோடுநீர் வளமுலாவுதெண், டிரையி லோடுமூ தண்ட மோடுமெண் டிசையிலோடு மத் திசைகள் சூழுமித், தரையி லோடுநீள் பிலத்தி லோடுமத் தான வர்க்கெலா மாச னாகிய, விரையு லாந்தொடைப் பானு கோபனும் வீர வாகுவும் விடுசெ ரங்களே. (உகஎ)

பாங்கு கொண்டுநா ழுயி ரந்தொகைப் பல்ல வங்களாற் பல்லவம்புரிந், தோங்கு சூர்மகன் வீர னேறுதே ரொழிவு செய்யவோ ராயி ரஞ்சரத், தாங்கு வெய்யவன் றேரை வீரனு மழிவு செய்யவில் லமர்பு ரிந்தபின், றீங்கில் வாள்பிடித் திருமை வீரருஞ் சென்றெதிர்ந்துநேர் நின்று போர்செய்தார். (உகஅ)

மன்னி மெம்புகழ்ச் சூரன் மாமகன் வள்ளன் மாமகன் வாள்வி லக்கியே, கொன்னு றுர்திருத் தோளில் வெட்டிடக் குருதி வீழ் தரக் குமர வேள்பத, முன்னி வீரரிற் றலைமை பெற்றுளா ரென் ன லன்வலத் தோளை யொல்லையின், மின்னு வன்னதாய் மின்னு வாளினுல் வீழ்வு றும்படி வெட்டி னனரோ. (உகசு)

சிரு லாவுதன் வலது கைத்தலஞ் சிதைவ தாகவே தியன் மா மக, னெரு லாவுறு மிடது கைத்தலத் திலகு வாள்பிடித் தெதிர வீரனுங், கோர வாளினுல் வாம பாணியைக் குறைவு செய்தவன் கொடுமை யுன்னவே, சூரன் மாமகன் றலையை விண்ணுளார் துள் ளி யாடவே தள்ளி னனரோ. (உஉ0)

வே று.

* மான்மகன் மகன்மகன் மகன் மடிந்திட
லான்மக பதிமுத லமரர் துள்ளினர்
வேன்மகி பனைவினை வீர வாகுவுந்
தான்மன மகிழ்ந்தனன் சபத முற்றியே. (உஉக)

உற்றசிர் முடியற வொளிகொள் பானுவின்
பற்றலன் மடிதலும் பாரின் மேவியே
சுற்றிய படையெலாஞ் சூழ வேலன்முன்
வெற்றியோ டணைந்தனன் வீர வாகுவே. (உஉஉ)

இன்புறு முருகனை யிறைஞ்சி நிற்றலுந்
துன்பொடு வருந்திநீ சூரன் மைந்தனைக்
கொன்புனை புயத்தினேய் கொன்று வந்தனை
யன்பொடு வேண்டிய தறைதி யென்றனன். (உஉங)

என்றிவை குமரவே ளிசைப்பக் கேட்டலு
முன்றனை யலதியா னோர்செ யற்கையு
மின்றுசெய் ததுசிறி தில்லை யாயினு
மொன்றொரு வரந்தனை யுதவ வேண்டுமால். (உஉச)

அண்டர்பொய் வாழ்வையு மயன்பொய் வாழ்வையும்
விண்டுவின் வாழ்வையும் வெஃகிலே னியான்
றண்டைக ளணிந்தநின் சரணத் தன்பையே
கொண்டிட வேண்டுவ னென்று கூறினன். (உஉரு)

என்றுமி யளித்தன மென்று வேலவன்
றுன்றிய புகழுடைத் துணைவர் தம்மொடும்
வென்றிகொ ளிருக்கையில் வீர வாகுவைச்
சென்றிட விடுப்பவவ் விருக்கை சேர்ந்தனன். (உஉசு)

* மான் மகன் மகன் மகன் மகன் என்பதற்கு - விஷ்ணுவின் புதல் வன் பிரமன், அவன்புதல்வன் காசிபன், அவன்புதல்வன் சூரபன்மன், அவன் புதல்வன் பானுகோபன் எனப் பொருள்கொள்க.

பானுவின் மாற்றலன் பதைத்து வீழ்ந்துயிர்
போனதை நாடியே போந்தங் கொற்றர்தாந்
தானவன் றனக்கிது சாற்றக் கேசரி
மேனியிர் தவிசினும் வீழ்ந்த ரற்றினன். (உஉஎ)

அன்னதோர் காலையி லமர்க்க ளத்திடைச்
சின்னம தாகிய சேனைத் தானவர்
முன்னமே கொடுவா மூவில்பு ளைந்திடு
வன்னமே யானவன் வருந்தன் மேயினான். (உஉஅ)

சிரத்தினைக் கரத்தினைத் திருந்து மார்பினைப்
பொருத்திடும் பார்த்திடும் புரளுஞ் சோர்வுறு
மருத்திகொள் வாய்புடைத் தலறு மன்றவன்
பரித்திடுந் துயரையார் பகர வல்லரே. (உஉகூ)

மற்றிதைப் பதுமகோ மளையென் பாளறிந்
திற்றிடு மைந்தன்முன் பெய்தி மேல்விழுந்
தற்றமி லுன்பொடு மாற்றி னனகர்
முற்றினு மழுகுரன் முதிர்ந்த தந்தநாள். (உ௩0)

## சிங்கமுகாசுரன்வதை.

தீயவ னன்னபின் சிலரை நோக்கியே
மாயநம் பகைஞரை மடிவு செய்துபின்
சேயினை யொருமகஞ் செய்தெ மூப்புவன்
காயமிங் கொருபுடை காத்தி ரென்றனன். (உ௩க)

ஓங்கிய விதுபுகன் றுற்ற வொற்றரைத்
தீங்கின னேக்கியே சென்னி யாயிரந்
தாங்கிய வெம்பியைத் தருதி ரென்னலு
மாங்கவர் வடதிசை யளக்கர் மேவினர். (உ௩உ)

ஓவிலா வதனிடை யுயர்ந்த விண்ணுளார்
பூவினர் புகழ்தரு புரத்துட் கோயில்போய்
மேவினர் நிகழ்ந்தன விளம்பி னருனைக்
கூவினன் குரெனக் கூறி னாரரோ. (உ௩௩)

என்றலு மரிமுக னெழுந்து சேனையோ
டொன்றுசீர் மகேந்திர மணுகி யும்பரை
வென்றவ னடிமிசை வீழ்ந்தெ ழுந்துநீ
யென்றனைக் கூவிய தென்னை யென்னவே. (உ௩ச

முந்துற நிகழ்ந்தன முறையிற் கூறியே
கந்தனை முருகவேள் கருதிப் போர்செய
வந்தனு னவனைநீ வல்லை யேகிவென்
றந்துசிர் பண்டத்தின லுறுதி யென்றனன். (உ௩ரு)

தானவன் விடுத்தலுந் தனதின் மேவியுன்
போனக முண்டுதேர் புகுந்தி லக்கமாஞ்
சேனைவெள் ளப்படை சேர வேகினன்
வானவ ரிதுதெரீஇ வாடி யோடினார். (உ௩௬)

எங்கணு யகனெதி ரிறைஞ்சி நின்றரோ
துங்கமா ரரிமுகன் சூரன் பின்னவ
னங்கவன் றனிலும்வீ ரூற்றல் பெற்றவ
னிங்கமர் புரிந்திட வெய்தி னானென. (உ௩௭)

இன்னதை யறிந்துபோர்க் கெழுமி னைத்தலு
மன்னதை யறிந்துசென் றூடன் மொய்ம்பினன்
பன்னிரு புயத்தனைப் பணிந்தெ ழுந்துநா
னென்னலன் றனையழித் துறுகின் றேனென. (உ௩௮)

அன்பொடு விடுத்தலு மகன்ற கன்றிடாக்
கொன்புனை படைக்கலங் கொண்டு தேரின்மீ
தின்புட னேறியே யெழில்கொண் மொய்ம்பினன்
றன்பெரும் படையொடுந் தகுவர்ச் சேர்ந்தனன். (உ௩௯)

ஆயிர மியோசனை யான மெய்யுடைச்
சீயமா முகத்தவன் சேனை யானதும்
போயெதிர் மலைந்திடும் பூதர் சேனையு
மாயிடை யெதிர்ந்துநின் றமர்பு ரிந்ததால். (உ௪0)

திண்டிறற் படைக்கலஞ் சிதறிப் போர்செய
வண்டிய வீரரு மவுண வீரரு
மண்டனிற் சிலர்சிலர் மாயத் தானவர்
தண்டமன் னவரொதிர் சார்ந்து போர்செய்தார். (உ௪௧)

வேறு.

அன்ன காலையிற் பூதர்க ளுடைய வடற்கொள் பூதரிற் சிங்க னென் றொருவன்,றன்னெ டுங்கையிற் றண்டினு லவுணர் தலைகள் சிந்திடச் சாடியே குதலு, முன்னர் நின்றிடு மவுணர்க டம்மின் முரண்கொ ளுந்தச முகனெனுங் கொடியோன்,பொன்னெ டுஞ்சிலை பிடித்துவந் தெதிர்ந்து புங்க வம்பல சிங்கன்மேற் பொழிந்தான்.

வீறி வந்திடுங் கணையெலாங் கதையால் விறற்க ணத்திறை விலக்கலுங் கொடியோன், சிறி யோர்பெருங் கதையினை விடுப்பச் சிங்கன் மார்பகஞ் செறிந்தொடிந் திடலு, மாறி லாவொரு மழுப் படை விடுப்ப வரங்கொள் சாரதன் மற்றதைக் கதையா, லூறு செய்திடக் குந்தமொன் றெறிந்தா னுந்து மாழியோன் றுந்தின னிவனும். (உ௪௨)

குந்த வேலினை யாழிபோ யழிப்பக் கொடிய னோர்கதை குறிப் பொடு விடுத்தா, னுந்து செங்கன தூரத்தின்வந் தமுந்த வுதிர மேல் விழுந்தோடவங் கோடி,வெந்தி றற்றச முகனுரத் தடிப்ப விழுந்து வெய்யவன் வீழ்ந்திட வதுகண், டந்த மற்றிடுந் தகுவர்க ளெவரு மமர்பு ரிந்திட வடலொடு மடைந்தார். (உசச)

அன்ன காலையி லிலக்கர்தங் குழுவி லாற்றல் பெற்றுள வந கனு மொருவன், மன்னு தானவர் தானைமுன் பனுவி வாளி கொன் டவர் மாளவே யழிப்பத், துன்னு தானவ ரோடின ரவரிற் றுன்மு கத்தினன் றுன்னென வெதிர்ந்து, கொன்னு மும்படி பலபலவடி வங் கொண்டு பூதர்முன் கொடுஞ்செருப் புரிந்தான். (உசரு)

ஆய காலயில் வாசையங் கதிரோ னதுதெ ரிந்தன னதிவெ னும் படையான், மாய மானதை யழித்தவுர் தனித்து வஞ்ச னுயி ர வாளிகள் விடுப்ப, வாயி ரங்கணை விடுத்தவை தடுத்தங் கவனு டம்பினி லழுந்திட வளவில், சாய கந்தொட விழுந்தயர்ந் தருவாய்த் தருவ னோடினன் சாரதர் மகிழ. (உசசு)

அந்த வேலையி லிந்தவா றழிந்தா னரிமு கத்தின னெரிமுக மானுன், வந்தெ திர்ந்தன னெதிர்தலும் பூதர் மரக்கு லங்களும் வ ரைகளும் விடுப்ப, முந்து மன்னவ னுசியி லுயிர்ப்பான் முரிந்து போயின முனிந்துவெம் பூதர், மந்த ரங்களு மரங்களும் பிறவு மாகர் தெவ்வன்மேல் வலியொடு விடுத்தார். (உசஎ)

விட்ட வின்னவை மாகமே னிறைந்து வேக மோடுபோய் வி றலரி முகனு, மொட்ட லன்றன்மேற் பட்டன படவு மூறு செய் தில வுடைந்தில விழுந்த, வட்டி டும்படி கரியினந் தனிலோ ரரிபு குந்தென வடற்கணக் குழுவின், வட்ட மானதன் றேரினு மிறங்கி வந்து புக்கனன் மாயைதன் புதல்வன். (உசஅ)

புற்றி னன்சில பூதர்க டம்மைப் பதைத்தி டும்படி பாரவன் டத்தி, லெற்றி னன்சில பூதர்க டம்மை யெயிறு துன்றிய விடிக் குரல் வாயிற், குற்றி னன்சில பூதர்க டம்மைக் குறைத்த னன்சில பூதர்க டம்மைச்,சுற்றி னன்சில பூதர்க டம்மைத் துவைத்த னன் சில பூதர்க டம்மை. (உசகூ)

வேத னூரினிற் சிலவரை வீசும் விரிக டற்களிற் சிலவரை வீசு, மாதி ரங்களிற் சிலவரை வீசு மறலி யூரினிற் சிலவரை வீசு, மீது போலவே யமர்பல வியற்ற வெருவை நீர்விரிந் திருங் கடற் புகுதப், பூத லத்தனிற் பூதர்கள் பல்லோர் போன்றி னுரவன் புகுந்தனன் றேர்மேல். (உருo)

ஈது கண்டனன் பூதர்மன் னவரி லெரிகொள் கண்ணிறு னெதி ரணோந் தவுணன், மீது தண்டமொன் றெறிந்திட வதுபோய் வெய் யன் வையமேன் மேவுசீர் வலவன், றீது கொண்டிடு சிரந்தனைக் களையச் சிங்க மாமுகன் சிறியே பொருதன், டாதி மாமகன் பூத மன் னவன்மே லமுந்த விட்டுழி யயர்ந்துமின் றனனே. (உருக)

தேரின் மீதொரு பாகனை நிறுவிச் சிங்க மாமுகன் சிறிவந் தனுகப், பாரி னேர்புகழ் சுமாலியென் பவனேர் பருப்ப தந்தனைப் பறித்துரோர் விடுப்பச், சிரு லாவுதன் கரத்தினுற் பிடித்துத் தீதில் பூதன்மேற் றிரும்பவிட் டிடலும், வீர முற்றிடு சுமாலிதன் னுரத் தில் விரைந்து பட்டிட மெலிந்தனன் விழுந்தான். (உருஉ)

அனைய காலையிற் றண்டியென் றொருவ னவுணன் வையமுற் றவன்றன துரத்திற், கனமு றுங்கரக் கதையினு லடிப்பக் கதை யொ டிந்தது கரங்கொடு புடைத்தான், றனது தாளினு லவுணனங் கிவனைத் தள்ள வீழ்ந்துபின் றண்டிவின் னெழுந்து, சினம தாய வன் றேளின்மேற் பாய்ந்து செய்ய தாளினுற் றிறலொடுந் துவைத் தான். (உருங)

செறிந்த தோள்களிற் கரத்தினிற் சிரத்திற் சென்று சென்று வன் றிறலொடுந் துவைப்ப, வறிந்தி லானதை யரிமுகத் தவுண னுக மீதிலோ ரீகொலென் றெண்ணிச், சொறிந்து கையினுற் று டைப்பநொந் திரிந்தான் றுலக்க வெண்மரு மிலக்கரு மெதிர்ந்தெ ன்ண், ணிறந்த வாளிகள் சொரிந்திடப் படிமே லிழிந்து வந்தன னி றிதொழில் பயின்றேன். (உருச)

எடுத்தெ றிந்தனன் சிலவர்தந் தேரை யிலங்கு மொன்றினே டொன்றுதாக் குறவே, யடித்தல் செய்தனன் சிலவர்தந் தேரை யங்கை யாற்சில தேர்தனை யள்ளி, யொடித்த னன்சில தேர்களை யுதைத்தா னுரைத்த விப்படி யனேகமங் கியற்றப்,படித் லம்புகழ் வீரர்க ளிரிந்தார் பரிந்து தேரிலப் பதகனே றினனே. (உருரு)

வேறு.

காரிலகு பூதரொடு தம்பிய ருடைந்தசெயல் கண்டான்
வீரமுரு கற்கிளைய நாதனுள மீதினில் வெகுண்டான்
கோரமொ டிருந்ததொரு கைச்சிலை தனைக்குனிவு கொண்டா
னேரிறையின் முன்கணை சொரிந்தவுணர் தானையுயி ருண்டான். ()

கரங்களை யறுப்பன பதங்களை யறுப்பன கவின்றே
யுரங்களை யறுப்பன புயங்களை யறுப்பன வுரக்கந்
தரங்களை யறுப்பன கலன்களை யறுப்பன சயஞ்சேர்
வரங்களை மிகப்புனையும் வாளின்மொய்ம் பாளிவிடு வாளி.(உருஎ)

மாறவுணர் சேனைபல தூளிபட வாளிகொடு வள்ளல்
சீறியமர் செய்தலு மிப்பெரு முகன்றனது சேயோர்
நூறெனு மிலக்கமுடை யாரவ ரெதிர்ந்தனர் நதிக்கோல்
வீறுமுடி லாமென விடக்கணைகள் வீரனும் விடுத்தான். (உருஅ)

விடுத்தவை தடுத்தவ ரெடுத்தசிலை தேரைமிகு வெங்கோ
ளுடுத்தவ னழித்திட மனத்திடை சினத்தவர்க ளோர்
பிடித்தம ரியற்றுற விளிக்கவி ரப்படை பிடித்தே
படித்தல மதிப்பொடு குதித்தவர் தமக்கெதிர் படர்ந்தான். (உருகூ)

வாளது பிடித்துவரு மண்ணலெதிர் வந்தனர் வளைந்தார்
தோளிடை யுரத்திடை கரத்திடை யெறிந்தனர்க ளோயோன்
கோளுருவி லூறிலது கண்டனர் பிடித்தனர் கொதித்தே
யாளரி முகன்குமரர் சிந்திவிழ வாள்விசிறி யட்டான். (உசூ௦)

அங்குலவு மைம்பதுட னைம்பதெனு மைந்தர்தமை யட்டே
துங்கமுறு வீரர்கட னிற்றலைமை பெற்றதொரு தூயோன்
பொங்குமிமை போர்புகழ வையமுறு வைபமிசை புக்கான்
சிங்கனிது கண்டுளம் வெகுண்டணுகி மொய்ம்பனொடு செப்பும்.

ஈனமில்கு மாரனலை யெண்மர்களி லோவல திலக்க
மானவரி லோவலதெம் மூரினிடை தூதுவரு வானோ
வானவிவர் தங்களிலி யாரெனலும் வீரமுறு மண்ணல்
வானவர் குலத்தினை யலைத்தகொடி யோனொடு வகுப்பான். (உசூஉ)

ஆதியரு ளுங்குமர நாயக னடிக்கடிமை யானேன்
றூதனென வந்துமது நற்பதியை முற்பக லலைத்தே
னீதமறு மும்மையட னின்றனனி யானென நிகழ்த்திக்
கோதறுத லுதுபெய ரோதினன் மிகுத்தவிறல் கொண்டான். ()

என்றிடலு முன்றனை யுனக்கிறை தனைக்கடி திறைக்குள்
வென்றிடுவ னென்றிட வெகுண்டுபெதி னெண்கணை விடுத்தான்
சென்றவ னுரத்திடை செறிந்தது முறிந்ததொரு தண்டந்
துன்றரி முகத்தன்விட நாலுகணை கொண்டது துணித்தான், ()

(வேறு.)

நிதில்வீர ரூயிரஞ் சரத்தினைப் பகைத்தவன் சிரத்தினிற் செலுத்தவே செறிந்தொடிந்து போயதா, லேதமான சிங்கனங்கொர் சூலவேல் விடுப்பவே யிராயிரஞ் சிலீமுகங்க ளிளையவீர னெய்யவச்; சோதிகொண்ட சூலமச் சரத்தைநூறி வந்திடத் தூயவீரன்

வாள்கொடே துணித்தனன் றுணித்தபின், பாதிதன் படைக்கலத்தை யவுணன்மீதி லேவின னவனுமன்ன தேவின னமர்புரிந்த திருமையும். (உசரு)

வீறுகின்ற படைகள்பின்பு விட்டுளாரை மேவவே வீரவாகு நெஞ்சமேல் வியந்து பத்தின் மீதினு, லேறுகின்ற கணைகடேவி யரிமுகத்த னிரதமே லிலகுபாகன் முடியறுப்ப விருமைகொண்ட தண்டமொன், றூறிலாத சிங்கனுந்த வுந்துமார்பில் வந்துபட் டொல்லேதூள் பொருந்தவே யொராயிரஞ் சரங்களைச், சூறையென்ன விட்டுவெய்ய னேறுதேரை நூறவே தூயபூதர் கண்டுசென்று சுற்றினர்க ளவுணனை. (உசசு)

அந்தவேலை சீறிவெய்யன் வேறுதேரி லேறியே யாயிரந் தனுப்பிடித் தருஞ்சரம் பொழிந்துநேர், வந்தெதிர்ந்த பூதரைப் பிணம்படுத்தி யெங்கணும் வாளியான் மறைப்பவீரன் வாளியா லறுத்தவன், சிந்துகோல் விலக்கிநிற்ப வாயிரத் திரட்டிகோ டீயன்விட்டு வள்ளறன் றிருத்தனுத் தனைத்துணித், துந்துவீரன் விற்பிடிக்கு முன்னர்நூறு கோடிகோ லுரத்தழுத்த வீறுசோரி யுததிபோ லெழுந்ததே. (உசஎ)

வெய்யசூர்த னுதுதம்பி வெம்பிவிட்ட கோலெலாம் வேலவன்றனுதுதம்பி விற்சரத் தறுத்தவன், செய்யதேரை யாயிரஞ் சரத்தினு லழிக்கவே சிங்கமா முகத்தன்வேறு தேரின் மீதி லேறினன், கையனுந்து கையிலுற்ற பத்துநூறு வில்லையுங் கந்தனன்ப னெண்ணிலாத கணைசொரிந் தழித்திட, வையமுற்ற வானமுற்ற சாரதக் குழாங்களும் வானவக் குழாங்களு மகிழ்ந்தொலித்து நின்றவே. ()

மற்றிவ்வேலை வெகுளிகொண்டு சிங்கமா முகத்தினேன் மாயமான பாசம்வீச மாசிலாத பூதரைக், கொற்றமுற்ற வெண்மரைத் துலக்கமா மிலக்கரைக் கோளுறும் புயத்தனைக் கொதித்துவந்து கட்டியே, வெற்றி கொண்டு விண்ணெழுந்து துண்ணெனப் படர்ந்துபால் வேலைதன்னி லுதயமான வெற்பிலிட் டிருந்ததா, லுற்றதேவ ரீதுகண்டு வாடினர்க ளோடினு ருலவைசென்று முருகனேடுரைப்பவங் கெழுந்தனன். (உசகூ)

மிக்கதேரின் மீதிலேறி வீறுபூத ராயிர வெள்ளமும் பாந்துசூழ விண்ணுளார் புகழ்ந்திடத், தக்கபல்லி யந்தழங்க மன்னுசின்ன மூதிடத் தானவன்ற னுதுமுன்பு சன்முகத்த னணுகவே, மைக்கருங் கடற்புரைந்த வவுணர்சேனை வெள்ளமும் வள்ளலோடு வந்

தபூத மன்னர்சேனை வெள்ளமு, மக்கணம் படைக்கலஞ் சொரிந்து
போர் புரிந்தபோ தவுணர்மாய வீறுபூத ரவருமாய்வ தாயினர். ()

வே று.

இப்பான்மை கண்ட வரிமா முகத்த னிகல்கொண்ட பூதர் குழு
வைக்,கைப்போது கொண்டு மிகவாரி யின்று கடிதுண்ப னென்று
கருதி,மெய்ப்பான வண்ட முடிவைச் சிரங்கள் விறலோடு சென்று
தொடவே,துப்போடு மங்க ணொருமேனி கொண்டு சுராஞ்ச வீது
புரிவான். (உஎக)

கல்லா மனத்த னிருபத்து நூறு காமுஞ் செலுத்தி விறல்
சேர், சல்லாப மோடு குகனோடு வந்த தசநூறு வெள்ள வனிக,
மெல்லா மகட்டி னிடைசேர வாரி யினிதாய் விழுங்க வெழில்சே,
ரல்லார் களத்த னெமையாள நல்கு மமலன் றனித்த ருளினன். ()

இவ்வேலை தன்னின் மிகுமொற்ற ரேகி யிறையான சூர னுடனே,
செவ்வே நிகழ்ந்தசொலவே மகிழ்ந்து சிகரத்தி னுச்சி மிசைபோ,
யவவேலை தம்பி சமர்கண் டிருப்ப வவனேவல் கொண்டு திறல்
சேர், மைவேலை யென்ன மிகுசேனை பின்னு மருவிற்று யுத்த
களமே. (உஎங)

ஈடான சிங்க னெதிராக வீறு மெழிலாக வேல னணுகக், கூடா
நிறைந்த வவுணப் பதாதி குகன்முன் பணைந்து படைதூய், வாடா
வி றற்கொண் முருகேசன் வில்லின் வலியான நாணினொலியால்,
வீடாவ ழிந்த ததுகண்டு தியன் விறலோடு வந்து மொழிவான். ()

பொன்னாட ரெங்கள் பகையாதல் கண்டு புலவோரை யின்னல்
புரிவோ, மன்னாரி லல்லை பகைபல்லை யென்கொ லமர்செய்ய வந்த
வகையென், ஞென்னுனி சைப்ப வெளியாரை மொய்ம்ப ருறு
கண் குயிற்றி லவரைப், பன்னாளு நூறி யரசாள்வ மன்ன பரிசா
லடைந்த னமரோ. (உஎரு)

என்றீ துரைப்ப வலியாள னீயு மெளியார்க ளெங்க ளினமு
நன்றீ துவல்லை யமர்செய்தி யென்ன நலமார் குமார னொருகோன்,
மூன்றீ யவன்றன் மருமத் தழுத்த முதுகிற் பறிந்த ததனால், வன்றீ
நிகர்த்த கொடியோ னுடம்பின் மலிசோரி வந்த தவனே. (உஎசு)

உள்ளூற்ற பூத ரதுபோதில் வேல னொருகோ றுளைத்த வழி
யான், மெள்ளத்த லத்தி னிழியச் சினந்து வெளியைக் கரங்கொ
டடையாக், கள்ளூற்ற தொங்கன் முருகேசன் மீது கதையொன்
றுகைப்ப வமலன், வள்ளூற்ற நாலு கணைசிந்த வேகி வருதன்னடை
நூறி யவைபோய். (உஎஎ)

மங்காத சிங்க னுதல்சென் றொளிப்ப மயலோடு வெய்யனுற வே, சிங்கார மேவு மவன்முன் படைத்த திறல்கொண்ட பாணி கெழு, வெங்காய மிஞ்சி யுறுகின்ற பூதர் விறல்வாளி பட்ட வெளி யா, லங்காய வேலை கடிதே யிறங்கி யமலன்றன் முன்ப னுகினர்.

அப்போது தன்னி லுதயச் சிலம்பி லருள்கொண்ட வேல னொருகோ, றப்போடு கைப்ப வதுசென்று வீரர் தொகையைத் தனுது மிசையே, மெய்ப்போடு கொண்டு கடிதே திரும்பி விறல் வேலன் முன்பு விடவே, மைப்பாவு கண்டன் மகனங் கவர்க்கு மகிழ்வாக வோதி னனரோ. (உஎகூ)

அக்காலை தன்னி லிதுகண்டு சீறி யரிமா முகத்த னனிக, மிக் காரி லாத குமரேசன் முன்பு விரைவோடு வந்து வளைய, நக்கான ளப்பில் கணைமாரி தூவி நலியத் தொலைப்ப விடரிற்;புக்காண்மை யின்றி யுறுகின்ற வெய்ய னிதுகன் டமுன்று புரிவான். (உஅ0)

நூறுன பத்து நெடுவிற் பிடித்து நுதிவாளி சிந்தி முருகன், சீறுவி டுத்த கணையைத் தடிந்து திறல்கொண்ட சிங்க முகவன், மாறுக வேல னிரதத்தி லுற்ற வலவன்றன் மார்பி னிடையே,வீறுயி ரங்கொள் கணைசிந்த நொந்து மெலிவா யிருந்த பொழுதின்.(உஅக)

ஐயன் சினந்து கணை நூறு சிந்தி யரிமா முகங்கொ ளவுணன், வையங் கெடுப்ப நிலநின் றளப்பில் வடிவாளி வெய்யன் விடவே, கையன் றனுக்க டமையா யிரங்கொள் கணையா லொடிப்ப வவு ணன், மெய்யன் றன்மீதி லொருசூல முந்த விறல்வேல னிது புரிவான். (உஅஉ)

ஈரேழ தான கணைசிந்தி முந்தி யெதிர்சூல நூறி யடுகோ,லோரா யிரத்தை யவனோர் விடுப்ப வுரமேவு சிங்க முகவன், சீரான கையி லொருதண்டு கொண்டு சிதறப் புடைத்து வரவப், போரார் சரத் தை யெழுவாளி கொண்டு புனிதன் றடிந்த ருளினன். (உஅங)

மெய்ப்பாணி பின்பு மெழவெய்யன் வைபம் விழுதன் டெடு த்து விடலுங், துப்பாயி ரங்கொள் கணைகொண்டு தண்டு துணி செய்து வேல னுறவே, கைப்பாச முந்த விறைபத்து நூறு கணை கொன் டழிக்க வதனுன், மைப்பாவி யாறு முகனைப் பிடிக்க வலி யோடு வந்த னனரோ. (உஅச)

ஆறுமு கத்த னதுகண்டு வந்த வவுணன் கரஞ்சி ரமெலா, மூறுநி வீழ விருபத்து நூறு டொருபத்து நூறு கணையைச், சீறுவி டுப்ப வவைபின் பெழுந்து செறிவாக வெய்யன் வெகுளா, மாறுக வெண்ணில் வரையைப் பிடுங்கி வலியோடு வீசு தலுமே.()

வளையற்று வந்த வளையற்று வீழ வலியற் றிடாத முருகன், புளையற்ற வாளி மிகவே பொழிந்து புகழ்மேவு கின்ற வவுண, ளிளையுற்ற சென்னி புரமுற்ற கைக ணிலமுற் றிடத்த டியவே, விளைவுற்று மண்ணில் விழுமுன்பு பின்பு விறலோ டெழுந்த வவையே. (உஅசு)

சிங்கார மேவு காமுஞ் சிரங்கள் சிதறித் திரும்ப முளையா, துங்கார மோத விருபாணி யோடு மொருசென்னி யோடு மெதிர்வந், திங்காளெ னக்கு ரிகொன்ருெர் குன்ற மிகலிப் பறித்து விடவே, கங்காளன் மைந்த னெருவாளி கொண்டு கடிதே துணித்த ருளினன். (உஅஎ)

மால்விட்ட வும்பர் சிறைவிட் டிடாது மறமுற்ற சூர னிளையோன், வேல்விட்டு வென்றி கொளுமாறு மன்றி விடுகின்ற தொன்றை விறல்சேர், கோல்விட் டழிக்கு மிதுவே யலாது குமரா யின்றி லைகொலென், ருலத்தை யொத்த வொருதண்டு தன்னை யடலோடு விட்ட பொழுதின். (உஅஅ)

வீரன தண்டு வருசெய்கை கண்டு விறல்கொண்ட கந்தன் வெகுளா, மாரன வஞ்ச ளுயிருண்டு வல்லை வருகென்று கையின் மருவு, மூரன தற்ற குலிசந் தொடுப்ப வுரனோடு சென்று கதையை,நீருக நூறி யரிமா முகத்த னெடுமார்பி னுற்ற ததுவே.(உஅகூ)

மார்பிற் பொருந்தி முதுகிற் பறிந்து வலியோடு செல்ல வவுணன், சோரிப் பெருக்கி னுடனே விழுந்து துயரத்தி னோடு மடியக், கூர்பெற் றிலங்கு குலிசம் படர்ந்து குளிர்வா னதிக்குண் முழுகிக், கார்பெற் றகண்ட னருண்மைந் தனுந்து கரமீ துவந்த திறையின். (உகூ0)

நாகத்தி னும்பர் மலர்மாரி தூவி நனிபாடி யாடி மகிழ, வாகைக்கு மார னிளையோர்க டாமு மலிகின்ற பூதர் குழுவு, மோகைக்குண் மூழ்கி யயலே பொருந்த வுயர்பா சறைக்க ணுகினு, ருகுற்ற வேலை யிதுகண்ட வொற்ற ரசுரேச னோடி தறைவார். (உகூக)

உன்றம்பி யான வரிமா முகத்த னுயிர்போய் மடிந்த னனெனுக், குன்றம்பு ளைந்த சிகரத் திருந்த கொடியோ னிலத்தின் மிசைபெ, துன்றம்பு னற்கொள் முகில்போல் விழுந்து துயரக் கடற்குண் முழுகி, மின்றங்கெ யிற்று விறல்வாய் திறந்து மிகவே புலம்பி யழுதான். (உகூஉ)

---

## சூரபன்மன் வதை.

### வேறு.

ஓங்குதுயர் நீங்கியொரு கோடியெனு மாயிரமு ரொற்றர்களை யொல்லை விளியாத், திங்கதனு மாயிரவெ ரொட்டளவை யண்ட

முறு சேனைக ளனைத்தும் வரவே,யாங்குற வணைந்து புகல் வீரொன
விரைந்தவர்க ளண்டமுள வண்டி யறைய, வாங்கருமி ருந்திறல்
கொ டானவர்க டானைபல வந்தவுய ரண்ட வழியால். (உகூங)

வேதனொடு மாதவ னுறும்பதி நிறைந்தன விசும்பிடை நிறை
ந்த னவெழிற், பூதல நிறைந்தன பெருந்திசை நிறைந்தன புகழ்க்கட
னிறைந்த னநெடும், பாதலநி றைந்தன விபாவையு நிறைந்தன பர
ந்துவரு தூசி யனிக, மாதரவி னூறுபெறு கோடியுறி யோசனை
யிவ் வண்டமு நிறைந்த விறையின். (உகூச)

இன்னபடி தானவர்க டானையுற வொற்றர்க ளிருந்திறல் பொரு
ந்து மவுணன், பொன்னடி பணிந்திவை யுரைத்திட விருப்பொடு
பொருக்கென விருக்கை யிடைபோய், மன்னுபுன லாடியினி தா
மடிசி னுண்டுதிரு நீறு நுதல் வல்லை யிலணிந், தின்னலக னுங்க
ளப மின்னுகல னனவை யிதம்பெற வணிந்த னனரோ. (உகூரு)

ஆளிகளி லக்கெழுப தாயிர மரும்பரிக ளன்னதொகை யன்ன
தொகையே, கூளிக ளிழுத்திடு மிழுக்கிலி ரதத்தின் மிசை கொற்ற
மொ டணைந்த வுணர்கோன், வாளில கெயிற்றவுணர் சேனைபுடை
சூழ்தர மறந்தரு பறந்தலைதனிற், காளியொடு வாதுட மாடிமக
னோடமர் கலந்திட வணைந்த பொழுதின். (உகூசா)

செங்கமல வேதனுட னுந்துமரி கந்தனது செம்பதமிறைஞ்சி
யவுண, னிங்கமர் புரிந்திட வணைந்தன னெனக்குக னெழுந்தனில
சார திவிடும், பொங்கணிகொ டேரனுகி வீரரொடு சாரதர் புகழ்ந்
தயல் பொருந்தி வரவே, தங்கவுணர் சேனையெதிர் செல்லமிகு பூத
ரொடு தானவர் மலைந்து பொருதார். (உகூஎ)

வீறிவரு தானவர்க 'ளாலிலகு பூதர்கள் விளிந்திட விலக்க
முடனெட், டேறுதனி வீரர்க ளடைந்துடைய மொய்ம்புறு மிரும்
புய னெதிர்ந்து கணை தூய்ச், சீறியவ ரிற்சிலரை னூறியழி யாவது
தெரிந்துமுரு கன்பு டைவரக், கூறியிடு மிந்தவகை கண்டருளி
வெஞ்சிலை குனித்தன னகித்த மணையான். (உகூஅ)

மன்னுதனு விற்கணை யளப்பில தொடுத்தருளி வானமொடு
வையக முமாய்த், துன்னுமவு ணப்படை பிணக்குவை படும்படி
துலங்குமுரு கன்பு ரியவே, பன்னசெயல் கண்டுமிக வண்டகட
கத்தின்மிசை யப்புற மிருந்த வனிக, முன்னென வணைந்துகும ரே
சனை வளைந்திட முரட்குமர னிது மொழிவான். (உகூகூ)

மையவுணர் சேனையிடை தேரினை விடுத்தியென மாருதியி
னோடறையவே, யையவிது நன்றெனநிலத்தினில் விசும்பினி லள
க்கரில் விடுப்ப முருகன், பெய்யுமுகி லென்னமிகு வாளிகள் சொ
ரிந்தருள் பிரிந்தவவு ணப்ப டையெலா, மொய்யென விறந்துதி
மோடுபிண மாயிடவு லாவியமர் செய்த ருளினன். (௩.00)

சிகர முலாவு மெழு சாகரமு மாகமொடு தேவர்க ணிறைந்த வுலகுந், குகர நிறத்தவுணர் சேனைபிண மாகநனி துன்றவெழு கின்ற குருதி, வேகமுட னேழ்பிலமு மண்டலமு மெண்டிசையும் விண்ணகமு நண்ணி நிறைய, வாகைமுரு கன்றகுவர் சேனைவரு மண்டவழி வாளிகொ டடைத்த ருளினான். (௩௦௧)

பாலன மொழிக்கவுரி பாலனது பின்புதழல் பன்னிருக ணும்பொ லியவே, மாலணுகு தானவர் பிணத்தினிடை கண்ணுற லும் வாரிநிகர் சோரி யதெலாஞ், சாலவும் வறந்தது நிறைந்திடு பிணக்குவை தனைந்துபொடி யாகி யதுசீர், மாலயனு மிந்திரனு மும்பர்களும் வேலனை வழுத்தினர் மகிழ்ச்சி யுறவே. (௩௦௨)

எம்பரம னின்னன புரிந்தது தெரிந்துள மெரிந்திட விளைந்த வுணர்கோ, னம்பக மிராறுடைய நம்பனெதிர் தேரினொடு மால மென வந்த ணுகலுங், கும்பமத யானையுரி கொண்டவ னளித்த ருள் குமாரனு மெதிர்ந்த ருளினா, னும்பர்கள் பெருஞ்சிறை விடா துயிர் விடுப்பவ னுருத்திவை யுரைத்தி டுவனால். (௩௦௩)

இன்புறு பரன்றரு வரத்தியல்பி லெப்பொழுது மிப்படி யிருப்ப னழியே, னென்பணி புரிந்துழலு மும்பர்மொழி மெய்ம்மை யென வெண்ணியம ருக்க ணுகினா, ¶ பென்படினு முன்றனை விடுப்பதிலை மைந்தனென விட்டிடுவ தில்லை யெனவே, வன்புமன வெய்யனிது கூறவெமை யாளுடைய வள்ளலுரை செய்த ருளுவான். (௩௦௪)

உம்பரா யலைத்தொரு வெங்கயவ வம்புரா யுரைத்தனை யுனது ருவினிற், செம்புனல் குதித்திட வியாம்விடு பெருங்கணைகள் செப்பிடு முனக்கு மொழியென், றெம்பரம னோதலு நெடுஞ்சிலை வளைத்தன னிருந்திறல்கொள் பூத ரெவரும், வெம்பியவு ணன்றனை வளைந்தவன் விடுங்கணைகண் மெய்ப்பட வுடைந்த னரரோ. (௩௦௫)

இன்னசெயல் கண்டுதிறன் மொய்ம்பனுட னெண்மரு மிலக்கரு மெதிர்ந்த வுணன்மேன், மின்னுகணை மாரியின் விடுப்பமிசை பட்டவை விளைந்தவ னொடிந்து விழவு, மன்னவுண னாறுபெறு கோடிகணை சிந்தியவர் வைபமொடு வில்லி னையறுத், தங்கிலையி னான்குபெறு மாயிர நெடுங்கணையை யங்கமிசை விட்ட னனரோ.

எண்மரி லிலக்கர்கள் கலக்கமொ டிரிந்தன ரிருந்திறல்கொள் வாகு வவுணன், றிண்மையுள தேர ணுகி வாள்கொடவ னிள்சிலை சிதைக்கவனை போனை யவுணன், வன்மையுறு மார்பிடை யடித்தழி விழுந்தபர வான்மிசை யெறிந்த னனறிச், துண்மையுறு கந்தனயன் மேவவவு ணன்சிலைகொ டொல்லைகுகன் முன்கு றுகினான்.

---

¶ வெங்படினும் என்றும் பாடம்.

வெந்திறல்கொள் வேலனொடு விற்சமர் புரிந்தவன் விடுங்கணை விலக்கி விறல்சேர், கந்தனிர தத்துறு விறற்கொடி யறுத்துமிழி கறுத்தவன் விடுங்க ணையெலாஞ், சிந்தும்வகை செய்துகணை யேழுகொடு சூரனுறு தேரினி லுறுங்கொ டியறுத், தூர்ந்துநிரை வேலைதனி லிட்டருள வானமுறு மும்பர்க ளொலித்த னரரோ. (ரூoஅ)

அன்னவ ரொலித்தலு மழன்றிரத மோடவுண ரண்ணலுயர் விண்ணி டையடைந், தின்னலுற வும்பர்மிசை வெம்பகழி தூவலு மிளங்குமர னின்று புவிமேற், றுன்னுகணை விட்டவை யறுத்திலகு வையமொடு துய்யகக னத்தின் மிசைபோ, யொன்னல னொடுங்கணை பொழிந்தமர் புரிந்தன னுமைக்கினிமை யான புதல்வன்.

பிலத்தினிடை போவன நிலத்தினிடை மேவுவன பேசரிய வாசை களெனுந், தலத்தினிடை யோடுவன நீடுகடல் கூடுவன சையமிசை பெய்து வனசீர், மலர்த்தவிச யன்புவியி னண்டுவன மண்டுகடல் வாளகிரி தாவி யழியா, நலத்தொடுறு மண்டமுன மேகுவன மீள்குவன நண்ணுமவர் வண்ண விரதம். (ரூகo)

இன்னபரி சன்னவர்க ளேறுமிரு வீறிரத மெங்கணு முலாவு பொழுதின், மன்னவுணர் மன்னளவில் வெம்படை விடுப்பவவை வாள்கொடு துாளி புரியா, வின்னமுத மானமுரு கக்கடவு ளேழிலுட னேழுகணை விட்டவு ணர்கோன், பொன்னிரத நீறுபட நூறுதலும் வில்லினொடு பூமிசை யடைந்த னனரோ. (ரூகக)

வைபமிசை வந்ததொரு சூரன்மிகு வாளிவிட வாளிகொ டறுத்தருளியே, யையனெதிர் சூரனது வீரமுறு தோளின்மிசை யாயிர நெடுங்க ணைகடா, னெய்பவவை பட்டவ னுடைந்துவிழ வெய்யவ னிராயிர நெடுங்க ணைவிடத், துப்பகுகன் மொய்ம்பினிடை வாளிகள் பொருந்திமிகு தூளிகள் பொருந்தி னவரோ. (ரூகஉ)

பின்னுமவு ணன்சொரி சரங்களை விலக்குபு பெருங்கணைக ளாயி ரம்விடுத், தன்னவ னடற்றனு வொடித்திடலு மற்றுமொ ரருஞ்சிலை பிடித்தவு ணர்கோன், மின்னுறு விசும்பினி லெழக்கடிது வேலவனும் விண்ணிடை யெழுந்து பொரவே, மன்னவுணன் மண்ணின்மிசை பின்னும்வர நம்பரனும் வந்தமர் புரிந்தருளினான்.

காசினியி னின்றவ னளக்கரிடை திக்கிடை கவின்றரு பிலத்தினிடைசீர், வீசுபுகழ் மேருவிடை மாயனுல கத்தினிடை மேவவவை தோறு மணுகிப், பூசன்முரு கன்புரிய வண்டமுறு வாயிலிடை போகவவ னுங்கு றுகியே, நீசனொ டெதிர்ந்துவிறல் பட்டகணை விட்டவுண னெட்டிரத மட்ட ருளினான். (ரூகச)

தேரழிய முன்புரி மகத்தினிடை யாதியருள் செய்தமன வேக மதுவாம், வீரமுறு தேரையினி யக்கடிது வந்திட விளங்கதனி லேறி யருளே, யாருமுரு கன்கணைகொ டண்டமுறு வாயிலெ ய டைத்தகத வக்க ணைகடிய், வீரமொ டறுத்திடலு மப்புற மிருந்த படை மேவியது வேல னயலே. (௬கரு)

வந்தபடை கந்தன்விழி பட்டிடலும் வல்லெயின் மடிந்ததய லண்ட மருவு, முந்துபடை வந்திட வுரப்பின னுரப்பலு முடைந் ததய லண்ட மருவும், வெந்திற லுறும்படை வரக்கா முறைம் படையை வேலவன் விடுப்ப வவைபோய், நந்தில்பல வண்டமுறு சூர்படை யனைத்தையு நடுக்குற வடர்த்த வுலவி. (௬கசு)

நந்திர முறும்படை கெடப்பர னளித்ததொரு சக்கர மெடுத் தவு ணர்கோன், கந்தன்மிசை விட்டிட வதைக்குமர வேளொரு கரங்கொடு பிடிப்ப வதுகண், டந்தமி லுருக்கொடம ராடமுரு கேசனறி வானபடை விட்ட டையலான், வெந்திறல்கொன் மாய ம தறுத்துழி யொருத்தனென மேவினன் மிகுந்த கொடியோன். ()

வேறு.

அப்போதினின் மிகுதானவ ராசாயிர கோடி யண்டத்தினு மண்டக்கடி தண்டிக்கும ரேசன், மெய்ப்பாரம ராடப்பினு மிப் பாரிடை வந்தே மிகநொந்து மனத்தாயை நினைத்தானது போதி, னெப்பாரறு மவள்வந்திட நிகழ்வானவை யவளோ டோதிப்ப டை யிற்பட்டவ ருய்ந்தேயெழு மாறு,செப்பாயெனப் புறவேலெயி னெருசாருறு மமுதத் திருவெற்பது வரிலாமெனச் செப்பிக் கரந் திட்டாள். (௬கஅ)

இன்பாகிய வவுணன்றன திரதத்தினை யொருவி யிறைவன் றரு சிங்கத்தி னெருத்தத்தி னணைந்தே, கொன்பாகிய வமுதந்திகழ் குன்றந்தனைச் சென்றே கொடுவாவெனத் தேர்போயது கொடுவந் தது படையின், முன்பாடுறு மரிமாமுக னிரவிப்பகை முதலா முடிவுற்றிடு படைமுற்றவு முன்போலெழுந் திண்டப், பொன்பாவி ய வுலகத்தவர் வெம்பூதர்கள் கண்டே புலிகண்டிடு புல்வாயது போலத்தளர் வுற்றார். (௬ககூ)

கண்டானிது மண்டாதிரு கண்டானுடை வள்ளல் கடுவுண் டவ னெடுவெம்படை கைக்கொண்டு விடுப்பத், தண்டாவிற லவு ணப்படை முற்றுங்கடி தட்டத் தானுப்படை வேலன்புடை சார க்கொடுஞ் சூர.னன்டாசிடர் கொண்டானிடர் விண்டா ரிமையோ ர்க ளெல்லர்புரி சூர்பின்ன ரருந்தேரை விடுப்பக், கொண்டாடு நெ டுந்தேரது கண்டார்க ணடுக்கங் கொள்ளும்படி பொள்ளென்று கொதித்தேகிய தம்மா. (௬உ0)

ஏகித்திறல் வாகுத்தனை வாகுற்ற விலக்கத் தெட்டான திறத் தோரை யிரும்பூதரை யெல்லா, மோகத்தொடு சோகப்பட வாரிக் கடிதண்ட முகடுற்றது முருகேசன் முனிந்தோர்கணை விட்டான், வாகைக்கணை சென்றிந்திர ஞாலச்சக டத்தை வையத்திடை கொடுவந்திட வாகுத்தனை முதலோர், சோகத்தினை யற்றார்குக னிரதத்தினை நிற்பச் சொற்றானஃ தவணின்றது சூர்கண்டு வெகுண்டு. ()

மூதண்ட மளாவுற்றிடு கோதண்டம் வளைத்தேழ் முரணம்பு சொரிந்தானறு முகனுங்கணை தூவித், திதண்டிய சூர்வாளி விலக்கித்தச நூறு திண்மைக்கணை சிந்திச்சமர் சிந்தித்திடு சூர்கைப், போதண்டிய வில்லைத்துணி கண்டானது போதிற் பொருமூவிலை வேல்கொண்டு புகழ்ச்சிக்கும ரேசன், மீதண்ட விடுத்தானது கண்டாயிர கோடி வெவ்வாளி சொரிந்தானருள் வீசும்முரு கேசன். ()

வேலன்சொரி கோன்முற்ற விறற்சூல மறுத்தே விரைவோடெதிர் வரவச்சிரம் விட்டானது சென்றே, சூலத்தலை கவ்விக்குமரன்பாணி பொருந்தச் சுடர்வேலவ னீராயிரந் தூவாளிக ளேவி, யாலக்கொடி யோனுற்றிடு சிங்கத்தை வதைப்ப வங்கத்துணை வெஞ்சத்தொடு வடலேமிகு கடலே, போலப்பொலி வெம்பூதர் வருந்தும்படி நேமிப் புள்ளாயுரு வங்கொண்டெதிர் பொருதானெறி கருதான்.

துண்டங்கொடு கொத்திச்சிறை தன்னான் மிக மோதித் துங்கம்பெறு வெம்பூதரைத் துயர்செய்தது திரிய, மண்டும்புக ழுறுமாமுகன் மகவான்மயில் வடிவாய் வரவுன்னலு மவனப்படி வந்தானவன் மிசையே, சண்டன்றனை யுதைசெய்தவ னருண்மாமக னேறிச், சயமோடு துரந்தேகொடி தாயுற்றிடு புள்ளைக், கண்டம்பட வாள்கொண்டு துணித்தானது போதிற் கடலுற்றிடு விடமொத்திடு கடியோனிது புரிவான். (௩௨௪)

மண்ணாகியும் புனலாகியு மனலாகியும் வங்கூழ் வடிவாகியுமண்டஃதொட வளர்ந்தேபவ னுறலும், விண்ணோடர் வணங்கா திருகண்ணார்முரு கேசன் வீறுயவை மாறுகிய வெங்கோல்கள் விடுத்தே, யெண்ணனது மாயத்துரு மாயும்படி செய்தா னிப்பான்மையி லிருநாளுட னிருநாள்வளா யவுணன், பெண்ணாரு மருங்கண்ணல் பெருங்கண்ணிடை வந்த பெருமானொடு பொருதேயிவை பின்னுஞ்செய லுற்றான். (௩௨௫)

கூற்றுமென வொருபால்வரு மொருபால்வரு மிருள்போற் குவடாமென வொருபால்வரு மொருபால்வருங் குறள்போல், காற்று

மென வொருபால்வரு மொருபால்வரு மனல்போற், கடலாமென வொருபால்வரு மொருபால்வருங் கடிபோன், மாற்றுவிற லினை யோனென வொருபால்வரு மொருபால் வயமைந்தர்க ளெனவேவரு மைவேலையின் முன்னந், தோற்றுவரு விடமாமென வொருபால்வ ருமொருபா றுன்னும்படை யென்னும்படி சூழ்வுற்றிடுஞ் சூரன்.()

இப்பான்மையி லவுணர்க்கிறை யெங்கெங்கு நிறைந்தே யிரு ம்போர்செய வரும்போதினி லிருள்கொண்டிடு கண்டத், துப்பார் கனல் விழியோனருள் சுதனுயிர கோடி தூவாளிக வோவவை தொ லையும்படி புரியா, மெய்ப்பார்சட லேழும்புவி யேழும்பிற யாவும் வீறென்றிய தானல்லது வேறென்றிலை யென்ன, வொப்பாகிய இ ல்லாவொரு வடிவங்கொடு நின்றா னென்னுனிரு நயனங்களு முளமெங்களு முருக. (௩உஎ)

எங்குந்தன துருவாகி யிருக்கின்ற சொருப மெய்திக்குக னி ற்கும்பொழு தின்னற்புரி சூரன், பொங்கும்புக ழுன்போடு மதித் தேயது மாறப் பொள்ளென்று சினந்தண்டர் புலம்பும்படி மாயந், தங்கும்பல வடிவங்கொடு சமராடலு முருகன் றனிவேலை விடுத் தானது தகுவற்கிறை கண்டே, சங்குந்திய வேலைப்புடை தடமாமர மாகிச் சாரக்கதிர் வேல்சென்று தடிந்திட்டது மாதோ. (௩உஅ)

சங்கத்தியின் மேனின்றிடு மாவைக்கதிர் வேல்போய்ச் சாயும் படிசெய்திட்டுறி தகுவற்கிறை கண்டே, துங்கத்தன துருவங்கொடு பொரவேவனை மார்பைத் தான்மென்று பிளந்தண்டர்க டுள்ளும் படி தள்ளி, மக்குற்பொலி வானத்துறு கங்கைப்புன லாடி வந்தே குமரன்பாணி புகுந்தேகதிர் வைவே, லங்குற்றது வெஞ்சூர னிர ண்டான பிளப்பு மடன்மாமயி லொடுகுக்கிட மாகிப்பொர வந்தான்

* ஆறுந்திய முடிகொண்டவ னருளுங்கும ரேச னமராடி யிளைக்குஞ்செய லாலங்கவன் மீதே, பேறுஞ் செயல் போலப்பொ லி நீலச்சிகி மேலே யேறிக்கொடி தானுக விருஞ்சேவ லுயர்த்தான், வீறண்டர்கள் கண்டேயறு முகனைப்பர வுற்றார் வெஞ்சூர்முதல் ப ட்டானென விட்டாளுயிர் தேவி, யீறின்றிய வேலைப்புடை மீனு மிர ணியனங் கிதுகண்டு புலம்பிப்புக ரென்பானை யடைந்தான். ()

---

* ஆறந்திய முடிகொண்டவனத கண்டசரோசன் என்பதும் பாடம். இவ்வாறு கொள்ளுங்கால் ஆறந்தியமுடி என்பதற்கு உயர்ந்த ஆறுதிருமு டி எனப்பொருள் கொள்க.

அனைவர்க்கு மவற்கொண்டு சடங்கானது செய்தா னருமாம ன
னடல்வாகுவை யருளோடு தெரிந்தே, மனமுற்றிடு துயரந்தொடு
றைறையின்புடை வாழும் மகவான்மகன் முதலாகிய வானோர்களை
நந்தம்,முனமுய்க்குதி யெனமுன்புற வுய்த்தானவர் தொழுதே மொ
ய்த்தார்மிகு சூருரினை முந்நீர்கொள நல்கிச், சினமெற்றிய பூதப்ப
டை விண்ணோர்புடை சூழச் செந்திற்பதி வந்தானருள் சிந்தித்திடு
கந்தன். (௩௩௧)

நான்காவது யுத்தகாண்டம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் - எ அ ௪.

வேலுமயிலுந்துணை.

---

உ

சிவசண்முகன்றுணை.

கந்தபுராணச்சுருக்கம்.

ஐந்தாவது

# தேவகாண்டம்.

---

வேறு.

வண்மை தங்கு மயூர மிழிந்தே மந்தி ரத்திடை வந்துபு குந்தே,
திண்மை தங்கு மடங்க லணைக்கண் டேவ ரஞ்சலி செய்ய விருந்
தான், விண்மை தங்கு துணங்கறல் கொள்ள வெள்ளை வண்டிரை
வேலையி னூடே,யொண்மை தங்கு கனற்கதிர் வெய்யோ னெய்பெ
னப்படி வுற்று மறைந்தான். (க)

ஆசை கொண்டுய ரண்டர்க ளெல்லா மாறு மாமுக வண்ணன்
மலர்த்தாள்,பூசை செய்து பராவினர் நிற்பப் பொற்பு லாவு புகழ்த்
தனி வேலோ, னேச முற்றம ரர்க்கருள் செய்தா னீடு கங்கு னெடு
ந்திறல் வெஞ்சூர், மாச றும்படி மாய்வுற வேல்போல் வந்தெ ழுந்
தனன் வண்மை யருக்கன். (உ)

மற்றவ் வேலையில் வேலையில் வேலை வல்லை யேவிய வண்கும
ரேசன், புற்ற ராவின நண்ணிய சென்னிப் புண்ணி யன்கழல் பூ
சை புரிந்தே, வெற்றி மஞ்ஞையின் மீது புகுந்தே வீறு பூதர் மி
டைந்தயல் சூழ, வற்ற மற்ற வெழிற்கொள் பரங்குன் றத்தின் மே
வின னண்டர் வழுத்த. (௩)

அண்டர் கம்மிய னன்ன வரைப்பா லால யத்துட னுடக மாடங்
கொண்ட வீதி யிமைப்பி லமைப்பக் கோல மஞ்ஞையி னின்று

மகன்றே, மண்டு சுந்தர மந்திர முற்றே வண்மை கொண்ட மடங்க லணைக்க, ணெண்ட விர்ந்த வுயிர்க்குயி ராகி யிருக்கு நாத னிருந் தனன் மன்னே. (ச)

துன்னு வானவர் தம்மை விடுத்தே துங்க வீரர் சுலாவ விருப்ப, வன்ன போது பராசர னல்கு மாறு மைந்தரு மாறுமு கேசன், பொன்னு லாவிய புண்ட ரிகத்தாள் பூசை செய்து புகழ்ந்திட லோடு, ஏன்ன லம்பெற வன்னவர் தம்பால் ஞான போதக நல்கி யிருந் தான். (ரு)

ஈது நின்றிட விண்ணவ ரன்னை யின்ப முற்ற வெழிறெய் வயானை, மாதெ னுந்தன தொண்மக டன்னை மன்னி ருந்திறல் வன் குமரேசற், காத ரத்தொடு நல்குவ னென்றே யாழி மாலொடு மம் புயனோடு, யோதி னைவர் நன்றிது நன்றிங் கொல்லை செய்குதி யென்ன வுரைத்தார். (சு)

உம்பர் மன்னவ னுள்ள முவந்தோ ரொற்றன் மாமுக மொல்லை தெரிந்தே, செம்பொன் மால்வரை மீது பொருந்தென் றேவி தன் னொடு சீர்மக டன்னை, யிம்பர் நீகொடு வாவென வோத வேகி யின்ன திசைத்திட வன்னார், கும்ப மாமதவாரண மேறிக் குன்று ருப் பரங் குன்ற மடைந்தார். (எ)

இந்தி ரன்ற னிருக்கையின் மாதோ டிந்தி ராணி யிருந்தன ளங்க, ணுந்து பேருள ஞான தாரி யுற்றி டுஞ்சிறை யற்றிடு மாதர், வந்தி றைஞ்சவு வந்தருள் செய்தே மைந்த னைத்தழு வுற்று மகிழ்ந்தா, ளந்த வேலை வரைச்சிறை கொய்தோ னுறு மாமுக னுலைய முற் றான். (அ)

சென்னி யாறுள தேவ னளித்த சென்னி யாறுள தேவை வணங்கி, யென்னை யாளுடை நாயக நீயிங் கின்ன குன்றிடை யென் றிரு மாதை, மன்ன மன்றல் புரிந்தரு ளென்ன வாகை வேலுள மன்னவ னூனே, யன்ன பான்மை யியற்றுது மென்ன வண்ட ரன் னை லகத்துண் மகிழ்ந்தான். (கூ)

அற்ற மற்ற மகிழ்ச்சி யடைந்தே யால யத்தி னகன்கடை வந்தே, கொற்ற வொற்றர் முகங்க டெரிந்தே கோதி லாமுசு குந்தனு மல்லால், வெற்றி மன்னரு மும்பரு மிங்கன் மேவு மாறு விளங்கிய வைவே, னற்றி றற்றிரு நாயகன் மன்ற லுனே யென்று நவின்றிடு மென்றான். (க0)

என்னி லொற்றர் விரைந்து படர்ந்தா ரீது நிற்க வெழிற்குலி சக்கைக், கன்னொ ராயிர விண்ணிறை தெய்வக் கம்மி யற்கொடு கந்த முலாவும், வன்ன நீப நெடுந்தொடை மார்பன் மன்றல்செய்

றிட மண்டப மன்றம், விண்ணு லாவிய சோலைக ளெல்லாம் வீரெு
மெ்புரி வித்தன னன்றே. (கக)

மிக்க வின்னது நின்றிட முன்னம் வெள்ளி விண்ணெவில் விண்
டொடு காவி, லிக்கு வேளை யெரித்த நுதற்க ணெம்பி ரானுமை
யோடு மிருப்ப, வக்க ணத்தின் முசுக்கலை யொன்றங் காதி மீதினு
மாரியை மீதுங், தக்க வில்லுவ நல்லிலை சிந்தத் தையல் சீறலு மை
யன் விலக்கி. (கஉ)

கூவி ளத்தழை கொண்டெமை யிங்ஙன் கோதில் பூசை குயி
ற்றிய பண்பா,னிவ ளைந்திட வேலை சுலாவு நீள்பு விக்கர சாகுதி யெ
ன்றே,மாவ ளைக்கை யிடத்த னிசைப்ப வைய கத்திடை வந்து பிற
ந்தே,காவளைத்த வபற்கரு வூர்வாழ் காமர் சேர்முசு குந்தனிடத்தின்.

மேக வாகன னெற்றர் படர்ந்தே வென்றி வேலவன் மன்றல்
விளம்ப, வோகை பெய்தி பெழுந்தனி கத்தோ டும்பர் நாத னுறுங்
கிரி யுற்றான், சீக ரஞ்செறி சாகர மண்ணிற் சேரு மன்னவர் யாரு
மடைந்தார், மாக நேரிடை மாதர்கண் மைந்தர் வாவி காவி லுலாவி
மகிழ்ந்தார். (கச)

ஆன காலையி லார்கலி யூடே யாழி யொன்றுள வாடக வையப்,
பானு மூழ்கினன் வந்தது கங்குல் பங்க மற்ற பரங்கிரி மீதே, வேனி
ல் வேண்முசு குந்தனு மல்லால் வீறு மன்னரு மேறுபு வேள்விக்,
கோனை வந்தனை செய்திட வன்னோன் கோதி லாமுக மன்கள் புகன்
றான். (கரு)

அன்ன போதினி லாதவ னுதி யண்டர் மாதவ ராரு மடைந்
தார், மன்னு வேல்விழி மங்கைய ரெல்லாம் வார ணத்திரு மாதை
யடைந்தே, பொன்னு லாமணி செய்தன ரன்ன போது சோபதி
போதினன் மாபோன், மின்னு வேலவ னுலய முற்றே மிக்க வன்
பொடு முன்பு வணங்கி. (கசு)

வார ணத்திரு மாமக டன்னை மன்றல் செய்திட வந்தரு ளென்
ன,வார ணப்பொரு ளாகிய புத்தேளங்கெ ழுந்து மயூர மடைந்தே,
தோர ணத்திரு வீதிபு குந்தே துன்று வானவர் தூமலர் தூவப்,
பூர ணக்கவின் மாதர் நடிப்பப் பொங்கு பல்லிய மெங்கு முழங்க.

இன்ன போல வளங்கள் விளங்க வெம்பி ரானினி தேகி மண
ஞ்செய், கொன்னு லாவிய சாலைமு னீலக் குன்ற மஞ்ஞையி னின்
று மகன்று, னன்ன போதுபு லோமசை பால்கொண் டண்ண று
ளை விளக்கி யகன்றான்,மன்னு வேலவன் மன்ற னிலம்போய் வாள
ரித்தவி சுற்றனன் மன்னோ. (கஅ)

வேல னேவலின் மான்முதல் விண்ணோர் வீறு தங்க விருப்ப விருப்பக், கோல மாமுகு குந்தனு மற்றைக் கொற்ற வானவ ருங்கும ரேசன், பால லடைந்து பணிந்தன ரங்கண் பாரி டங்கள் பரிந்தயல் சூழ, வால முண்ட மிடற்றினன் மாதோ டந்த ரத்திடை வந்தன னம்மா. (ககூ)

மங்கை தன்னொடு மான மிழிந்தே மன்ற லெல்லையில் வந்திட வென்றி, தங்கு வேலன் மகிழ்ந்தெதிர் சென்றே தந்தை தன்னொடு தாயை வணங்க, வங்கெ டுத்தனர் புல்லின ரன்போ டுச்சி மோந்தனர் மான்முத லும்பர்,மங்குல் கண்ட மயூரம தென்ன வந்து வந்து வணங்கி மகிழ்ந்தார். (உ0)

பூம ணம்புரி சாலையுள் வேலன் பூவை போடிறை வற்கொடு போக,மாம லிந்தவ ரித்தவி சொன்று வள்ள லாணையின் வந்தவண் மேவக், காமர் கொண்ட வதன்க ணிருந்தே கந்த னைத்தம கைகொடெடுத்தே,தூம ருங்கி லிருத்தினர் வேதன் சூர்ம டிந்தது முற்று முரைத்தான். (உக)

எந்தை யன்னை வினவி மகிழ்ந்தே யிங்கு மன்ற லியற்றுக வென்ன,வந்த ரத்திறை பேசி மகட்கொண் டங்கண் வந்திட வந்த மடந்தை,நந்தி போடுமை யாளை வணங்க நாரி முற்படு நற்றவி சின்கண், கந்த னோடவ டன்னை யிருத்தக் கண்டு கண்கள் களித்தன ரியாரும்.

கற்பெ ருஞ்சிறை கொய்தவ னங்கண் * கன்ன லொண்புனல் பன்னி விடுப்பப், பொற்பு வேலிறை தாள்கள் விளக்கிப் பூசை செய்து புராரி குமார, னற்க ரத்து மடந்தையை நல்கி நல்கி னேனென நார முகுப்ப, வர்க்கன் மான விளங்கிய செவ்வே ளங்கை தன்னிடையங்கது கொண்டான். (உ௩)

அண்டர் போற்றய னங்கு விதித்த வாசின் மங்கல நாணினை யன்னாள், கண்ட மீது தரித்தள கத்தோர் கந்த நீடு கவின்றெடை சூடா, வொண்டி றற்பெறு வன்னி வலங்கொண் டும்பன் மாதின தோடிம முட்க, மண்டு சீர்நடை தந்திடு தாளை வல்லெ யிற்சிலை மீமிசை வைத்தான். (உச)

இன்ன தன்மையின் மன்ற லியற்றி யீச னோடுமை யாளை வணங்க, நன்ன லம்பெறு பேரருள் செய்தே நாரி தன்னொடு நாதனகன்றுன்,மன்னு வேலவ னங்கொரு வித்தன் மந்தி ரத்திடை மாதொடு வந்தே, பொன்னி ருடுள வாதியை யாதிப் போக வானவர் போக வுளைத்தான். (உரு)

---

* கன்னல் - கரகம்.

விண்ணு லாமிமை யோரை விடுத்தே வீரர் வாயிலின் மேவ
விருத்தி,யெண்ணி லாவெழில் கொண்ட விருக்கை யெய்தி ராட்டி.
யொ டெய்தி யதன்கண், டண்ணி லாவிய மஞ்ச மணைந்தே தைய
றன்னொடு தன்னிகர் பெம்மா, னுண்ணி லாவு விருப்பொடு வைய
முய்ய நற்கல வித்தொழி லுற்றான். (உசு)

(வே று.)

தாவி லும்பர்க டத்த மிருக்கையின்
மேவி னாடல் வேன்முசு குந்தனு
மோவின் மன்னரு முந்தனி கத்தொடு
பூவி லுள்ள புரங்களிற் போயினர். (உஎ)

மன்னு வெற்பில் வரையகல் வைகலெம்
மன்னை யோடு மமல னமர்ந்தரோ
பின்ன ரோர்பகற் பிடுவிண் ணோர்தொழக்
கொன்னு லாமக் குவட்டினை நீங்கினான். (உஅ)

தவள நித்திலச் சங்க முலாவிய
வுவள கப்பரங் குன்றை யொருவியே
பவள வார்சடைப் பண்ணவன் மைந்தனுந்
துவள மேவு துறக்க மடைந்தனன். (உகூ)

அன்ன காலை யமரர்கள் கம்மியன்
றன்னை யின்ன தலத்திடை முன்புபோ
னன்ன லங்கொ ணகர்புரி வாயெனத்
தொன்மை போலத் துறக்க மியற்றினான். (௩0)

அந்த நாகத் தரசு புரிந்திட
விந்தி ரற்கங் கெழின்முடி சூடுவித்
தந்தி வான்மதி யானன மாதொடு
மெந்தை யங்க ணிருந்தன னெண்ணினான். (௩க)

தேனு லாந்தொடைத் தேர்மிசை யேறியே
வான மேன்மக வானை யிருத்தியே
சேனை வீரருந் தேவியுந் தானுமாய்க்
கான மேவு கயிலையின் மேவினான். (௩உ)

மங்கை யீசன் மகிழப் பணிந்தெழுந்
தங்க ணின்று மருள்விடை கொண்டுசீர்
பொங்கு கந்தப் பொருப்பினின் மேவினான்
றுங்க வீரருந் தொன்மையில் வைகினார். (௩௩)

இன்ன பான்மை யிருந்திட வும்பர்கோன்
பொன்னி னூடு புரந்தர சாற்றுழி
மன்னின் மின்னிகர் வாழ்க்கை துறந்திடாத்
தன்னை நேர்கதி சார்ந்திட வெண்ணினான். (௩ச)

துறக்க வேந்தன் றுறக்க வினந்தனைச்
சிறக்கு மும்பர்க டேசிக னேர்ந்துவந்
தறக்க ருத் * துல காயத மாமதத்
துறத்தி ருப்பின னாழ்வினை போலவே. (௩௫)

வே று.

அன்னவ னுரைத்த பொய்யைமெய் யெனக்கொண் டறிவிலா மகபதி சயந்தன், றன்வச மாக வாசினை நிறுவிச் சசியொடு கலந் துவீற் றிருப்ப, மன்னர சியற்றுஞ் சயந்தனங் கொருநாள் வானவர் குருவினை நோக்கி,யின்னநா ளளவுஞ் சூரனுன் மெலிந்த தென் கொலியா மெனவவ னிசைப்பான். (௩௬)

ஐந்தாவது தேவகாண்டம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் - அ௨०.

வேலுமயிலுந்துணை.

உ

சிவசண்முகன்றுணை

கந்தபுராணச்சுருக்கம்.

ஆறாவது

# தக்ஷகாண்டம்.

முன்பொரு பகலி லிமையவர் பரவ முளரியந் தவிசிடை முதல்வ, னின்புற விளங்குஞ் சத்திய வுலகத் திருந்தன னிருந்திடு மெல்லைவக், கொன்பொலி யனையான் றனையரோர் பதின்மர் குழுவினிற் றக்கனுங் குரிசின், மின்பொலி நுசுப்பு வாணிசேர் புயத்தோன் வியன்முக நோக்கியே வினவும். (க)

மொய்வள ரமரர்க் கிறையவ னாகி மூவரி லுயர்ந்தவ னாகி,பெவ்வகை யுயிர்க்கு முயிரென விருக்கு மியல்பினோன் யாவனென் றிசைப்ப,மைவள ருருவக் குரிசிலும் யானு மாறுகொண் டுழிபழல் வடிவாய்ச், செவ்வொளி பரப்பி யெழுந்துவா னிமிர்ந்த தேவனே யதிகமார் தேவன். (௨)

* உலகாயதமதக் கொள்கையை "ஊடுவே துணர்வ துற்ற கல்விமங் கையரை யுள்கி, வாடுவே தடியில் விழ்ந்து வருந்துவ தருந்த வம்பின்,கூடுவே துணர்வு கெட்டுக் குணமெலாம் வேட்கை யேயாய், நீடுவே தின்ப முத்தி யிந்நிலின் முர்கண் முத்தர்" என்பது முதலிய சிவஞானசித்தித் திருவிருத் தங்களால் உணர்க.

என்றய னிசைப்ப வொருதொழிற் புரிவா னிருதொழிற் செயு நமக் கிறையாய், வன்றிறல் படைத்த தென்கொலோ வெனது மைந்தகே ளெங்களைச் சுரரைத், துன்றுபல் லுயிரை யீற்றின் மாய்த்திடலாற் றோற்றுவித் தவனவ னன்றோ, வன்றியு மவனே யெங்கள்பா லிருந்தின் டளித்தலும் புரத்தலு மருள்வான். (௩)

எம்மொடு மொருவ னாகியோர் கிரியையியற்றுவான் போலவு மியற்றும், பொம்மல தடைந்த வுயிர்தொறு மலரிற் பொருந்திய விரையெனப் பொருந்துஞ், செம்மைகொ ளவனே மறைமுதற் கலைக டெரிந்தெமக் குணர்த்தலாற் றெளிந்தே, மம்மர்கொண் மனத்துப் பேதையா யினையோ வவனையெம் போலநீ மதித்தாய். (௪)

எனவிதி புகல வவன்மக னவில்வா னிறையவ னருளிய மறைக, ளனைவரு மனைத்தும் பிரமமென் றியம்பிற் றையவீ தென்கொலென் றறையத், தினகரச் செழுங்கட் பகவனைப் புகழ்த றிண்ணமற் றவையெலா முகமன், கனைகடற் புவியந் தணரையா னெனவே கழறுதல் போலநீ காண்டி. (௫)

ஆதலா லவனே பதியெனுங் கடவு ளருந்தளை பொருந்திய வுனு நாங்,காதலா லவன தருள்பெறு மடியர் கருதில்வா ராததொன் றில்லை, * சூதலா லனைய முலைகுழ லகட்டுத் தோகையோர் மருங்கினிற் றுலங்குங்,கோதிலா வரனை யடைதிநீ யென்றான் குளிர்மலர்ப் பொகுட்டில்வாழ் குரிசில். (௬)

அல்லிமா மலர்மே லிருந்தவன் மொழிந்த வமுதவா சகஞ்செவி புகுதச், செல்லுறழ் மிடற்றோ னிறையென வெவர்க்குந் தெளிந்துமா னதத்தடத் தடைந்து, மல்லல்பெற் றிடுவான் பரமனைக் கருதி வருடமா யிரந்தவம் புரிய, வில்லன புருவத் துமையொடும் விடைமேன் மேவினு னிணையிலா விமலன். (௭)

அன்னது தெரிந்து தக்கனெம் மடிக ளடிகளை வணங்கினின் றேத்த,வுன்னது கருத்தி லருத்தியே தனைய துரைத்தியென் றுரைத்திட வுரைப்பான், மன்னுமார் கலிசூ ழுலகும்வா னுலகு மலரயனுலகுமா லுலகு, மென்னதா ணையினின் றிடவுநிற் புகழ்வோ ரெவருமென் றெனைப்புகழ்ந் திடவும். (௮)

எந்தைநின் னிடத்தி லிருந்திடு முமையா ளெனதுமா மகளென வரவு, மந்தணன் வடிவா யணர்ந்துநீ மணஞ்செய் தருளவும்

* "சூதலாலனையமுலைகுழலகட்டுத்தோகை" என்பதற்கு சூதையொத்த முலையையும், அல்லியொத்த குழலையும், ஆலையொத்த வகட்டையும் உடைய உமாதேவியார் எனக்கொள்க.

வேண்டுமென் றறையக், கந்தரங் கடுத்த கந்தரக் கடவுள் கருணை யா லிவையளித் தொளித்தா, னுந்துசீர் படைத்த சிறுவிதி மனத்தி லோதிம வூர்தியை நினைத்தான். (கூ)

அன்னவா கனத்தோ னன்னவா றறிந்தாங் கடைந்துநின் றுசிக ளறையப், பொன்னுலாம் புரிசைப் புரியெனச் சிவணி புரியென த் தக்கமா புரியென், றின்னதீர் பசிபொன் றியற்றவங் கதிற்போ யெழிலரித் தவிசின்மே லிருந்து, தன்னவா னவர்கோன் முதலி னோர் பாவத் தனியர சாற்றினன் றக்கன். (க௦)

மற்றவன் மனைவி யாயினள் § வேத வல்லியாம் பெயருடை மடந்தை, கற்றைவா ரளகத் தவடனை மலரோன் காதலன் காதலாற் கலந்து, முற்றவந் தனிலா யிரஞ்சிறார்ப் பயந்து முப்புரி நூல்விதி முடித்துக், குற்றமின் மறையு மனையவர்க் குதவி யினையன வாசகங் கூறும். (கக)

நீவிர்க ளெவரு முயிர்த்தொகை படைப்பா னிமலனை நினைந் துமா னதத்தின், மேவிநோற் றுளத்தின் விழைந்தது பொருந்தி மீள்திரா லிவணென விடுப்பப், பூவில்வண் டினங்க ளிரைக்குமத் தடத்துப் பொருந்தியான் டருந்தவம் புரிந்தா, ரோவில்சீர் படைத் த நாரத னவண்சேர்ந் துவர்தவ நோக்கியீ துரைப்பான். (கஉ)

மெய்த்தவம் புரிவீ ரேதுகா ரணநீர் வெஃகிய வியல்பென வினவ, வுத்தம முனிகேள் படைப்பது பொருட்டா வுழந்தன மீ தெனு வுரைப்ப, முத்தியைக் கருதா தவத்தொழில் புரிவான் முன்னினீர் பவமிதென் றவர்தம், புத்தியைத் திருப்பி யுண்மைவீ டளித்தான் பொருவினு ரதனெனும் புகழோன். (கங)

சேயினோர் கதியிற்புகுந்தவா றுளத்தாற் சிறுவிதி யறிந்து நோய் செறிந்தாங், காயிரங் குமரர்ப் பயந்தவர் தமக்கு மவர்க்கு முன் னவர்க்குரைத் ததுபோ, னேயமோ டியம்ப வவருமா னதம் போய் விகரிலா வருந்தவம் புரிந்து, தூயநா ரதனன் முன்புவீ டடைந்த துணைவர்போ லின்பவீ டடைந்தார். (கச)

ஈதையு மறிந்து வெகுண்டுநா ரதனை யெங்கணுஞ் சுழல்கவென் றிசைத்து, மேதகு புகழ்சேர் தக்கனே ரிருபான் மேலுமூன் றாகிய வேற்கண், மாதரை யுதவித் தருமனே முதலா மாதவர்க் களித்திரு பானேழ், கோதையர் தமையின் றவரைமா மதிக்குக் கொடுத்திது சசியொடுங் கூறும். (கரு)

---

§ வேதவல்லியென்பவள் பிரமதேவருடைய பாதத்தில் உற்பத்தியான வள்.

எல்லவ ரிடத்து மருத்திபோர் படித்தா யிருத்தியென் றிசைத் தனன் விடுப்ப, வல்லைவான் மதியக் கடவுள்வா னணுகி வளரொளி யிரலையே முதலாய்ச், சொல்லிய விருபா னெழுவரா மடவார் துணை முலைக் கிரிகண்மேற் றோய்ந்து, மல்லலங் கலவி யாரமு தருந்தி வாழுநா ளூழ்வினை வலியால். (கசு)

ஆரன்மா தினையு மவடனக் கிளைய வணிகொண்மா தினையுமே யவாவிற், சேருதல் புரிந்து துறந்தன னொழிந்த தேவிமார் தமைய வர் சினம்பூத், தேருலாம் புகழ்தோய் தந்தைமாட் டணுகி யிந்தவா றியம்பவு மனைபா, னேரிலாச் சசிதன் கலையெலாங் கலைய நிகழ்த்தி னன் கொடியகு ணிலையே. (கஎ)

ஐந்துட னொருபான் கலைகளோர் பகற்கொன் றாகியே யழிய வோர் கலையோ, டிந்திரன் புடைபோய் நிகழ்ந்தன விளம்பி யென் செய்கே னிதற்கென விசைப்பச், சுந்தரக் கமலத் தயனொடு துணைக்கிற் சொற்றரு தனயனை யிரந்துன், வெந்துயர்ப் பெருஞ்சூ ளக ற்றுமென் றவன்பால் விடுத்தனன் குலிசவேல் விடலை. (கஅ)

சிதள கிரணத் தவிர்மதிக் கடவு டிசைமுகத் தொருவனைச் சேர்ந்தாங், கோதின னிகழ்ந்த வுனதுகான் முளைக்கி துணர்த்திநோ யொழித்தியென் றுரைப்பப், போதமில் கொடிய னெனதுரை மதி யான் புகலில்வெஞ் சிற்றமே புரியு, மாதுபா கனைநீ யடைதியென் றறைய மருவினன் கயிலைமால் வரையில். (கசு)

நந்தியெம் பெருமா னருளினால் விடுப்ப நாதனை வணங்கிநின் றயன்சேய், தந்தசூ ளதனுன் மெலிந்தன னிதனைத் தவிர்த்தியென் றுரைத்தலுஞ் சடைமே, லிந்துவி னழியாக் கலைதனைத் தரித்தே யிதனை நா மணிந்ததா லிதுதா, னிந்தனை பொருந்த வழிந்திடா திதனி னீடுகின் கலையெலாங் கூடும். (உ0)

ஐந்துட னொருபான் பகலெலாம் வளரு மன்னநாட் பின்னரோ சுருங்கு, மிந்தவா றொழுகு மெனவிடை கொடுப்ப வெழின் மதி நிறைந்துவா னெழலுஞ், சந்தனை நெடுந்தோட் டக்கனீ துணர்ந்து தனதுரை தடுத்தலாற் பரனைப், புந்தியின் முனிந்து புலகனு முனிசொல் புந்தியாற் சினமொரீஇ யிருந்தான். (உக)

வே று.

நின்றிட வினையது நிமலன திடைசேர்
குன்றென வளரிரு குவிமுலை யுமையாள்
வென்றிய துறுசிறு விதிமக ளெனவே
வன்றவ நிலைமையில் வருசெயன் மொழிவாம். (உஉ)

விண்டொடு கயிலையின் மிசையரி யணிமே
லண்டர்க ளழவெழு மழல்விட மமுதா
வுண்டவ னுறைபொழு துமையவள் பணியா
மண்டிய வுணர்துமெய் வகைபுக லெனவே. (உங)

செயல்குண முருவிவை செறிதில மெவனும்
மயலற நிறைகுவ மருவரு வுருவென்
னியல்பொடு பலவடி விசைகுவ மெனவண்
கயல்விழி யுமையொடு கழறின னிமலன். (உச)

சதிறை புகறலு மிவனுரு விலையென்
ருேதினை பலவடி வுளதெனு மியல்பின்
றேதென வவைபெம தருள்வடி வெனவிங்
காதலி னெனதுயர் வடிவவை யெனலும். (உரு)

வேறு.

உன்னை நம்மெதிர் மனந்தனில் வியந்தனை நயந்தா யுனதிடத் திறு முனைபலா தனைவர்க ளுள்ளு, மன்னி யாமிருந் தியற்றுவ மியற்றுத றவிர்ந்தான் மதியெ லாமொரீஇ மருவுவர் சடமதாய் மாதோ, வன்ன வாறுநீ தெரிதியென் றவளியுன் டவன்முன் னுன வானவ ரானவ ரேனைபோ ரகத்துட், டுன்னி யாங்குனர் வளித்திடு மியற்கையை விடுத்தான் ருேன்றல் பொன்றுத லின்றிவாழ் கின்ற நக்தோன்றல். (உசு)

எங்க ளுயகன் கணப்பொழு தினையவா திருப்ப வேனை யோர்க்கெலா மெண்ணிலா யுகமதா யெவருக், தங்கள் செய்கட னுகிய முறையெலாந் தவறிச் சடம தாகியே சார்தலுங் கவுரியாந் தலைவி, கங்கை வார்சடைக் கருணையங் கடலடி பணிந்து கடிய னேன்புரி பெரும்பிழை கருத்தினிற் கருதே, லெங்க ளுதவிங் கருள்சுரந் தெவ ராயு மெழுப்பென் றறைந்தி ரந்திட வெழுப்பின னுருத்திர ரவனா. (உஎ)

ஒன்று மேவிய பதின்மரா முருத்திர ரொழுந்தே யுவரி வார ணஞ் சுலவுபூ வுலகில்வந் துலவாப், பொன்ற யங்கிய கொன்றையந் தொடைசெடுஞ் சடிலப் புனித நாதனை யருச்சனை * யருச்சுனைப் புலிமாட், டன்று செய்தலாற் பரம்பொரு ளவரையு மெழுப்ப வனைத்த ளுதியோர் மனந்தெளிந் தெழுந்தன ரதற்பின், சென்று வானிறக் கயிலையஞ் சைலமேன் மருவித் திரிபு ராரியை வணங்கிநின் றிவையுரை செய்வார். (உஅ)

என்னி கர்தகா ளறிவெலா மொருவியே சடமா யெங்க டங் கடன் மறந்தன விறந்ததி திசைந்தே, மன்ன லேயவை திரவொன் றருடியென் றறைய வினைய தீமைக ளுமையவ டனதிடத் தாகு, நன்னு தும்பதத் தெனவிடை கொடுத்தன னதற்பி னக்க னுரியைத்

* அருச்சனைப்புலி—திருவிடைமருதூர்.

தக்கன்மா மகளென நனூலி, மண்ணில் வாழுதி வந்தியா மனத்து மென் றிசைப்ப வணங்கி ஞள்விடை கொண்டனள் கருணைசேர் வல்லி. (உகூ)

அணியு மிந்துவி னிளநிலா வெறிப்பது கடுப்ப வறல்ப ரந்த செஞ் சடைமுடிக் கடவுளை யகன்று, மணியு மாரமுங் கனைகளிற் றிரைகள்வந் திறைப்ப மருவு காளிந்தி வனசமேல் வலம்புரி வடி வாய்ப், பணிகு வார்பிறப் பறுத்தருள் பரம்பொரு ளுமைம் பன்னி யன்னவன் பன்னியங் கிருந்தனள் பன்ன, டணிவி லாப்புகழ் மாசி மா மகப்புன லாடத் தக்க னென்பவன் மறைக்கொடி யொடுமவண் சார்ந்தான். (௩௰)

அண்டர் சூழ்தர மேவிய தக்கனங் நதிநீ ராடி மீள்பொழு தா ங்கொரு பாங்கரி னலர்மே, லெண்ட விர்ந்திடு முயிர்க்கெலா முயி ரென விருப்போ னிடம்பி ரிந்தவள் வலம்புரி யாகிவீற் றிருத்தல், கண்டெ டுத்துழிக் குழவியா யினளவன் வியந்தே கவுரி யெம்மக ளாகிவந் தனளெனக் களித்து, மண்டு சீருள மறைக்கொடி தளிர்க் கரத் தளித்து மன்னு தன்னக ரன்னவ னடைந்தனன் மன்னோ. ()

காதன் மீக்கொளக் கவுரியை மறைக்கொடி வளர்த்தாள் கருணை வான்முக வையையை யாண்டவண் கடப்பச், சீத வாண் மதி யணிந்தருள் பரம்பொருள் வதுவை செய்ப வேதவஞ் செய்வ லென் றுமையுளா செய்யப், போத நீடிய தந்தைதா யுளந்தனின் மகிழ்ந்து பொருவி லாவொரு மாடமப் புரிக்கயல் புரிவித், தாத ரம்பெறு கன்னிமா ரொடுமெதில் விடப்போ யாண்டு சென்றிருந் தருந்தவம் புரிந்தன ளமலை. (௩உ)

பத்தின் மேலுமங் கோரிரண் டாகிய பருவம் பருவ ரற்பிறப் பறுத்தருள் பராபரை படைப்பத், தத்து வார்திரைக் கடற்கடு வடக்கிய மிடற்றோன் றக்கன் மாபுரத் துமையவ ளிருந்திடுந் தல த்து, மெத்து சீரொரு மறையவன் போலவர் தனுக மிகவு மெம்பி ரார் கன்பரிங் கிவரென விருப்பு, வைத்த சிந்தைய ளாகியாங் கெ ழுந்தெதிர் நடந்து வணங்கி யேத்துபு நின்றன * ளறமெலாம் வள ர்ப்பாள். (௩௩)

* "மேதகு மாதுலர்க் குச்சாலே யேறு விடுத்தல்கலே, யோதுநர்க் குண்டி விலங்கிற் குணவோ டியர்பிணிநோய்க், தேன் மருந்து சிறைச்சோ றளித்த லியல்பிறரின், மாதுயர் காத்தனற் கன்னியர் தானம் ‡ வழங்கலுமே" எனவு ம், "வண்ணன்புன் னுவிதன் காதோலை சோலை மடந்தடம்வெண், சுண் ணும் பறவைப் பிணஞ்சுட றாரியஞ் சோறளித்தல், கண்ணுடி யாவிற் கு ரிஞ்சுகல் வாயுறை கண்மருந்து, தண்ணீர்ப்பந் தற்றலைக் கெண்ணெய் பெண்போகந் தரலையமே" எனவும், "கற்ற வறுசம யத்தார்க் குணவு க ருதும்விலே, யுற்ற தளித்துயிர் மீட்டல் குழவிக் குதவனற்பால், மற்று மகப் பெறு வித்தல் சிருனா வளர்த்த லெனப், பெற்ற விவற்றினை யெண்ணுன் கறமெனப் பேசுவரே." எனவும் வரும் செய்யுள்களான் உணர்க. ‡ வழங் கல்—தின்பண்ட நல்கல்.

எம்பி ராட்டியை யெம்பிரான் றெரிந்தொரு பொருள்வேட் டீண்டு வந்தனன் தருதியே லுரைப்பமென் றிசைப்ப, நம்ப கேட்டி யெற் றிசையுமேற் றருகுவ னதனை நவிறி நீயென வுன்னமனம் புரிந்திடு நயப்பா, லெம்பர் மேவின மதற்கிவன் மருத்தினி யுரையே லென்று கூறலு மிடர்நெடுங் கடலில்வீழ்ந் தெழிறேய், கும்ப மா முலை செவித்துணை காத்திரு லடைத்துக் குமுத வாய்திறந் தமுத வா சகமிவை கூறும். (௩௪)

வேறு.

பெய்தே னிதழித் தொடையும் பிறையும் புனைவோன் வதுவை
செய்தே யருளத் தவமே செய்வே னுடனீ யிசைத்தாய்
பொய்தோய் மனத்தோய் கடிதே போபோ வென்னப் புகன்று
வைதே யொருபா லகன்றாண் மறுவில் கற்பின் மடவாள். (௩௫)

இவ்வா றமலை யகல வெவருந் தெரியா வண்ண
மைவாழ் களநங் கடவுள் வளர்தன் னுருவ மருவச்
செவ்வாய்க் கருங்கண் ணுமையா டெரியா விழிநீர் சொரியா
வொவ்வா வன்பிற் றொழுது முயர்கன் னியரி துரைப்பார். (௩௬)

மன்னுங் காதன் மறையோன் மாயம் வல்லன் கொல்லோ
வென்னே யிதுதான் கன்னி பெம்மை நோக்கி லாளென்
றன்ன கடையார் தம்மி லங்கண் சிலவ ரோடித்
துன்னும் புகழ்சேர் தக்கன் முன்ன ரிதனைச் சொன்னார். (௩௭)

அந்த வேலை யவனு மறிவா லரனென் றறிந்தே
சிந்தை மகிழ்ந்து பரன்முன் சென்றே போற்றி நின்றே
யெந்தை யெனது நகரி னெய்த வேண்டு மென்றே
கொந்தார் குழலா ளொடுதன் கொடிமா ளிகையுட் கொணர்ந்தான்.

ஆதி முதல்வ னங்கோ ரரியா தனமீ தமர
மாது தன்னை வேத வல்லி புல்லி மகிழ்ந்தே
சோதி நன்னி ராட்டித் துலங்கு கலன்கள் சூட்டிக்
கோதி லுயிர்கட் குயிராங் குழகன் பாங்கர் விடுத்தாள். (௩௯)

கருந்தா மளகக் கவுரி கருணைக் கடலின் புடைவந்
திருந்தா ளிருந்த வமையத் திமையோ ரயன்மால் குறுகிப்
பொருந்தா தாவிற் பணிந்தே புனைத் ரிதழிப் பிரசஞ்
சொரிந்தார் சடையா னயலே சூழ்ந்தார் நெஞ்சம் வாழ்ந்தார். (௪௦)

வேறு.

தக்க னப்பொழு தெழுந்தனன் மறைக்கொடிதளிர்க
கைக்க ணுற்றசிர கப்புனல் விடக்க வினுலாஞ்
செக்கர் பெற்றகம லக்கழல் விளக்கி நுதல்சே
ரக்க நக்கனை யருச்சனை புரிந்த னனரோ. (சக)

அருத்தி தன்னுட னருச்சனை புரிந்த பினரன்
காத்தி லம்பிகை கரத்தினை யளித்தெ னதுகன்
வரத்தில் வந்துமக ளானவுமை யாளை மறையின்
சிரத்தி னிற்குமிறை நிற்குதவல் செய்த னனியான். (சஉ)

என்று கூறியுத கத்தினை விடுப்ப விமையோர்
வென்றி யன்பொடு புகழ்ந்தனர் மகிழ்ந்த னர்வினாக்
கொன்றை வேணியன் மறைந்தன னிறைந்த துயர்கொண்
டன்று சங்கரி வருந்திய துனைப்ப தரிதால். (சங)

மன்னு தக்கனிவை கண்டழ லெனச்சின மரீஇ
நன்ன லம்பெறு கரத்துணை புடைத்த னனகைத்
தென்னை யெண்ணலன் மறைந்துவசை தந்த னனெனு
முன்ன வன்றனை மொழிந்தன னிகழ்ச்சி மொழியே. (சச)

பண்டு போலவுமை மாடம தடைந்து பரிவால்
மண்டு நற்றவ மியற்றின ளியற்ற மகிழ்வாய்
விண்டு வன்னதன மங்கையெதிர் வந்து விடைமேற்
கொண்டு போயின னெழிற்கயிலை மீது குழகன். (சரு)

கன்னி மாரிது தெரிந்தயன் மகன்பு டைகலந்
தின்ன செய்கையுனா செப்பவிறை வன்ற னையிகழ்ந்
தன்ன நான்முதல் மதித்தில னிருப்ப வதனைத்
துன்னு வானவ ரறிந்தறைகு வாரி னையசொல். (சசு)

தக்க னக்கனை மதிக்கில னிறத்தல் சரத
மிக்க வன்னவ னிடும்பணியி னிற்கும் வினையா
லொக்க யாமுமழி வாகவரு மென்ற வனுறும்
பொக்கின் மாநக ரடைந்தவனொ டின்ன புகல்வார். (சஎ)

வேறு.

பெற்றந் தனிலே றுபிரா னையுமே
ருற்றுந் துமைதன் னையுமுன் னலிநி
குற்றங் கடெரிந் துகுறித் திடினற்
சுற்றம் பெறுவா ரெவர்சொல் லுதியால். (சஅ)

என்றே பலபுந் திபிசைத் திடலு
நன்றே யெனவுன் னியெந் ததனுக்
கின்றே துருயிற் றுவதென் றிடலு
நின்றே யிதுதன் னெனிகழ்த் தினனோ. (௪௯)

விண்டோய் கயிலைக் கிரிமீ தனுகித்
தண்டேன் மொழியா ளொடுசெங் கரனைக்
கண்டே வருகென் றுசுதித் தபுகழ்
கொண்டே செறியும் பர்கள்கூ றினரால். (௫0)

இவ்வா றிமையோர் களிசைப் பவிசைந்
தவ்வா னவரங் கணமர்ந் திடவைத்
தொவ்வா ரசிதக் கிரியுற் றனனுற்
செவ்வாய் மறைவல் லிதிருக் கொழுநன். (௫க)

வேறு.

சின்ம யத்தனு வந்தி ருந்ததி ருந்து மன்னசி லம்பின்மேற்
பொன்ம லிந்திடு மந்தி ரத்திடை முன்பு வாசல்பு குந்திட
நன்மை தங்குற வங்கு றுங்கண நாதர் நாதனை யெள்ளிய
புன்மை யாயெம தீச னுக்கெதிர் போக லென்றுத டுத்தனர். (௫௨)

சீறு பூதர் தடுத்தல் கண்டு சினஞ்சொ ரிந்து திரும்பியே
வீறு தன்னகர் தன்னில் வந்திது விண்ண வர்க்குரை செய்துபின்
னேற தேறிய சங்க ரன்றனை யிந்த நாண்முத லாகநீர்
மாறு கொண்டு மதித்தி டாதிரு மெனவி சைந்தனர் வானுளோர்.

என்சொல் கேளிதை யென்சொல் கேனெம தீசன் மேன்மை யறிந்துமப்
பொன்செ யஞ்சடை யானை யெள்ளிய புல்லர் பட்டது கண்டுநீள்
கொன்செ யுந்துயர் மாய வாழ்வு குறித்தி தற்கு மிசைந்தனர்
மின்செய் வானவ ராத லால்வினை வெல்ல வல்லவ ரில்லையே. ()

அன்ன போதிசை வான வானவ ராரு மேக வறைந்தரோ
வின்ன பான்மை யிருக்கு நாளி லிருக்கு நான்முக னோர்மகந்
தன்னை யங்க ணியற்ற வுன்னுபு தன்ன தேவல்செய் தனயனா
மன்னு மான்முத லும்ப ரைக்கொடு வம்மி னென்று விடுத்தனன்.

மூளு கின்ற சினங்கொ டன்மகன் முன்னி சைத்தது முன்னியான்
மாள வேவரு மேனு மன்னது வருக வென்று மனந்துணிந்
தாளு நாயகன் வெள்ளி வெற்பி லடைந்து நந்தி விடுத்திடக்
காள கண்டனை முன்ப ணிந்திரு கைகு வித்துரை செய்குவான். ()

எந்தை கேளொரு வேள்வி யானதை யானி யற்றுவ னங்கணி
வந்தெ னக்கருள் செய்தி பென்ன மகிழ்ந்து நம்முரு வானசீர்
நந்தி தன்னை விடுப்ப மேகென நான்மு கன்றெழு தேகியே
மைந்த னுக்கு முறைத்து நீதி மனேவ திப்புடை யுற்றனன். ()

மிக்க வேள்வி யவன்றொ டங்கலும் வீறு மான்முதல் விண்ணுளோர்
தக்க னோடு மடைந்து வேள்விசெய் சாலே யின்புடை சார்தலுஞ்
செக்கர் வேணியர் நூறு கோடியர் சீறு சாரதர் சூழவே
யக்க ணந்தனி னந்தி வந்தன னூதி தேவன தேவலால். (ருஅ)

எந்தை வந்தது கண்டு வேத னெழுந்து கைப்பது மங்குவித்
துந்து மாதன மீதிருத்த வுவந்தி ருந்தன னீதுகண்
டந்த மற்ற பவங்கொ டக்க னழைத்து ளாரெவ ரொன்றுதன்
சிந்தை யூடு குறித்து ணர்ந்து செயிர்த்து வேதனொ டோதுவான்.

சோதி முன்ன ரடைந்து வேள்வி தொடங்கு கின்றது சொற்றனே
யாதி யுந்திய நந்தி யைத்தொழு தன்பி னென்மு னிருத்தினே
வேத னேன்மதி தாதை யாதலின் வெட்டி டாதுனே விட்டன
னீதி யோவிது செய்த தென்று புகன்று பின்னு நிகழ்த்துவான். ()

எள்ளு நீர்மைகொள் பித்த னாகி யிருக்கு மீசன் மகத்தவி
கொள்ளு தற்குரி யன்கொ லீது குறித்தி டாதுகொ டுத்தனர்
தள்ளு மற்றதை விண்டு வேயுயர் தானு வென்ன மதித்துநற்
கள்ளு றுங்கம லத்த முன்பவி காத றன்னொடு மீதிநீ. (சுக)

மற்றெ வர்க்கு மளித்தி யென்னலு மன்னு நந்தி மனஞ்சினந்
துற்ற தக்கன் முகந்தெ ரிந்துணர் வோடு நீதியில் பேதைநீ
பெற்ற மேலம லற்ப ழித்துரை பேசி னாயவ னன்றியே
கொற்ற வேள்வி குயிற்று வோர்முடி போக வென்றுரை கூறியே.

சீறி யெம்பெரு மானே யெள்ளிய திய நின்றலே போகவென்
றீறி லாதப ரம்ப ரன்றனே யெள்ளு நின்னொ டிருந்திடும்
வீறு மான்முத லும்பரி யாவரும் வீர மேவிய சூரனுன்
மாற ருந்துய ரத்து ழூழ்கி வருந்த வென்று சபித்தனன். (சுரு)

இந்த வாறுபு கன்று நந்தி யெழுந்து சாரதர் சூழவே
யந்தண் மாமதி வேணி யானே யடைந்த னைத்து மறைந்துபின்
மைந்து றுங்குண வாசன் மேவினன் மன்னு வேதன்மகங்குலேந்
துந்தி யேந்துயர் கொண்டு தத்த மிடத்தி யாவரு முற்றனர். (சுச)

சொற்ற ரும்புகழ் நந்தி முன்பு சுளிந்து கூறிய சூளினு
லற்றை நான்முத லியாரும் வேள்வி யியற்ற வஞ்சி யமர்ந்தனர்
மற்றை யோர்பக றக்க னென்பவன் மாம கஞ்செய வுன்னியே
சொற்ற நற்றொழில் கற்ற வும்பர்கள் கம்மி யற்கிது கூறுவான். ()

மகம்பு ரிந்திடு சாலை யொன்று வகுத்தி யென்னலு மன்னவன்
நிகழ்ந்த கங்கை மருங்க டைந்து திருந்து மாயிர யோசனை
யகன்ற சாலைய தொன்றி யற்றலு மங்க ணேகி யயன்சுதன்
சகம்பு கழ்ந்திடு காமர் கண்டுத னுது ளங்களி கொண்டனன். ()

பின்ன ரொற்றர்மு கந்தெ ரிந்துபி றைக்கொ ழுந்து மிலைச்சிய
மின்னி ருஞ்சடை யண்ண லல்லது வேறு தேவர்க ளியாரையு
மன்று மிவ்விடை யுய்த்தி ரென்னலும் வல்லை யேகி யவர்க்கெலாஞ்
சொன்ன போதரி யாதி வானவ ரியாரும் வந்தனர் துன்னியே. ()

வந்து தக்கன தியாக சாலையின் மாய னுஞ்சம லத்தனு
மிந்தி ரன்முத லான தேவர்க ளியாரு மங்க ணிருந்தபோ
தூந்தி டெம்புகழ் மாத வத்த ருவந்து சூழ்தர வந்தனன்
றந்தி ரம்புரி * மாலை வென்றடன் மாலை கொண்ட ததிசியே. (௬௮)

நன்றி கொன்றிடு தக்கன் மாமுனி நண்ணு கின்றது கண்டரோ
வின்றெ னக்கிவ னஞ்சி வந்தன னென்று சிந்தையி லெண்ணியே
வென்றி மாதவ வருக வென்றொரு வீறு மாதன மீதலுந்
துன்று மாதவ ரோடி ருந்திது சொல்லு வான்வினை வெல்லுவான்.

* ததிசிமுனிவரும் குபனென்னுமரசனும் நண்புபொருந்தி வாழுநாட்களிலோர்நாள், இருவரும் பிராமணரோ அரசரோ சிறந்தவரென்று தம்முள் நகையாடிப்பேசும்பொழுது, முனிவர் பிராமணரே சிறந்தவரென்ன, அரசன் அரசரே சிறந்தவரென்னலும், முனிவர், சினந்து அரசனையடிக்க, அவன்பொறாது வச்சிரப்படையைவீசி அவருடலை இருதுண்டாக்கினன். வெட்டுண்டுவீழும் அம்முனிவர் சுக்கிராசாரியரை நினைக்க, அவரெய்தித் துணிபட்ட வுடலைப்பொருத்தி யெழுப்பி, "காஞ்சிபுரத்திலே இட்டசித்தி தீர்த்தத்திலேமூழ்கி இட்டசித்திசரைவழிபட்டு வச்சிரயாக்கையைப் பெறுவை" எனக்கூறியவாறே வழிபட்டுப்பெற்று, மீண்டு, அவ்வரசன் சென்னியி விடத்தாளாலுதைத்ததுமன்றி, அவ்வரசனுக்காகப் பரிந்துவந்தெதிர்த்த விட்டுணுமூர்த்தியையும் வென்றனரென்பது சரித்திரமாகலின், "மாலை வென்றடன்மாலைகொண்டததிசி" என வோதினர். இச்சரித்திரவிரிவைக் காஞ்சிப்புராணம் இலிங்கபுராண முதலியவற்றானுணர்க.

எம்மை யிங்கு னழைத்த காரண மென்ன வென்னலு மீசனெம்
மம்மை தன்னை மணந்த தற்பி னிகழ்ந்த யாவு மறைந்தரோ
மைம்ம லிந்திடு கண்ட னுக்கவி மாற்று வான்மக மாற்றுவே
னும்மை யிங்கு விளித்த தன்மையு மின்றி தற்கென வோதினன்.

ஊற கன்ற ததீசி தக்க னுரைத்த பான்மை வினவியே
வீறு கொண்ட பராப ரன்றனி மேன்மை தன்னை விளம்பியே
பேறு தங்கு பதாகை யண்ண லெவர்க்கு மீச னவற்குநீ
யாறு கொண்டு மகஞ்செ யேலென மாசி லானிது பேசினன்.(எக)

மாசு றென்பு புனைந்து சேகர மாலை யானது பூணுமோ
தேசு நீறது பூசு மோதசை தீர்ந்த தியுட லேந்துமோ
கேச முங்கரு மாம ருப்பொடு கேடு றுமையி னேடுமே
நேச மோடு தரிக்கு மோபர மாகி நின்றிடு நின்மலன். (எஉ)

கோல ஞாலமொ டுயிர்கள் செற்றல் குயிற்று மோபுலி தந்தியின்
றோலொ டங்கிக ணிச்சி தாவுழை சூல மின்ன சுமக்குமோ
சால வும்பலி கொள்ளு மோநட மாடு மோமிகு சாரதர்
சீல மேவிய படையெ னும்படி திரியு மோவுயர் தேவனே. (எங)

நஞ்செ யிற்றட னுகம் வெண்டலை நவையெ னுது தரிக்குமோ
விஞ்சு கின்றதன் மேனி யல்லது வேறு மோர்தனு மேவுமோ
வெஞ்சு றுதவி ருந்தி றற்பெறு மேறு தன்மிசை யேறுமோ
வஞ்சு மாலம ருந்து மோநிக ரன்றி நின்றிடு மண்ணலே. (எச)

ஈம மாட லொருத்தி யைத்தலை யெய்த வைத்த லொருத்தியை
வாம மீதினில் வைத்தல் பிள்ளை மகிழ்ந்து பெற்றிடல் வெங்குணங்
காம ரண்ணல் படைக்கு மோவென வேது வாகிய காதைகள்
தாம மார்புள தக்க னோடு ததீசி மாமுனி பேசுவான். (எரு)

வேதன் மான்முத லோரை நம்பன் விதித்த ழித்திடு போதெலாந்
தீதி லங்கவ ரென்ப ணிந்துசி ரங்கள் * கேச மணிந்துநீள்
கோதி லாதொளிர் சூல மீதுடல் கொண்டு நீறது கண்டுபின்
மீது பூசுமி யாவ ருந்தனை மேவி யுய்ந்திட வேண்டியே. (எசு)

ஈது நின்றிட வாட கக்கண னென்ப வன்புவி யுண்டுமுன்
பாத லந்தனி லேக மாலொரு பார வேனம தாகியே
கோதி னுனை மருப்பி னெக்கொடு கொன்று முன்பென வொன்றவே
பூத லந்தனை வைத்த கந்தை பொருந்தி மண்ணை யழித்தனன்.(எஎ)

---

* கேசம் அணிதலாவது மயிரினாலே அகலமாகச்செய்யப்பட்டு மார்பிலே பூணூலாகத் தரித்துக்கொள்ளல். இதனைப்பஞ்சவடியென்பர். பஞ்சம்-விரிவு. வடி-வடம். இதனைச்சிவபிரான் தரித்துக்கோடலை, "துணிவார்கோ ளுங்கோவணமுந் துதைந்துசுடலைப்பொடியணிந்து, பணிமேலிட்டபாசுபதர் பஞ்சவடிமார்பினர்." என்னுஞ் சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவாக்கா லுணர்க.

அந்த வேலையில் வேலை நஞ்ச மயின்ற நம்ப னவன்றனோர்
வந்தொர் கோடு பறிப்ப முன்புலன் வந்து வந்தனை செய்திட
வெந்தை யேனம ருப்ப ணிந்தன னென்னலில் வானவ ரானவ
ருந்து மாழி கடைந்த வேலையின் மந்த ரந்தளர் வுற்றதே. (எஅ)

மால வன்கம டத்து ருக்கொடு மந்த ரத்தை வெரின்றனிற்
சால வன்று பரித்த னன்கட றந்த தங்கமு தந்தனை
நீல மாய னகந்தை கொண்டு நிறைந்த வேலை யுழக்கவே
யால முண்டவன் வந்து பற்றிய வன்றன் வன்மை யழித்தனன். ()

உற்ற முன்னுணர் வெய்தி மாய னுவப்பி னோடு புகழ்ந்திட
வற்றை நாளவ னோடு மார்பி லணிந்த னன்னது நின்றிட
முற்று வேள்விய தேத ரும்பர முத்தி யென்றுயர் புத்தியிற்
சற்று மெய்பெரு மானை யெண்ணலர் தாரு காவன மாதவர்.(அ0)

இன்ன பான்மை யறிந்து நம்ப னிலங்கு சீருள மாலொடு
மன்னி டுங்கயி லாய வெற்பினை வல்லை தன்னி லகன்று போய்த்
தன்னை யுன்னலர் துன்னி வாழ்வுறு தாரு காவனந் தன்னினற்
கன்னி யாயி நடந்தி டும்படி கண்ண னுக்கருள் செய்தனன். (அக)

மார வேளை யளித்த பச்சுரு மாயன் மாதுரு வங்கொளாச்
சாரு நீடெழி லவ்வ னத்துறு தாப தர்க்கெதிர் போகவிட்
டேரி னோடவர் பன்னி மார்க ளிருந்த வீதியி லெம்பிரான்
வாரமோடு பலிக்க டைந்திடு வார்க ளென்ன வணைந்தனன். (அஉ)

மாலை சேர்குழன் மாலை நோக்கினர் மாலை யெய்தினர் மாதவர்
சால வெம்பெரு மானை மானினை மாறு கின்ற தடங்கணார் [போய்ச்
கோலமோடெதிர் கண்டு மாமயல் கொண்டு கொண்டக லன்கள்
சூல பாணித னோது பின்றுய ரத்தி னோடு தொடர்ந்தனர். (அங)

அந்த வேலையி லிந்து தாரி யனேக மேனிய னாங்கியே
வந்து மங்கைய ரென்னு மாறு மகிழ்ச்சி செய்திட மாதரா
ரெந்தை யாலவ னாலு பத்துட னென்னு கின்றவெண் ணாயிர
ளமைந்த ரைத்தர வந்த மைந்தர்கள் வள்ள றன்னை வணங்கினர். ()

சங்க ரன்னமை யுன்னி நீவிர் தவம் புரிந்திடுமென்னவே
யங்க ணின்றிடு மைந்த ரேகின ரந்த வேலை முகுந்தன
மங்கை வந்திட மாத வத்தர் தொடர்ந்து வந்துதம் மாதரார்
பங்க முற்றுயர் கற்ப ழிந்திடு பான்மை கண்டு சினந்தனர். (அரு)

நீதின் மாதர்கள் கற்ப ழித்தவ னைச்செ குத்திடு வோமெனா
மாத முற்கொண் டகம்பு ரிந்தநின் வந்து வந்து பிறந்திடுங்
காது வெம்புலி பாசு ரவ்வி கடும்ப ணித்திரள் பூதர்கண்
மோது வெண்டலை தின்டி றற்றுடி முயல கன்றனை யேவினார். ()

வேங்கை தன்னை யுரித்து டுத்தனன் மிக்க சாரதர் தானையாய்ப்
பாங்கு றும்படி யோதி னானொரு பாத வண்கம லத்தினா
லேங்கு றும்படி முயல கன்றனை யீடி னோடுமி தித்தனன்
வாங்க ருங்கவி னுற்ற மேனியின் மற்றை யாவு மணிந்தனன்.(அஎ)

ஈடு கொண்டிடு விண்ணு ளார்தொழ வெந்தை நாடக மாடினான்
வீடி னாரென மாத வத்தர் விழுந்து பின்னு மெழுந்தவங்
கூடு மெங்கள் கொடும்பெ ரும்பிழை கொள்ள லென்று வழுத்தவே
நாடி யன்பருள் செய்து பின்கயி லாய மாமலை நண்ணினான்.(அஅ)

ஈது நின்றிட வானை மேனியொ டடு கொண்ட கயாசுரன்
வேத னல்கு வரத்தி னாலுயர் விண்ணு மண்ணு மலைக்கவே
மாத வத்தின ராரு மஞ்சி வளங்கொள் காசியி லோடினார்
பாத கன்னவ ரைத்தொ டர்ந்து படர்ந்து காசி யடைந்தனன். ()

கண்டு மாதவர் காசி யின்மணி கன்னி கையெனு மாலயத்
தண்ட நாத னருட்ப தத்தி லடைக்க லம்புக வங்கணு
னொண்டி றற்கரி முன்ன ரேகி யுரித்து மேனி தரித்தனன்
றுண்ட வாண்மதி போனு தற்பெறு தோகை யும்பய மாகவே. ()

மற்றி வாறிவ ணிற்ப முற்பகன் மாய னந்தணன் மேருமே
லுற்ற கான்முனி வோர்க ளும்பரு வந்து வந்து பணிந்துநீள்
வெற்றி பெற்றிடு மூவர் தங்களின் வீறி னாரெவ ரென்றிட
வற்றை வேலையின் வேத னானென வரியு நானென வோதினான்.()

மாறு கொண்டிரு வோரு மெண்டவிர் வைகல் பூசல் புரிந்திட
வாறு கொண்டிடு மண்ண லங்கொளி யாகி யந்த வொளிக்குளே
வீறு கொண்டவ ணிற்ப மாயன் விழுந்து போற்றி யகன்றன
னீறு கொண்டிடு மேனி யெந்தையை நீடு வேத னிகழ்ந்தனன். ()

எந்தை யங்கு மனத்தி னாலரு ளெய்து காரியை நல்கவே
வந்து வேதன துச்சி யாமுடி வள்ளு கிர்க்கொடு கிள்ளலுஞ்
சிந்தை நொந்து வழுத்த வங்கருள் செய்து மாலுல கெய்தினா
னுந்து மாய னிறைஞ்சி மற்றிவ னுற்ற தென்னென வோதினான்.()

உன்றலைப்படு சோரி நீரை யுகுத்தி யென்ன நகத்தினாற்
றன்ற னெற்றி பிளந்து சோரி தனைப்பொ ழிந்திட நம்பிரான்
வென்றி சேரய னார்பெ ருஞ்சிர மீதி லேற்றன னாறுநா
றென்று கூறிடு மாண்டு செல்ல விளைத்து மாயன் விழுந்தனன்.()

நீடு கைத்தலை பாதி யேனு நிறைந்த தில்லை யவன்றனைப்
பீடு மேவிய காரி யன்பொடு பின்பெ ழுப்பியி ருத்தியே
யீடு கொண்டு பொருந்தி மேலுல கெய்தி யண்டமி யாவையு
நாடி யங்க ளளித்தி ருந்தன னாத னாரு ளாலரோ. (கூரு)

பகர்ந்த வின்னது நிற்க முற்பகல் பண்ண வர்க்கிறை யானவ
னகர்த்தை கொண்ட மனத்தொ டங்கயி லாய மர்ந்திர முன்புற
வுகந்து சாதர் போல வெண்குண னுற்ற னன்குலி சத்தினுன்
மிருந்த பூதவ ரன்ற னக்கென வேலை யென்று விளம்பினன்.(கூசா)

வேலை கேட்டுழி வேளை வென்றவன் வெஞ்சி னங்கொடு நின்றிடக்
கோனு மிந்திர னுஞ்சி னந்துயர் குலிச வேலினை யெறியவே
யானு மெம்பெரு மானை மேவி யருந்து கட்பட வங்கனை
வினு ருத்திர மேனி கொண்டு நெடுஞ்சி னங்கொடு நின்றனன். ()

அன்ன காலையி லன்றன் மாய மறிந்தி லேனறி வற்றபா
னென்னி ரும்பிழை யென்ன லென்ன விறைஞ்சி நிற்க விடுத்த
மின்னு தன்சின மான தீயினை மேலை வேலையில் வீசவு [ரோ
மன்னுகின்ற சலந்த ரப்பெயர் மைந்த னாக வளர்ந்தனன். (கூஅ).

வளர்ந்த பின்பவ ணக்கு லத்தொடு மண்ணி லுற்றுயர் விண்ணு
தளர்ந்தி டும்படி செய்தி ரண்டு சதங்கொ ளாயிர வற்சரம் [ளோர்
வளைந்து மாலொடு போர்பு ரிந்திட மால்பு கழ்ந்து பார்த்தனன்
கிளர்ந்த வும்பர்க ளோடி னார்கயி லாய மாகிய கிரியின்மேல். (கூகூ)

வெள்ளி வெற்பிடை விண்ணு ளாரவர் மேவி யுற்ற தறிந்துபின்
றள்ளு தற்கரு மொய்ம்பு கொண்ட சலந்த ரன்படை சூழவே
யெள்ள ரும்புகழ் மேவு றுங்கயி லாய விண்டுவி லேகலும் [னன்.
வள்ளல் வாசவன் வேண்ட வேதியன் வடிவு கொண்டவன் வந்த

எங்க னாயக னெங்க ணேகுதி யென்று கூறவ ரன்றனோ
டிங்க மர்ச்செய மேவி னேனென வீண்டு நின்வலி காண்டுமென்
றங்கண் மண்ணிலொ ராழி தாளின மைத்தெ டுக்குதி யென்னவே
யங்கு தன்சிர மீதெ டுப்பவு டற்பி ழிந்து மடிந்தனன். (சoக)

வீறு மின்னது நிற்க மாயன் விளிந்து யாவு மழிந்தபோ
தூறி லாம லிருக்க நச்சி யுரந்த ருந்தரு மத்திறை
யேற தாமுரு வெய்தி நாதன்முன் னேகி வந்தனை செய்துயிர்
கூறி யிங்கெனை யூர்தி கொண்டரு ளென்ன வப்படி கொண்டனன்.

உற்ற வின்னது நிற்க வொற்கமி லுந்து பாலுறு வேலையில்
வற்றி டாவமு தம்பெ றும்படி மந்த ரந்தனை மத்தெனக் [ங்
கொற்ற வெம்பணி நாணெ னும்படி கொண்டு மான்முத லண்டரு
துற்ற தானவ ருங்க டைந்தனர் தொன்மைவைகலின்வன்மைபால்.

நாக வாயினு மாழி வாயினு நஞ்செ ழுந்து தொடர்ந்திட
மேக மேனிய னாதி யாகிய விண்ணு ளார்கள் வெரீஇயிரிந்
தேக நாயகன் வாழ்பெ ருங்கயி லாய விண்டுவி லேகியே
சோக மோடர னைப்ப ணிந்துறு துக்க நக்கனெ டோதினர்.(௧௦௪)

அந்த வேலையில் விண்ணு ளார்களு மாரு முய்ய விரங்கியே
யுந்து மேவல்செய் சுந்த ரன்றனை யொல்லை சென்று விடங்கொடே
வந்தி டென்ன நடந்து கைக்கொடு வந்த ரன்கையி லுய்ப்பவங்
கெந்தை யுண்டன னுண்டி லானெனில் யாவர் பின்ன ரிருப்பவர்.

முக்க ணாயகன் மிகுமு யிர்த்தொகை யகில மியாவு முடித்தபோ
தக்க ணந்தனி லிம மாயிடு மன்ன தாகிய வீடமேன்
மைக்க ருக்கண் மடந்தை பங்குள வள்ள லாடுமி தன்றியுந்
தக்க சங்கையை யோங்கு மாமுடி தாங்கு கின்றது சாற்றுவாம். ()

முன்ன ரோர்பக லம்மை நம்பன் முரண்ட ரும்விழி பொத்தலு
மன்ன காலையி லெங்கு முச்சுட ரற்று வீறிரு ளாகவே
மின்னு நெற்றியி லுற்ற கண்ணை விழிப்ப வெங்கும் விளங்கியே
தொன்மை போலுற வஞ்சி வஞ்சி துணைக்க ரத்தை விடுத்தனள்.()

அம்மை தன்கர வங்கு லிப்புடை யங்கு வேர்வை யெழுந்துபின்
செம்மை கொண்டிடு பத்த தான திருந்து கங்கைக ளாகியே [ளோ
வெம்மை யோடுல கங்கள் கொண்டிட மேவ மான்முதல் விண்ணு
ரெம்மை யாளுடை யண்ணல் வாழ்கயி லாய வண்குவ டெய்தினர்.

கண்ணு தற்பர மற்ப ணிந்துல கங்கள் கொண்டிடு கங்கையை
யண்ண லேயிவ ணிய ணிந்தெமை யாள்தி யென்று வழுத்தலும்
விண்ண ளாவிய சங்கை தன்னை விளித்தொ ளித்திரு வேணியிற்
றண்ணி லாவொரு சோம மீது தரித்த னன்றனை நேரிலான். (௧௦௬)

இன்ன தல்லது தொல்லை நாளி லிலங்கு பங்கய வாழ்வினன்
மன்னு மின்ற படைத்தி டுந்தொழின் மாதி வீறிய மாயவன்
முன்ன ரேகி மொழிந்த போதவன் மூண்ட கத்துறை தன்னொடு
மின்னி ருங்கயி லாய முற்றர னைப்ப ணிந்து விளம்புவான். (ககം)

ஆதி நின்னரு ளால்வி திக்கு மயன்ற ொழிற்சிதை வாயதா
வீதி யென்றிட மால யன்றனை யெங்க ளுயக ணேக்கிப்
போது நீறது கண்டி டங்கொள் புயந்த ரித்தன னவ்விடை
மாது தோன்றினள் பின்பெ ழுப்பி வரங்கொ டுத்து விடுத்தனன்.

சொற்ற வின்னது நிற்க முற்பக ரேனன்மு கம்பெறு தானவ
னற்ற வம்பல நாள்பு ரிந்தா னல்கு யர்ந்த வரத்தினு
லுற்ற ஏிரிமை யோர்கள் வந்துதன் னேவல் செய்ய வுறைந்தனன்
மற்று மோர்பணி யிந்தி ராதியர் வந்து செய்திட வோதினன். ()

இங்கு நம்மு னடைந்து நுங்க ளிருஞ்சி ரங்களின் மும்முறை
செங்க ரங்கொடு தாக்கி யேயிரு செவிக ளூடுசெ ழுங்கரந்
தங்க நின்று நிலத்தி லன்பொடு தாழ்ந்தெ ழுந்திடு மென்றிடப்
பங்க முற்றிடு மன்ன புன்றொழில் பற்ப கற்புரிந் தாரரோ. (ககங)

புரிந்த யர்ந்தயன் மாலி னோடிது புகல வானவ ரைக்கொடே
இருந்தி டுங்கயி லாய மேவிய சிற்ப ரன்றனை நண்ணியே
பரிந்தி றைஞ்சின ரும்ப ரின்னல் பகர்ந்த போதொரு பாலனை
விரைந்த ளித்தவு னன்ற னைக்கொல விடுவ மென்று விளம்பினன்.

என்ற பின்பரன் மாதி னோடு மிலங்கு சோலையுண் மேவவே
குன்று றுதபெ ரும்பு கழ்ப்பெறு குடிலை தானிரு தந்தியா
யன்று நற்சல வித்தொ ழிற்செய லவங்க ரத்த னுதித்துநீள்
வன்றி றற்பர னோடு மாதை வணங்க மார்பி லணைத்தனர். (ககடு)

அந்த வேலையி லாதி நோக்கி யருந்தி றற்பெறு தோன்முகன்
சிந்த வேபொரு தும்பர் தந்துயர் தீர்த்தி யென்றருள் செய்திடத்
தந்தி மாமுக னோடு வெப்ப சமர்ப்பு ரிந்தவ னைக்கொலா
வந்த னன்கயி லாய வெற்பினில் வானு ளார்கள் வணங்கினர். ()

சீறு தோன்முகன் மாள வேயமர் செய்த நிற்கடி யேங்கள்கைம்
மாறு செய்வதெ னென்று தாமவன் முன்பு ரிந்திடு வன்பணி
யீறி லேங்கரன் முன்பு ரிந்தவ னேவ வானக ரேகினு
ரூறி லாத பரன்க ணேர்குண முற்ற தன்மை யுணர்த்துவாம்.(ககஎ)

மரும லிங்கிடு பங்க யத்தனை மாய வன்றனை நல்கியே
திரும லிந்திடு சாத்தி கத்தொடு சீரி ராசத மாகிய
விருமை கொண்ட குணங்கொ டுத்தபின் வீத லோடு புரத்தலுந்
தருவன் யாவு மழித்தி டுஞ்செய றன்ன தென்று தரிக்குமே. (ககஅ)

ஏத மற்றிடு தான லாதவ ராலு மற்றதி யற்றொரு
தாத லாலது செய்வ னன்னதி லன்ன வன்புடை தாமத
மோது வாரல தங்க வன்கண் ணுறைந்தி டுங்குண மன்றரோ
வேத மானவை சிற்கு ணத்தினன் விமல னென்று விளம்புமால்.

என்று பற்பல வாச கங்க ளிருந்த தீசி யியம்பலும்
வென்றி நான்மறை நான்மு கன்றரு வெய்ய தக்கன் விளைவியே
பொன்று கால மடுத்த வாலவை புந்தி யென்று நினைந்திலன்
குன்ற வில்லி பதத்தி லன்புறு கோதி லானொடு மோதுவான். ()

பெண்ணி னுக்குரு நல்கு முங்கள் பிரா னெவர்க்கு முயர்ந்தசீ
ரண்ண லாயினு மாக விங்கவி யன்ன வற்குத வேணியா
னெண்ணி யாது மியம்பு றுதினி பேகு வாயென வோதலுந்[வான்.
துண்ணெ னச்சின முற்றெ ழுந்திது சொல்லு வான்வினை வெல்லு

இந்து லாவு நெடுஞ்ச டாடவி யெம்பி ரானை விலக்கியிங்
குந்து சீரொ டியற்று மிம்மக மொல்லை யின்னழி வாகுக
புந்தி யற்றிடு முன்ற னோடு பொருந்து மும்பரு மிவ்விடை
யந்த மேவுக வென்று பின்னிவை தந்த வற்கு முரைத்தனன். ()

வீறு தங்கிய நுங்கு லத்தி னியற்கை தன்னை விடுத்துநீ
ராறு தங்கிய சென்னி யானையு மன்ன வற்கடி யாரையு
நீறு கண்டிகை மாலை தன்னையு நீங்கி வெந்துயர் தாங்கியே
பேறு தங்கிய வீடு றாதுபி றந்தி றந்திடு மென்றனன். (சஉங)

இன்னல் கொண்டிட வின்ன சாப மெவர்க்கு மங்க ணிசைத்தபின்
மன்னு நன்னெறி மாத வத்தர் மருங்கி ரண்டு நெருங்கவே
தன்னி ருக்கையி லேகி னானுபர் சங்கு தங்கு கரத்தனை
முன்னர் வெந்நது கண்ட வன்பிறை முடிய வன்றனை தடியவன். ()

வேறு.

மாசில் பெரும்புகழ்சேர் மாமுனிவன் போனதற்பி
னாசி*லயினியளித் தாடகமு மாடைகளு
நேச முறைய நிறைய மறையோர்பால்
வீசி விதிபுதல்வன் வேள்வி புரிந்தனனே. (சஉரு)

---

* அயினி - சோறு.

அவ்வாறு கண்டா னகல்வான் றனிற்றிரியுஞ்
செவ்வார் சடிலத் திருநா ரதமுனிவன்
மைவாழ் பெருங்குவட்டு வண்மைக் கயிலையிற் போய்ப்
பைவாழூர் துத்திப் பணியான் பதம்பணிந்து. (கஉசு)

நின்றான் பரன்பாரா நீள்புவியி லேதுநிகழ்
வென்றா னனலு மிறைவ வமரரொடு
மென்று மரைமேல் விதிபுதல்வன் வேள்விபுரி
கின்றா னெனவெழுந்தாள் கெண்டையங்கட் காரிகையே. (கஉஎ)

எழுந்தாள் பரம னெழிற்கமலத் தாண்முன்
விழுந்தாண் மகந்தெரிந்து மீள்வே னெனுமாற்ற
மழுந்தா தரவா லவள்புகலப் பின்னர்ச்
செழுந்தா தவிச்சடிலத் தேவன் விடைகொடுத்தான். (கஉஅ)

பொன்றங்கு மானம் புகுந்தாள் புகழ்மாதர்
துன்றா வயலே சுலவத்தன் றாதையிடைச்
சென்றா ளனையான் றெரிந்திகழ்ந்து போதிகடி
தென்றான் பலநிந்தை யிசனையும் பேசினனே. (கஉகூ)

நக்கன் றனைப்பழிக்க நாரி யதுகேளா
மிக்க சினம்படைத்து வெள்ளிப் பொருப்படைந்து
முக்கட் பரன்பாத முன்பணிந்துன் றன்னையென்னைத்
தக்கனது வேள்வி தனையழிக்க வேண்டுமென. (கங0)

அம்மை பணிந்திரப்ப வன்ன செயன்முடிப்பா
னெம்மை யினிதாளு மிறையோ னினைத்திடலுஞ்
செம்மை நுதல்விழியிற் சென்னிகளோ ராயிரத்தோ
டிம்மெனவே வந்தா னெழில்வீர பத்திரனே. (கஙக)

அப்போது தன்னிலெம  தன்னை பெருஞ்சினத்தாற்
கைப்போதி ராயிரமுங் காமர்முக மாயிரமுந்
துப்போ டிலங்கத் துலங்குவிறற் காளியுதித்
தொப்போரில் வீரன்பாற் றேவியா யுற்றனளே. (கஙஉ)

அன்ன பொழுதரனை யன்னநடை யம்பிகையைப்
பன்னருஞ் சீர்வீரன் பணிந்தே பணியடியேற்
கென்னை யெனலு மெமையென்னைத் தக்கன்மகந்
தன்னை மருவியழி த்திடெனச் சாற்றுதியால். (கஙங)

தர்தா லிவண்வருதி தாரானே லக்கொடியோன்
சிந்தா குலஞ்சேரச் சென்னிதடிந் தாங்கிருந்தோ
ருந்தாவி கொண்டுமக மொல்லை யழித்திடுதி
மைந்தாவி யாமும் வருகின்றே மென்றனனே. (கருசு)

என்ன விடைகொண் டெழின்மேவு காளியொடுந்
தன்னுருவில் வந்துதித்த சாரதர்கள் சேனையொடு
மன்னுபுகழ்த் தக்கன் மகச்சாலை வந்தணுகிப்
பொன்னிலகு செஞ்சடிலப் பூதர்க் கிதுபுகல்வான். (கருரு)

ஆலமிடற் றெம்மானை யன்றிமகஞ் செய்யுமிந்தச்
சாலை யெயில்வாச றனைக்காவல் கொண்மினெனச்
சீல மிகும்பூதர் சிலவர் சுலவவெழில்
வேலனகட் காளியொடு வேள்விக் களம்புகுந்தான். (கருசா)

தண்டா மரையான் றநயன் மகம்புரிதல்
கண்டான் வெகுண்டா னுருமே றெனக்கலித்தான்
வண்டார் நெடுந்தார் வயக்கொம் பினைக்குறித்தாங்
கண்டார் வெருவ வடலோடு நின்றனனே. (கருஎ)

ஈடுசேர் வீர னிசைத்த விசைகேளா
வாடினர் சிந்தை வருந்தினர் வல்லையெழுந்
தோடினர் மீண்டா ருலைந்தா ருறுதுயரங்
கூடினர் விண்ணோர் கொடியோ னிதுதெரிந்தான். (கருஅ)

வீரன் றனைநோக்கி வேதன் றருங்கொடியோ
ணுரை யிவணீ யடைந்ததெவ னென்றிடலுங்
காரிலகு கண்டக் கடவுள்விட வந்தனனென்
னேரி லவனவிநீ நேர்வா யெனவுரைத்தான். (கருகூ)

காவி நயனக் கலசமுலைக் காளியெனுந்
தேவியொடு நின்ற திறலாள னீதிசைப்பக்
கோவின் மிசையேறுங் கோவை யிகழ்ந்துமொழிந்
தாவி கொடுப்பா னவிகொடே னென்றனனே. (கசo)

தன்னை மதித்தகொடுந் தக்கனிது சாற்றுதலு
மன்னுதிறல் வீரன் வானோர் தமைநோக்கி
யின்ன துமக்கு மிசைவோ வெனவிசைப்ப
வுன்னியொன்று மோதாம லூமர்போ லுற்றனரே. (கசக)

வேறு.

இவ்வாறு வானவ ரிருப்பச்
செவ்வாய் இறந்துரைசெய்தே
மைவாழ் களத்தனருண் மைந்த
னவ்வா யியற்றுமிவை யம்மா. (கசஉ)

தண்டா விறற்குலவு தண்டால்
வண்டார் நறுந்துளப மாலைப்
புண்டா னுறும்படி புடைப்ப
விண்டா னெனப்படி விழுந்தான். (கசங)

மட்டுறு விரைக்கமல மன்மூன்
கிட்டிநனி னத்தெழில் கெடுத்துக்
கட்டமுகு தங்கிய கரத்தாற்
குட்டினன் முடித்திரள் குலுங்க. (கசச)

வேறு.

விழுந்தான் வேதனும் வெண்மை மாமதி
யெழுந்தா னேடலு மீசன் மாமகன்
செழுந்தாள் கொண்டிட றேயு மாறுசெய்
தொழிந்தார் தம்மையு மூறி யற்றினன். (கசரு)

அறந்தா னேவிய வண்டர் யாவரு
மிறந்தா ராயு மிலங்கு ணர்ச்சிகள்
மறந்தா ராயு மகக்க ளத்தின்வா
யுறைந்தா ராட லுகந்த வீரனால். (கசசு)

கண்டா னிது கலங்கி வெந்துயர்
கொண்டா னெஞ்சு குலைந்து மொய்ம்பினிற்
றண்டார் கொண்டுள தக்க னிற்றலு
மண்டார் கூற்றிஃ தாற்று வானரோ. (கசஎ)

செறுத்தா னேறிய தேவை யெள்ளிய
மறுத்தா னெஞ்சுடை வஞ்சன் மாமுடி
யறுத்தா னங்கிய ருந்த நல்கினன்
வெறித்தார் மொய்ம்புள வீர வீரனே. (கசஅ)

மாலே தங்கிய வஞ்சன் மாய்தலும்
வேலே யன்னகண் வேத வல்லிதன்
பாலே மாதர் பரம்பி வந்திடக்
காலே போன்று கடிதின் மேவினுள். (கசகூ)

துன்பங் கொண்டு துளங்கி வந்துளான்
முன்பஞ் செய்நி முரண்கொள் காளிந
னன்பன் ஞேர வணங்கின் வார்குழை
மின்கொள் கேள்வி யறுப்ப வீழ்ந்ததே. (கடுo)

பிடித்தான் மற்றுள பேதை மாதரைக்
கடித்தார் கொண்ட கவின்கு முற்றலே
வடித்தார் வாள்சொடு வல்லே கொய்துபங்
தடித்தா ளெம்மை யளிக்கு மன்னையே. (கடுக)

வேறு.

வீர னேவலின் விரைந்தெயி லுடைத்தே
தாரு லாவுமகச் சாலையை யழித்தே
கோர மோடுபல் கொடுந்தொழில் புரிந்தார்
போரெ னிற்களி பொருந்தியிடு பூதர். (கடுஉ)

முந்து நொந்திடு முகுந்தனெனு மேலோன்
சிந்தை வெந்துயர் தெளிந்திவை தெரிந்தே
யுந்து கின்றவுவ ணத்தின்மிசை யுற்றே
மைந்து கொண்டகணை மாரிகள் சொரிந்தான். (கடுங)

நின்ற பூதரு நெருப்பெழ விழித்தே
துன்று வாளிகள் சொரிந்தமர் புரிந்தார்
வென்றி கொண்டபுய வீரனிது கண்டே
சென்று மாலொடு செருச்செய நினைந்தான். (கடுச)

அன்ன போதிலெம தண்ணலரு ளாலோர்
மின்னு தேரணுக வேதனதன் மீதே
துன்னு வீரனெதிர் சூதனென வந்தே
யின்ன வையமிசை யேறென விரப்ப. (கடுரு)

வீறு காளியொடு வீரனதன் மீதே
யேறி நான்முக னிலங்கிரத முய்ப்ப
மாறு கொண்டுபொரு மாயனெதிர் வல்லே
சேற லோடுமிவை செப்புவன் முராரி. (கடுசு)

வேறு.

தன்னிக ரண்ணலே யெள்ளுந் தக்கனை யட்டிட லல்லான்
மன்னிய விண்ணவ ரெல்லா மாளவி யற்றிய தென்னே
வென்னலு மக்கொடி யோனே டெய்துதல் கண்டுயிர் கொண்டோ
முன்னையு மின்னுமி ரின்னே யுண்குவ மென்ன வுரைத்தான். ()

வண்டு படிந்த நெடுந்தார் மார்பின் மிடைந்த வளைக்கைக்
கொண்டல் வெகுண்டு கரத்தே கொண்ட நெடுஞ்சிலை கோட்டித்
திண்டிற லுண்ணெலி காட்டித் தீயசு ரம்பல பூட்டிப்
புண்டரு வெய்ய படைக்கைப் பூதர்கண் மீதுபொ ழிந்தான். ()

வேறு.

கண்டன விருண்ட கண்டன்மக னுந்து கார்முக மிசைச்சி லீமுக மிசைத்து, வண்டுளை மகிழ்ந்த வண்டுளப வார மாயவன் விடுத்த வாளிகண் முருக்கி, யொண்டிறல் பொருந்த விண்டு நுத லின்க ணோர்கணை யழுத்த வோகையி லிடுக்க, வண்டின னகன்று மொய்ப்ப னெதிர்பின்பு மாசுக மளப்பி லாதன வுகைப்ப. (கருசு)

உத்தமனு மெற்று மத்திர முரத்தொ டேர்தியரி யுந்து முந்து கணை சிந்தி, நத்துறு கரத்த னற்றனுவை யொற்றை நன்கணை துரந்து நூறிடல் புரிந்து, கொத்து முவனத்த டற்சிறகை மிக்க கொன் கணை யிரண்டு கொண்டரிதல் கண்டு, மைத்திரு நிறத்தன் மற்றி ஙிரி யுய்ப்ப வந்தது விரைந்து மண்டல நடுங்க. (கசுo)

வேறு.

அக்காழிப் படைவருத லெரிந்தா னடல்வீரன் கடிதுபிடித் தயின்றான், கொங்காரு நறுந்துளப நெடியோன் கொடுவாள்கொண் டிறையோன்முன் குறுக, வுங்காரஞ் செய்தனனெம் பெருமானே வியம்போன் மாயவனுங் குறைந்தான், மங்காத பெருஞ்சினமென் னினைந்தோ மருவினா னுதல்விழியான் மதலை. (கசுக)

எம்பெருமான் சினந்திடலுஞ் சினவேலெனவிசும்பில் வாசக மொன் றிசைப்ப, வும்பர்பிரான் றனதுசுத னதுகேட் டுள்ளெழு வெஞ் சினமகன்றுங் குறலுஞ்,செம்பதுமத் தணங்குரத்தோன் புக ழ்ந்தே சிதடனேன் புரிந்தபிழை செழுந்தி, யப்பகரா யகன்புதல்வ பொறுத்தீன் டளித்தியென வருள்புரிந்தா னமலன். (கசுஉ)

அவ்வேலை வேலெவிட மருந்தி யமரர்தம துயிர்காத்த வமலன், வைவ்வேலை முனிந்தநெடுந் தடங்கள் மாலோடு மான்மீது வரலுஞ், செவ்வேணித் திறல்வீரன் றெழுதான் றிருமாலு மயனுமமர் செய்யுங், கைவ்வேழ முரித்தபிரான் றிருத்தாட் கமலமல ரெதிர்பணிந்து களித்தார். (கசுங)

ஒங்குமகக் களத்தினிடை மடிந்தே யுறுகின்றோர் தமையெமை யாளுமைகண், டிங்கிவர்க ளனைதுபொருட் டிறந்தா ரிறைவபிழை பொறுத்தெழுப்பென் றிரப்ப, நீங்கருந்தின் டிறல்புனிதன் சுதனை விமலனெவ ரையுமெழுப்ப நிலமேற், றூங்கியெழுந் தெனவெழுந் தார் மறையோர் துகடிரு முனிவரொடு சுரர்கள். (கசுச)

உஞ்செழுந்த வமரர்மால் விடைமே லுயர்விசும்பி னிறை வனைமா றொடுங்கண், டஞ்சிமிக நடுங்குதலு மதிகூ டருளாள னஞ் சலிரென் றருள, நெஞ்சமகிழ்ந் தடிபணிந்தார் புகழ்ந்தார் நெடுமல ரோன் மகற்கானு நிமலன், கஞ்சமலர்க் கழல்பணிந்தென் மகனுங் கயவனெழுந் திலனெனவே கழறி. (கசுரு)

ஐயவவ னுய்யவருள் செய்யென் றயனிரப்ப வுமைபாக னரு ளாற், சையகிர் புயவீரன் கடிதே தக்கனுடன் மீதுமறித் தலை யொன், றுய்யவிசைத் தெழுதியென வெழுந்தாங் குளநாணி வெரு வவிட முமிழும், வெய்யபணிச் சடையாளன் றக்க வெருவேலென் றருள்புரிந்தான் மிகவும். (கசுகூ)

ஆசறுநல் லறிவொருவி மையா மறிவுறலா லானனமு டனைத் தாய்க், காசினியி லெழுந்தவனம் பெருமான் கழல்பணிந்து புகழ்ந் திடலுங் கருணை, நேசமொடு புரிந்தருளி யமர்க்கு நிகரிலா வீர னெடு நிமலன், வீசுபுகழ்க் கயிலையடைந் தடல்சேர் வீரனுக்கோ ருலகளித்து விடுத்தான். (கசுஎ)

வேறு.

மற்றிது நிற்க மகக்களத்தி னூடே
யுற்றிடு மும்பரி லுந்துமலர் வேதன்
பெற்றிடு மைந்தன் முகந்தெரிந்து பேதா
யெற்றை யியற்றினை யென்றினைய கூறும். (கசுஅ)

ஈசனை யெள்ளிய வின்னபிழை தீர
வாசறு மன்போ டவன்றனது பொற்றாள்
பூசனை புரிந்து புகழ்ந்திடுதி யென்றே
பேசுவ னிவ்வகை பின்னுமல ரோனே. (கசுகூ)

தேனமர் கொன்றைச் செழுஞ்சடைமு டித்த
வானவன் மேன்மை மறந்தொருப கற்க
ணானிறை யென்றன னாரண னெவர்க்குந்
தானிறை யென்று தருக்குட னுரைத்தான். (கஎ0)

வெஞ்சமர் செய்குதும் வென்றவ ரெவர்க்குந்
தஞ்ச மெனப்படு தானுவென வோதிக்
கஞ்ச மடக்கொடி காதலனும் யானு
நெஞ்ச முனிந்து நெடுஞ்செருவி ழைத்தோம். (கஎக)

அந்தரி தங்கிய வங்கனெமை யாள்வான்
வந்தெரி யாகியு மண்ணும்விண்ணு மொன்றா
யுந்துபு நின்றிட வொல்லையது கண்டே
வெந்திற லாடல் விளைப்பதுவி டுத்தேம். (கஎஉ)

திண்டிற லின்ன செலம்பினடி சென்னி
கண்டவ ரேயுயர் காரண ரெனச்சீர்
கொண்ட பதத்தொடு கோநின்முடி தேடிக்
கண்டிலம் வன்மை தழிந்தகர்தை விட்டேம். (கஎ௩)

சம்புவை யன்பொடு தாழ்ந்தடி பணிந்தே
மெம்பிழை யென்னல ளின்னருள் புரிந்தா
னம்புவி யின்புடை யன்னவனை நீயு
நம்பி வணங்குதி நல்குமரு ளென்றான். (கஎச)

இன்ன விசைப்ப விசைந்தடி பணிந்தே
சன்ன னெருங்கிய காசிநக ருற்றே
மன்னிய வாயிர வற்சரம ரன்றாள்
நன்னெறி யர்ச்சனை செய்திடலு நம்பன். (கஎரு)

வந்துக ணப்படை மன்னவ னெனுஞ்சீர்
தந்தன னும்பர்க டத்தமிடை யுற்றே
யிந்து நெடுஞ்சடை யெந்தைபெரு மானைப்
புந்தியி லன்பொடு பூசனை புரிந்தார். (கஎசு)

என்றிவை யாவு மிருங்குலிச வேலாற்
குன்றி னெடுஞ்சிறை கொய்தவன் மகற்கு
வென்றி பொருந்து வியாழனெனு மேலோ
னென்றெழி யாம வுவப்புட னுரைத்தான். (கஎஎ)

வேறு.

கூறிது நின்றிட வேறொரு நான்முக குந்த னெனுந்தலைவன்
மாறுத லற்ற விசிட்ட மடைந்த வசிட்டனை வந்து பணிந்
தாறு முடித்த வருட்கட னல்கிய வாறு முடிப்பெருமான்
வீறு புகழ்ப்பெறு விரத முரைத்தரு ளென்று விளம்புதலும். ()

வெள்ளியெ னுந்தின மாரல தன்றியும் வென்றி யுறுந்துலையா
மொள்ளிய திங்களி லிந்து வளர்ந்திட வோங்குமுன் வைகன்முறை
வெள்ளரி தாமறு நாளு மெழிற்பர சேந்திய வேந்தறரும்
வள்ளன் மகிழ்ந்தருள் விரத மெனப்புகழ் மாதவ னோதியரோ. ()

அன்னதி யற்றலு மன்னது தன்னி லருத்தி பொருத்திமுடித்
துன்னரு மேன்மை யடைந்தவர் தம்மையு மோதின னோதுதலு
மின்னலின் மன்னவ னப்படி பற்பக லிப்புவி யிற்புரியா
வொன்னலர் வந்து பணிந்திட வைய முவந்து புரந்தனனே. (கஅ௦)

மேவொரு நாடனின் மண்ணுல கத்ினும் விண்ணுல கத்தனுகித்
தேவர் வணங்குறு கோவை வருத்து திருக்கவு ணப்படைவென்
ஞேவில் பெரும்புக ழேழு விடங்கரை யொண்புவி மீதுகொணர்ந்
தேவரு மன்பொடு கான விருத்தி யிருங்கதி யுற்றனனே. (கஅக)

சொற்றிடு மின்ன திருக்க விருப்பொடு தொண்டைநான் ஞடதனின்
மற்றொரு வெற்பிடை பொற்புறு நற்சிவ மாமுனி மேவியகா
னற்றிற நவ்வி யடைந்திட வன்னதை நச்சின னச்சியதே
யுற்றிடு மோர்கரு வாயது நவ்வி யுலாயதம் மால்வரைமேல். (கஅஉ)

குன்றவர் வள்ளியின் மூல மெடுத்த குழிப்புடை வந்தனுகா
நன்றி பெறுந்திரு மங்கையை யங்கது னல்குபு தன்னதின
மன்றி யிருந்தது கண்டு வெருண்ட துகன்ற தகன்றிடலும்
வன்றிறல் கொண்ட கிராதர் பெருந்தகை வந்து தெரிந்தனனே. ()

தெரிந்துமகிழ்ந்து கரங்கொ டெடுத்துயர் செல்வ மனைப்புடையுற்
றிருந்திறல் கொண்ட விருத்தர்கள் வள்ளி யெனப்பெயர் சொற்றி
பரிந்து சிறப்பொடு குன்றவர் மன்னது பாரில் வளர்த்திடொ[டவே
டிருந்திப யான ரிளங்குயி லாதிரு திருவய துற்றனளால். (கஅச)

ஏவை முனிந்தொளி ரெஃக நெடும்படை யென்ன விலங்கியகட்
பூவையை வேடுவ ரானவ ரேனல் புரந்திட வைத்திடலுங்
காவல் புரிந்தித னத்துறு நாளுயர் கந்த விலங்கலொரீஇச்
சேவ னெடுங்கொடி யண்ணல் பெருத்த செருத்தணி யுற்றனனே

வந்து செருத்தணி யற்புத வெற்பிடை வள்ள விருந்தருளச்
சுந்தர வள்ளியை நாரத னாகிய தொன்மைகொண் மாமுனிகண்
டெந்தை குகன்க ணிணங்கி வணங்கி யிசைத்திட மாமயல்கொண்
டுந்திய வேலவன் வேடுவர் போல வுருக்கொடு சென்றனனே. ()

விண்டொடு வள்ளி விலங்கலி னேகி விலங்க லிலாவெழிலோ
டண்டரி தாமித னத்தி லிருந்தவ ருங்குற மாதுதனைக் [ழ்ந்
கண்டனன் மாமயல் கொண்டிடர் கொண்ட கருத்தொடு நின்றுபுக
தொண்டிற லோன்விர கத்துரை பற்பல வோதினன்மாதினொடும்.

ஆங்கது காலையில் வேடுவ ரோடவ ளத்த னடைந்திடலும்
வேங்கை யுரித்த பரம்பரன் மாமகன் வேங்கை யுருக்கொளவே
வாங்கில் புகழ்ப்பெறு கானவ ரானவர் வந்து வளைந்துசினந்
தீங்கிது வல்லை பறித்து முறித்திடு மென்று புகன்றனரே. (கஅஅ)

அன்னவர் தம்மை விலக்கி யவர்க்கிறை யன்பு மகட்டெரியா
வின்னறி யாதென வேது மறிந்தில னென்று புகன்றிடலு
மன்னிய வின்னது நின்றுணை யாகி வளர்ந்திவ ணிற்கவென
வந்நிலை தன்னி லகன்றனன் முன்பென வண்ணலு நின்றனனே. ()

இன்பொடு நின்றவ னுன்றனை யன்றி யெனக்கொரு தஞ்சமிலை
யன்புட னாளுதி யென்றனை யென்றெம தன்னையொ டோதலுமே
பின்பு மிருங்குற வர்க்கிறை யான பெருந்தகை வந்திடவே
பொன்புனை சைவ விருத்த னெனும்படி போயின னங்கவனே. ()

ஆதர வித்திரு நீறு கொடுத்தன னாசி புகன்றிடலு
மேதமில் கொற்றவ னச்சின தேதென விவ்வரை யிற்குமரி
தீதற வாடுற வந்தன மென்றருள் செய்யவ தாடுபுனம்
மாதி னொடுந்துணை யாயிரு மென்றவன் வைத்தகல் வுற்றனனே

வள்ளியை நோக்கி விருத்த னெனும்படி வந்திடு மெந்தைபிரா
னுள்ளுறு நீரில் விடாயுடை யோனென வோதவ தற்கொருசா
ரெள்ளில் புகழ்க்கொடி நற்சுனை யின்கரை யெய்த மெலிந்தவர்போ
லள்ளி யரும்புன லுண்டெமை யாளுடை யண்ண லறைந்தருள்வா
[ன்.
ஏதமி னீரின் விடாயை யகற்றினை யென்னை யினித்தழுவிக்
காத லகற்றுதி யென்று புகன்றிரு கைகள் குவித்திடலு
மாது சினந்து படர்ந்தன ளத்தியின் வத்திர னைக்குமர
னாதர வோடு நினைப்ப வெதிர்ந்தன னானைய தாயெதிரே. (ககூங)

கண்டனள் வள்ளி வெருண்டு திரும்பினள் கந்தனை வந்துதழீஇக்
கொண்டன ளும்பல கற்றிடி னீர்கசை கொண்டது செய்வனென
வண்டர் பிரானிரு கைகள் குவித்தன னத்த வெழுந்தருளென்
றொண்டிறல் வேழமொ டோதலு மன்னது வப்பொடு சென்றதுவே.

அன்னது பின்பறு மாமுகன் வள்ளியை யாசையொடும் புணராப்
பன்னிரு கையொ டிருந்திட மங்கை பணிந்து புகழ்ந்திடலு
மன்னு தினைப்புன மேகுதி யாமவண் வந்திடு வோமெனவே
துன்னிய வேன லுறும்படி யுற்றன டோழியு மெய்தினளே. ()

ஏனல ழிந்திட வெங்ஙன மேகினை யென்று விளம்புதலும்
பூநறு மென்சுனை யாடிவ ரும்படி போயின னென்றிடவே
மேனி வியர்ப்ப முலைத்துணை விம்ம வெளுத்திட வாய்புரியு
மூனமி றன்சுனை யெவ்விடை யுற்றுள தோதென வோதினளே. ()

நன்றிது நன்றி தெனக்கு மொர்குற்ற நவின்றனை யென்றுவெகுண்
டொன்றி யிருந்துழி வேலவன் வேட குருக்கொடு வெய்யமதந்
துன்று விறற்கரி யொன்றென தம்பொடு சோரி சொரிந்திடவே
யின்றிவண் வந்துள தோவென வோதினனேதமின் மாதர்கண்முன்.

அவ்விடை யிற்குகன் மங்கை புணர்ந்ததை யங்கவர் பார்வையினு
மைவிழி நம்பி யறிந்து பிறிந்தயல் வன்புன மீதுறவுன் [ன்
கவ்விய வேலவ னன்னவண் முன்புக லந்தெழில் வள்ளியையெற்
கிவ்விடை யீகுதி யல்லதி யான்மட லேறுவ னென்றனனே. ()

என்னலு மன்னவள் வள்ளியை யெய்தி யிணங்குறு மாறுரையா
மன்னிய வேல னிடைக்கொடு வந்திட வள்ளியும் வேலவனு
மின்ன லறுங்கல வித்தொழில் செய்துபி னேனல் புரந்திடவே [ம்.
பொன்னுறு வேலன் விடுத்தலு மெம்மனை போயினள் சேடியொடு

வென்றிகொள் குன்றவ ரேன றடிந்திட மேவினர் மாதினையிற்
சென்றிடெ னத்துணை மாதொடு வீடு செறிந்து வருந்தியுறப்
பொன்றிகழ் வள்ளியை நாடி மெலிந்து புலம்பி யிருட்பொழுதின்
வன்றிறல் வேலவன் மங்கை யிருந்த மனைப்புற முற்றனனே. ()

வேலனை யன்பொடு கண்டனள் சேடி விருப்புறு வள்ளிதனைக்
கோலமொ டுங்கொடு வந்தனள் பாணி கொடுத்தன ளின்னவளைச்
சாலவு மன்பொடு காத்தரு ளென்றுரை சாற்றலு நம்பிடைநீ
மாலைந றுங்குழல் வைத்திடு மன்பு மறக்கில மென்றனனே.(உ0க)

என்று புகன்றவ ணின்று மகன்றெழி லெய்திய மாதினொடுஞ்
சென்றொரு காவி லிருந்தனன் வைகறை சேர்தலும் வள்ளிதனைத்
துன்றெயி னர்க்கிறை கண்டிலன் மண்டிய சுற்றமொ டுங்குழுமிப்
பொன்றி லடிச்சுவ டொற்றி நடந்து பொழிற்புடை யுற்றனனே. ()

கண்டனள் வள்ளி வெருண்டன ளன்பொடு கந்தனை வந்தனைசெய்
தண்டினர் வேடுவ ரென்செய்வ தென்றிட வன்றெதிர் சூருயிரைக்
கொண்டிடு மெஃக மிருந்துள தஞ்சலை கொல்லுதும் யாமெனவே
மண்டிய வேடுவர் வந்து வளைந்து வடிக்கணை வீசினரே. (உ0ங)

மாரியெ னும்படி வாளிசொ ரிந்திட வள்ளற னூதருளாஞ்
சீரிய கையிலு றுங்கொடி யாகிய சேவலொ லித்திடவே
யாருமி றந்தனர் வேலவ னங்க ணகன்று நடந்திடலுஞ்
சோர்வி லெழிற்பெறு குன்றவர் மாது தொடர்ந்து படர்ந்தனளே.

மேதகு நாரத னவ்விடை வந்தனன் வேலவ னைப்பணியா
வோதுறி யிங்க னியற்றிய தென்ன வுவப்புறு வள்ளிபொருட்
டேதமில் வேலவ னிங்க னியற்றிய யாவுமு ரைத்திடவே
நீதறு நாரத னாகிய பேருள சீர்முனி கூறுவனால். (உ0ரு)

எம்பெரு மானிவன் வேடுவர் யாரு மிறப்பவி யற்றினையிக்
கொம்பினை வவ்வி யகன்றிட னீதிகொ லோவென வோதுதலு
மும்ப ரிடுக்கண கற்றிய வேலனு வந்து திரும்பியரோ
வம்புறு சோலையின் வந்தனன் மாதவன் வள்ளி யொடுங்கடிதே.()

நல்லையில் வேலவன் வள்ளி மடந்தையொ டுன்றம ருய்ந்தெழுவே
சொல்லுதி யென்னலு மன்னையு மவ்வகை சொற்றனள் சொற்றிட
வல்லை யெழுந்தன ராறு முகம்பெறு வள்ளலை யன்பொடுகன்[னும்
டெல்லை யிலாத வெருங்கொ டிறைஞ்சி யிசைத்திடு வாரிவையே.

எங்கள் பிரானினி யெம்மனை யுற்றெழி லெம்மனை தன்னைமனைந்
தங்கொரு நின்பதி யேகுதி யென்னலு மன்ன செயற்கிசையா
மங்கு நெருங்கிய குன்றுறை கானவர் மன்னவ னிற்குறுகித்
துங்க நெடும்புலி யாதன மீது துலங்க விருந்தனனே. (உ0அ)

அங்கது காலையில் வள்ளியை யன்பினொ டன்ன நெரிந்திடலுங்
கொங்கு நறுந்தொடை வேடுவர் மாதர் குயிற்றிய கோலமொரீஇ
மங்கில் வளம்பெறு தெய்வ வனப்புடன் மன்னின ளின்னதுகண்
டிங்கிவ ளெம்புடை வந்தது நந்த மிருந்தவ மென்றனரே. (உ0கூ)

கொற்றம துற்றிடு கானவ ரானவர் கொற்றவன் முற்றெழிலான்
மற்றினை யற்றுபர் வள்ளி கரத்தினை வள்ளல் கரத்தினில்வைத்
துற்றிடு மென்மக ளைக்கும ரேச வுனக்கருள் செய்தனனென்
றற்றமி லன்பொ டறைந்து சிறந்த வரும்புன லுய்த்தனனே.(உக0)

அன்னது காலையி லெண்ணிக நெடுங்கர வன்னைற ளுதருளாற்
றன்னிகர் நாரதன் மன்றலி னுள்ள சடங்கு புரிந்திடலுந்
துன்னிய விண்ணவர் கன்னன யன்புடை சுற்றி வழுத்திடவே
கன்னி மடந்தையொ டுந்தா மீதிருள் கந்தரன் வந்தனனே. (உகக)

தந்தையு மன்னையும் வந்தது கண்டொரு தந்தி முகற்கிளவல்
சிந்தை களித்தெவ ரும்முன ராவகை செய்ய கரங்கள்குவித்
தந்து பெரும்புக ழும்பர் தமக்கு முவந்தருள் செய்திடலும்
புந்தி மகிழ்ந்துயர் விண்ணவ ரோடு புராந்தக னேகினனே. (உகஉ)

சம்புவ கன்றுழி நாரத ளுற்று சடங்கு முடிந்திடலு
மம்பு நெடுஞ்சிலை வேடுவர் மாதர்க ளாசி புகன்றிடவே
வம்பு பொருந்து கடம்பு தடம்புயன் மங்கையொ டங்கணெழுந்
தும்பர் புகழ்ந்திடு குன்றவர் மன்னொ டுரைத்திடு வானிவையே. ()

அருத்தி பொருந்தி யவுன்ற னியற்கை யனைத்து மியற்றுபுவிங்
கிருத்தி யெனக்கடி தங்க ணிருத்தி யிலங்கெழில் வள்ளியொடும்
பெருத்திடு மன்ன சிலம்பை யகன்று பிறங்கு வளங்குலவுஞ்
செருத்தணி மால்வரை வந்தன னுந்திய சேவ லுயர்த்தபிரான். ()

அண்டர்கள் கம்பிய னன்னதின் முன்ன ரமைத்திடு மாலயமுற்
றெண்டொடி யோடு மிருத்தலு மங்கை யுவந்து வணங்கியெழிற்
கொண்டிடு மின்ன சிலம்பி னியற்கைகள் கூறுதி யென்றிடலு
மண்டிய வக்கிரி மேன்மை யனைத்தையும் வள்ளல் புகன்றனனே.

உப்வகை தந்திடு கந்த னதற்பி னுரக்கிரி வில்லுடையோ
* னவகை மேனியி லோர்வடி வங்கண மைத்தமை யாமகிழ்வான்
மெய்வகை யர்ச்சனை செய்தகி னுள்பல மேவிவிளங் கெழில்சேர்
மைவிழி மாதொடு கந்த விலங்கலின் மந்திர முற்றனனே. (உகசு)

வேறு.

வண்டார் தொடைக்குழன் மருத்துவ னளித்த திருமங்கை
கண்டா ளெழுந்தெதிர் நடந்தாள் பணிந்தனள் கரத்தா
லண்டார் தமக்கரி யெடுத்தே யுரத்திடை யணைத்தான்
விண்டா னுறழ்ந்தவிடை வள்ளியவ டாண்மிசை விழுந்தாள். ()

ஈறுன தற்றபுகழ் யாணருள வள்ளியை யெடுத்தே
மாறு நெடுங்கிரி யிரண்டுட னிரண்டுபொரு மாபோல்
வீறுன கொங்கையொடு கொங்கைக ணெருங்க வுரமீதே
பாறுனி கர்த்தமொழி புல்லிமுக மன்பல பகர்ந்தாள். (உகஅ)

மின்னு நுசுப்பனைய மாதரொ டரித்தவிசின் மீதே
யொன்னா ருடம்பிடி யுடம்பிடி பிடித்தவ னுறைந்தான்
பொன்னா டன்மங்கை யிவள்வந்த பரிசென்ன புகலென்ன
வன்னா டனக்கிவை யுரைக்குமெமை யாளுடைய வண்ணல். ()

---

* ஐவகைமேனியிலோர்வடிவென்றது—சிவசாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், கர்த்திருசாதாக்கியம், கர்மசாதாக்கியம் என்னும் பஞ்சசாதாக்கியங்களுள் ஒன்றாய்ப்பீடலிங்கருபமாய் உள்ளகர்ம சாதாக்கியத்தை.

முன்னுன் முருந்தனிடை வந்தி னெமைத் தழுவ முன்னிப்
பன்று னொடெஞ்சா வணத்தே தவத்தொழில் பயின்றி
ரந்நா ளினும்புடை யடைந்தே மகத்துறை யகத்து
மின்னூர் படைப்பு ளினர் கண்ணும் வளர்விரென விடுத்தாம். ()

மருந்தான வின்பமொழி யிந்திர னிடத்து மாளாய்நீ
யிருந்தா யிருந்துழி மணந்தா முனக்கிளைய வின்று
டிருந்தார் வணங்கெயினர் பால்வளர யாமினிது சென்றே
பொருந்தா னையோடு பலசெய்துவ துவைத்தொழில் புரிந்தாம். ()

செந்தே னறும்பொழின் மருத்தரு செருத்தணி வரைக்கண்
பந்தே பொருந்திய கரத்தா யிருந்தொளி பரப்பு
மிந்தே புரிந்தமுக வின்னமட மங்கையொடு மிங்ஙன்
வந்தே மியாமென மகிழ்ந்தான் மருத்துவன் மடந்தை. (உஉஉ)

சீரா ரடற்குலிச பாணிமக ளானதிரு மாதும்
வாரார் முலைக்குறவர் மாதுமிரு பாலினும் வயங்கப்
போரா ரரித்தவிசின் மீமிசை யிளம்பரிதி போல
வேரா ரடற்குமர நாயக னுவப்புட னிருந்தான். (உஉங)

மைந்துற்ற சேவலு மிருந்தகரு மொண்பணியை வவ்விச்
சிந்துற் றிடேர்திறன் மயூரமொடு வேலுமுயர் தேரு
மெந்தைக்கு நாடொரு மிடும்பணி புரிந்தவ ணிருந்த
கந்தப் புராணச் சுருக்கமு நிறைந்தது களிப்பால். (உஉச)

வே று.

வேல்வாழி மயில்வாழி சேவல்வாழி வேறுமுள படைவாழி விளங்குதண்டைக், கால்வாழி யருள்பொழியும் விழிகள்வாழி கவின்குலவு மீராறு கரங்கள்வாழி, மால்வாழி வாழியெனப் பணிந்து வாழ்த்து மலைமாது தருமுருகன் மகிழ்ந்தவாறு, பால்வாழி யெனை யாளுங் கருணைவாழி பங்கிருந்த மங்கையர்தம் பதங்கள்வாழி. ()

வே று.

ஆதி வாழிய வஞ்செழுத் தோடுவெண்
பூதி வாழிய புண்ணியர் வாழிய
நீதி வாழிய நீள்புவி வாழிய
கோதில் சைவக் குலமிக வாழியே. (உஉரு)

மெத்து வின்பவி யாபக மாகிய
முத்தி தந்தெனை யாட்கொண்ட முன்னவன்
பத்தர் மொய்த்தசம் பந்தன் கமலைவா
ழுத்தன் வாழி யடியவர் வாழியே. (உஉஎ)

வீர வேற்கை விமலன் மகிழ்ந்திடப்
பாரி னோர்கள் பரிந்து புகழ்ந்திடச்
சீரு லாவிய செந்தி னகரிடை
யேரி னேடரங் கேற்றிய விந்நூல். (உஉஅ)

வேறு.

தூய்யதா மறைக ளாலுந் துதித்திட வரிய தான
செய்யவே ளடிகள் வாழ்க சேவலு மயிலும் வாழ்க
வெய்யசூர் மார்பு கீண்ட வேற்படை வாழ்க வன்னான்
பொய்யில்சீ ரடியார் வாழ்க வாழ்கவிப் புவன மெல்லாம்.

ஆருவது தக்ஷகாண்டம் முற்றிற்று.



ஆகச்செய்யுள் - க0சகூ.

## கந்தபுராணச்சுருக்கம்

## முற்றுப்பெற்றது.

வேலுமயிலுந்துணை.





சிவசண்முகன்றுணை.

திருச்சிற்றம்பலம்.

# உபதேசகாண்டம்.

காஞ்சிபுரம்

## குகனேரியப்பநாவலர்

அருளிச்செய்தது.

## சூராதிகளொடுக்கச்சருக்கம்.

காப்பு.

குழவி வெண்பிறை மிலைச்சியோற் குனித்தமா தவத்தி
னிழைத டம்புன லருவிதா ழிமையமீன் றளித்த
மழைம தர்த்தகண் மரகதப் பசும்பிடி பயந்த
தழைம டற்செவித் தந்திபொற் சரணமே சரணம்.

வேறு.

உள்ள மோர்ந்தனர் கேட்டுழி யெம்முழை பொருங்குணர்ந் தொருங்காகப், பள்ள வார்மடைப் புனலெனத் தொகுத்தனை யாமதன் பயன்றுய்த்தேம், வெள்ளை யிற்றுவெஞ் சூரனை முதலியோர் விளிந்தபின் னவராவி, கொள்ளை வேற்படை யொடுக்கிய தன்மையைக்கூறுதி யெமக்கென்றார். (க)

பன்னு மாதவத் துறையுளோர் கேட்டுழிப் பழவினைப் பகைவென்றோன், பின்ன லஞ்சடை நெடுமுடி துளக்கின னுவகையிற் பெரிதுற்று, னன்னகாரண மறைகுதுங் கேண்மினென் றறைகுவா னொருகாலம், பொன்னி லங்குதார்ப் *பன்னிரு தடம்புயப் புங்கவ னெங்கோமான். (உ)

கான வண்டருக் கற்பகப் பொதும்பர்சூழ் கந்தமா தனநின்று
மான வேலொடு மரகதக் கலவமா மயிற்புற மினிதேந்த
வேனை மாநிலத் திருவினை யாடலுக் கெழுந்தரு ளியஞான்று
ஞான நாயக னுமையொடு மினிதுறை கயிலையை நணுகுற்றான்.()

உற்ற காலையிற் களிமயிற் புறனிழிந் தொலிதரு சிறுதண்டைச்
சிற்ற டித்துணை நோவர மென்மெலச் சென்றவச் சிறுகாலைக்
கொற்ற வார்கொடி மயிலொடுங் கயிலையின் கீழுறக் குமரேசன்
கற்றை வார்கதிர்க் கயிலைசென் றிறைஞ்சினன் பன்னிருகரங்கூப்பி.

* இச்சுப்பிரமணியக்கடவுள் பிரதம மகாசிருட்டியிலே மகேசுரருடைய இருதயத்தினின்றும் தோன்றியவர். இது வாதுளாகமத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

கறுத்த கண்டனைக் கண்ணுதற் பரமனை யடியவர் கருத்திமை வெறுத்த காதனை வெண்ணிலாச் சடிலனை வெருவலர் புரந்திய, வொறுத்த வாணனைப் புனிதனைக் கண்டுகண் களித்தன னுளநெக் கான், மறித்து வார்குழன் மரகதக் கொம்பரை வணங்கினன் மகி ழ்பெற்றான். (௬)

வருக முற்றிய தன்டையஞ் சிறடி மைந்தனை யெதிர்நோக்கி யுருகு காதன்மிக் கெழுந்தன னுவகையா னும்பரிற் றலைகின்றான் றிருந டம்புரிந் தனனது நோக்கினன் சிந்தையன் பொடுநெக்கா னுருகு கின்றனன் மெய்பொடித் தரும்பின னயர்ந்தன னக்காலை.

மடங்கு வெண்டிரை பொருதிருப் பாற்கடன் முன்றிலின் முடத்துத்திப், படங்கொள் பாம்பணைக் கண்டுயில் படலையம் பசு ந்துழாய் மணிமார்பன், றடங்கொ டுஞ்சிறை யுவணமீப் பொலிந் தொரு மேருவின் றலைமுந்நீ, ரிடங்கொள் கார்மழை முளரிபூத் தன வென வெழுந்தனன் வருகின்றான். (௭)

தேவி வாழிய திருமறு மார்பினன் சென்றுறுந் திசைநோக்கித் தூவி யன்னமொன் றுகைத்தன னான்முகச் சுருதியெம்பெருமானு மேவு கற்பக நறுநிழ லினிதுறை விண்ணவர் கணஞ்சூழ மூவெ யிற்புரஞ் செற்றவ னுற்றுறை கயிலையை முடுகுற்றார். (௮)

ஆழி மாயனு மருமறைக் கிழவனு மவணிழிந் தயலாகப் பாழி வெஞ்சிறை யுவணமு மன்னமு மொழித்தனர் படர்கின்றா ருழி பற்பல காண்கினும் பிரளய வொடுக்கினு முலவாத சூழி மால்வரை கயிலைமிச் சென்றனர் திருநடந் தொழுதேத்த. (௯)

தொழுத கையினர் துளங்கிய மெய்பின ருருகிய தொடர்போடு மழுத கண்ணின ரன்பினர் சென்றுழி யணிநெடு மணிவாயின் முழுது ணர்ந்தறி நந்திகைப் பிரம்படி முடிதொட ரொருக்கூடு வழுவி யேகினர் திருநடந் தொழுதனர் வழுத்தின ரயனின்றார். ()

மறை முழங்கிய முழக்கொலி யளவறு மாதிரங் கிழித்தோட வறைக ருங்கழ லரிமுதற் புலவரேத் தண்டகோ ளகையோங்க விறைந் ருப்பதச் சிலம்பொலி மன்னுயிர்க் கினிதளித் திடரோட்ட நிறைபெ ருங்கண மரகர வெனுந்தொனி பெருநெடு நிலம்போர்ப்ப.

தேவ துந்துமி முருடொடு பஃறுளைச் சில்லரிச் சிறுபாண்டில் பாவு சல்படு மார்ப்பொடு திமிலைவெம் பல்லியத் தொகையார்ப்ப மேவ ருஞ்சடைப் பரிதி யுவட்டெழ விண்ணவர் கணஞ்சூழத் தாவி னந்திகைப் பிரம்பினு லிமையவர் முடிமணி தகர்ந்தோட. ()

பனிப்ப டாம்பொதி யிமையமீன் றளித்தருண் மரகதப் பசும் பாவை, கனித்த சிந்தையி னருகுநின் றியற்றிய கமலமென் கரப் பாணி, தொனித்த பன்முறைச் சதிவழி சீர்தொறுந் தூக்கிசை செ விதுங்கக், குனித்த நாயகன் றிருநடந் தொழுதனர் விண்ணவர் குழாத்தோடும். (கங)

குழைந்த சிந்தையர் குமிழிவிட் டொழுகிய கண்ணினர் குழை யாகின், றிழைந்த வன்பின ருருகிய வென்பினர் முகிழ்த்தகை யி ணைவாங்கார், விழைந்த வேட்கையி னின்றன ரயர்ந்தனர் மெய் பொடித் துளநெக்கார், தழைந்த செஞ்சடைப் பரமனு ராடல்கண் டுவப்பொடுந் தலைநின்றார். (கச)

இன்ன ரின்னண மாடல்கண் டுவப்புறி யெறிகதிர்க் கயிலைக்கீழ்
மன்னு சேவலு மரகதக் கொடுஞ்சிறை மயூரமு மினிதுற்ற
வன்ன காலையிற் சூரனும் பதுமனு மரிமுகத் தவனுங்கூர்
மின்னு வெள்ளெயிற் றடுசினத் தாரக னெனப்படு வெய்யோனும்.

பூத வெங்கணக் குலத்திவர் நால்வரும் பொறிமயிற் கருகேகிப்
பாத கிண்கிணிப் பங்கயம் பொறுத்தநின் பெருந்திறல் சொலற்பாற்
கேத னத்திறற் குக்குடத் தடுதிற லெவர்கிளத் துவர்கெட்டே[மே
போதி ஞன்முகத் தலைவனு நம்மடி போற்றுத லெளிதன்றே. ()

இவைய றிந்துமற் றறிகில ராமென வெறுழ்வலிக் குடையோர்போ
கவர்கொ டுஞ்சிறைக் கலுழனு மன்னமுங் கருத்துற மதியாவா [ற்
யவம தித்தன வறிந்திலீர் போலுமற் றும்மொடு மடுபோர்க்கென்
றுவைசெ றுப்புழி நும்மொடு நால்வரு முருத்தெழுந் தடனிற்பேம்.

எனமொ ழிந்தன விருசெவித் துளைபுக வெரிப்பொறி விழி கால, வனம யில்குலச் சிறைபுடைத் தெழுந்தது வாரணஞ் சினஞ் சீறிப், புனைபு டைச்சிறை யடிதொடப் போர்த்தது பொரத்துணிந் ததுபூதத், தினர்வி ழிக்குலம் வடவைகக் கியவுருத் தெழுந்தன ரெதிர்நோக்கி. (கஅ)

உருவு சீற்றமொத் தெதிர்வர நோக்கிய வுவணமு முலகோங்கிப்
பொருபெ ருந்திரைப் பிரளயஞ் சுவற்றியபுடைச்சிறை புடைத்தா
விருகொ டுஞ்சிறை மலரய னன்னமு மெதிர்நடந்ததுதம்மிற்[ர்ப்ப
செருவி ளைத்தடு திமிலமிட் டரப்பின திருகின சினஞ்சீறி. (கக)

வே று.

தெழித்தன வுரப்பின சினத்தன கனற்பொறி தெறிப்ப வெதிரே
விழித்தன கடித்தன மிதித்தன வலங்குதிரை வேலை சிறையாற்
சுழித்தன வுவட்டெழ நெடுங்கிரி முடித்தலை துளங்கி யதிரக்[மறுக.
கொழித்தெழு நிலத்துகள் கொழுந்தொடு படர்ந்துதிசை கொண்டு

ஆதவ னொளித்தன னசும்புறு பசும்பொனுல கண்டர் வெருவிப்
போதர நினைத்தன ரிடிக்குல மிடிப்பொடு பொரிந்து திருமான்
மீதொடு நெடுஞ்சிகர மாயிர நிரைத்தவட மேரு வரையு
மாதிர முழக்கவரு மாருத மெனப்பதறி மம்ம ருறுமால். (உக)

வாளெயி றதுக்கிய கணத்தலைவர் காலவரு மஞ்சி னவினர்
கோளுறு சிறைக்கலுழ னேடெதிர் மலைந்தமர் கொடுத்த னர்களாற்
றுளொடு செடித்தலை கடித்துதறி டச்சிவி தடஞ்சி றையினுன்
மூளுறு சினக்கலுழ னெப்பிடர் புடைத்தது முழக்க மெழவே.(உஉ)

ஆரண முதற்றலைவ னேறிய தடஞ்சிறை யனத்தி னுடனே
வாரண நெடுங்கொடி மலைந்ததிற லீதென வழங்க வசமோ
கூரடி யுகிர்ச்சுவடு கொண்டெகின நெஞ்சுகுறை பட்ட குறைவாய்ச்
சோரியுக வித்தெழ வயச்சிறை புடைத்தது துறக்க மதிர. (உ௩)

இத்தலை யருஞ்சம ரிழைத்தகரு டக்கொடி யிழந்து நெடுவான்
மொய்த்தசிறை தட்டிபெழ வோதிம மதன்பிரகு முந்து றுவதாற்
கைத்தலை நெடுங்கதை பொறுத்தெறிகணத்தலைவர் கண்டு கதழ்வார்
சித்திர மயிற்கொடிய குக்குட மவற்றின்வழி சென்று தொடர. ()

சென்றிடுபெ ருந்திசையு மண்டமு மதிர்ந்துயிர் சிதைந்து மறுக
மன்றன்மல ரோனுல கடைந்தெகின் மறைந்தது வபக்க வுழனு
நின்றெழுது னுக்கொடு முகுந்தனுல கத்திடை நிமிர்ந்து மறையக்
கன்றியம னத்தொடு தொடர்ந்தடி படர்ந்தது கலாப மயிலே. ()

ஆயிர மிதழ்க்கமல பீடிகை யிருக்குமய னூதி யுலகிற்
பாயது கணத்தினி லனத்துயிர் செகுத்தது படர்ந்து நெடுமா
னேயது முகுந்தனுல கெய்திப விருஞ்சிறை வயக்க வுழனைப்
போயுயிர் பறித்தது முகுந்தனுல கம்பொடி படச்சி தறியே.(உசு)

அங்கணம ரர்க்குமுத னுயக முகுந்தனுல கத்தை யழியாச்
செங்கமல நாயக னிருந்தவுல கப்பதவி சிந்தி டமுனிந் [தெரிசூழ்
தெங்கணும் வெகுண்டுகொடி வாரண முயிர்ப்பொறை சொறித்த
வெங்கனிகல் வாளெயி றடைத்சலைவ ரெங்கணும் வெகுண்டு முனிவார்.

இப்படி யருஞ்சம ரிழைத்திடு மதிர்ப்பினி லெழுந்த விமையோர்
கப்படி விரற்பத முறுத்தநெடி தோடினர் கலக்க முறுவா
ரெப்படி யினிக்குடி யிருப்பதென விம்மலி னிரங்கி வெருவா
மைப்படி களத்தனட னம்புரி தருங்கயிலை வந்த னுகினர். (உஅ)

அன்னவர் திருக்கயிலை யண்மினர் கொடுஞ்சம ரடர்த்த மயிலு
மின்னெயி றுடைக்கணமும் வாரணமு மக்கயிலை வெற்புமருவி
மன்னியொரு பாகமுற முந்தமர ரம்பொனணி வாயி லினுரூ
வின்னலிவை யாரொடும் விளம்புது மெனத்தனி யிரங்கி மெலிவார்.

ஆயது நிகழ்ந்தபொழு தாரண முதற்பரனை யாடல் பரவிச்
சேயொளி விரிந்தபத பங்கயம் வணங்கினர் திரும்பி வரலு
மாயனை யெதிர்ந்துநெடு வானவர் குழாமொடு வணங்கி வழிபா
டேயது புரிந்துவெரு வந்துபடு தங்குறை யிரந்து புகல்வார். (௩௰)

வேறு.

மூவா முதலே முளரித் திருநாபிப்
பூவா லுலகளித்த புண்ணியனே யெம்முயிரைக்
காவா பெனிலெவரோ காப்பார் கடலுறங்குந்
தேவா பசுந்துழாய்ச் சென்னிப் பெருமானே. (௩௧)

அன்றோர் களிறுதி மூல மெனவழைப்பச்
சென்றோடி யோடா விடர்தீர்த்த சேவகனே
குன்றா னிரைகாத்த கோவே யுலகளந்து
நின்றா யெரிவிழிக்கு நேமிப் பெருமானே. (௩௨)

அய்யோ வமர ருலகிழந்த தாழியாய்
வெய்யோ மெமைக்காப்பா ருன்னன்றி வேறுளரோ
மைபோடு மேனி மயூரக் கடுஞ்சிறையாற்
செய்யா ளுறைநின் றிருநாடுஞ் சிந்தியதே. (௩௩)

வாழி மலரோ னிருக்கு மலர்க்கோயில்
பூழி படச்சிதைந்து போயினதே புங்கவரு
மாழி வரைப்புறத்தோ வண்டத்தி னப்புறமோ
வூழி யிகந்தா யெளியே முணரோமால். (௩௪)

நீறோறு தாமரையோ னேறு நெடுந்தூவிச்
சீறோறு மன்னஞ் சிதைந்ததாற் றேந்துளவக்
காரேறே பூங்கமலக் கண்ணா கடல்வண்ணா
போரேறே நீயேறும் புள்ளரசும் போயிற்றால். (௩௫)

வெண்பாற் பிறையெயிற்று வெவ்வாய்க் கணநால்வ
ருண்பா னவர்க்கிவ் வுலகடையப் போதுமோ
வெண்பா லடங்குமோ வெம்மோ ரிருப்பெல்லாங்
கண்பாற் கருணை சிறிதுளவேற் காண்பேமால். (௩௬)

என்று வணங்கி யிமையோ ரெதிர்நிற்பப்
பொன்னுண் முளரி புயல்பூத் தனைபோலும்
பன்னுண மலர்க்கமலப் பண்ணவனும் போயினர்
மின்னு ரலங்கிலைய வேலோற் குறுகினர். (௩௭)

கண்டா ரிருகண் களிகூர்ந்தா ரோர்மருங்கு
தண்டா மனாமேக மன்னன் றனிநின்று
ஞெண்டா மனாத்தவிசில் வீற்றிருக்கு மோதிமத்தோன்
விண்டா னுழந்த பரிசெல்லாம் விளம்புவான். (௩௮)

வாரார் முலையுமையா ளீன்ற மகவேயெம்
போரேறே வானுலகங் காத்தளித்த புண்ணியனே
தாரோ டியகடப்பந் தாரோய் சமர்கடந்த
வீரா மயூரா விளங்கிலைய வேலோனே. (௩௯)

தேவே புரந்தரனுர் செல்வமேசெங்கமலப்
பூவே யெனக்கும் பொருள்விரித்த புண்ணியனே
தூவே யலங்கிலைய வேலோய் சுருதிபருக்
கோவே கடம்பலரும் பன்னிருதோட் குன்றமே. (௪0)

நாதா வொருதனியே நான்மறையே நாப்புரட்டி
யோதா மறையேய் பிரணவத்தி னுண்மையே
பூதாதி நின்றும் புலப்படாப் போர்க்களிறே
வேதா கமத்துறையே தண்கருணை வெள்ளமே. (௪௧)

தேங்கு திரைததும்பு தெண்ணீரின் மெய்ஞ்ஞான
மோங்கி நிரம்பு சரவணத்தி னுற்பவமே
தாங்கு சிறிய தண்டைத் தாளோ யிடையறுப்
பூங்கருணை யாறுமுகம் பூத்தபொலம் பொற்கிரியே. (௪௨)

கூற்றமுரணறுக்கு மாறெழுத்துக் கொண்டடியேம்
போற்று மெளியாய் வலியாய் புராதனனே
யாற்ற வரும் புலத்தை வென்றோ ரகந்தெளிய
நோற்றிழைத்த வெண்ணு னுடங்குமணி மார்போனே. ()

என்று பலவு மெடுத்தேத்திக் கைகூப்பி
நின்று மலர்வாய் புதையா நிகழ்த்துவான்
கன்று சினக்கணமுங் குக்குடமுங் கார்மயிலுஞ்
சென்றெகினத் தோடுங் கலுழனெடுஞ் சிறினவால். (௪௪)

சீறுஞ் செயலொழிந்த தின்சிறைய வன்கலுழ
னேறுந் தமியே னெனத்தாங்கு மோதுமத்தோ
டாறுஞ் சிறகோய்ந் தலமந் தமரிழந்து
மாறுஞ் சினவாய்ப் புறங்கொடுத்து வானடைந்த. (சரு)

பின்போ யெனதிருக்கை மாளப் பெரிதிழைத்து
வன்போடென் னேதிமத்தை மாய்த்து வயக்கலுழ
னென்போ டொடிய முடித்துமறிந் தேங்கினவாற்
பொன்போ லுருவா யரியுலகும் போயிற்றால். (சசு)

வானோ ரனேக ரிறந்தாரவ் வானோரி
னேனோர் வடவனையும் பல்வனையு மெய்தினார்
யானோ புகல்வ னிவர்பிழைத்தா ரீங்குற்றார்
தேனோ டினவண் டுழுபூந் தெரியலாய். (சஎ)

என்றுரைத்த வெல்லாந் திருச்செவிதாழ்த் தெம்பிரான்
குன்றுருவ மன்ன கணத்தோர்க் கொணர்கென்று
னின்ற கணத்தோர் நெடிதோடிக் கூவுறலு
* மன்றிழைத்த சூரன் முதலோர்வந் தண்மினார். (சஅ)

நாவாய் வறப்பக் குறுத்தா ணடுநடுங்க
வோவாத் திறலோய்ந் துயிர்நடுங்கி யுள்ளழிந்து
மேவா வெருவருத்த நின்றனரால் வெங்காலத்
† தீவாய்ந்த கண்களுடன் பாலிற் றெளிந்தனவால். (சகூ)

வந்தா ரடியற்ற மாமரம்போல் வீழ்ந்துபணி
தந்தா ரவனைத் தனிவே லிறைநோக்கிச்
செந்தா மரையுலகு மேலுலகுஞ் சேதித்தீ
ரந்தா வலிதொலைத்து வானவர்க ளுடழித்தீர். (ரு௦)

நீவி ரினிப்போய் நெடுநீர்ப் பெருநிலத்துப்
பாவ நிருதகுலத் துற்பவித்துப் பன்முறையாற்
றேவ ரிவர்க்கிடுக்கண் செய்வீர் கடைமுறையெம்
பூவிலைய வேலாற் றொலைந்து கதிபுகுவீர். (ருக)

என்னுங் கடுஞ்சாபங் கேளா விகற்பூதர்
மின்னுஞ் சுடரிலைவெள் வேலோற் பதம்போற்றி
மன்னுங் கொடியே நிருதர்குலம் வைகுறினு
நின்னன் பகலாத நெஞ்செமக்கு வேண்டுமால். (ருஉ)

---

† தீவாய்விழித்தவிழிபாலிற்றிசழ்ந்தனவால் என்றும் பாடம்.

* அன்று - பகைமை.

ஈதன்றி மற்ரென் றுளதா லெளியெங்கள்
போதுங் குலத்துப் புரிதவத்தா னெட்டிலைவேல்
காதுந் திறத்திறக்குங் காலை மயிலாகிப்
பாதம் பொறுக்கக் கொடியாகப் பாலிப்பாய். (ருங)

ஆய வரமிரண்டு மெம்பா லருடியெனத்
தாய முறுக்கெயிற்றுச் சூரன் பதுமனொடு
மேய வுவகையொடும் பெற்ருன் மிகுதவத்தான்
மாயை வயிற்றிலிவர் நால்வோரும் வைகினர். (ருச)

மாளா வலிதொலைந்து மாண்ட வயக்கலுழன்
ருளார விந்தனு ரேறுந் தனியெகினந்
தாளாய் முடிந்த சுரருலக மெம்பிரான்
ரேளா திரண்டுடையான் சொல்லினிலை பெற்றனவால். (ருரு)

மூரிக் கமல விழியாற்கு மூதுணர்ந்த
வேரிக் கமலத் தயற்கும் விடையருளி
வாரிக் கருணைப் பெருமான் மயிலுகைத்துப்
பாரித்த கந்தப் பனிவரையிற் போயினன். (ருசு)

என்று மிளையா னியம்பு மொழிதிரம்பாத்
துன்றுந் துணைத்தடந்தோட் சூரன் பதுமனொடு
மொன்று தனிவயிற்றி னேருருவா யுற்பவித்தான்
னின்ற விருவ ருடன்பிறந்தார் நீணிலத்தில். (ருஎ)

சூலப் படைபொறுத்த சூரபன்ம னென்றெருவன்
சீலக் குணமொழிந்த சிங்கமுக னென்றெருவன்
சாலத் தவமிழைத்த தாரகனென் றொருவன்
ஞாலத் தசுரர்குல மன்னவராய் நண்ணினர். (ருஅ)

பூவிற் பொலியும் புனைகழலோன் போர்வேலாற்
காவற் கணத்தோ டிருவர் கலந்தொழிந்தார்
தூவிற் பொலிசூலச் * சூர னுயிரிறந்து
சேவற் கொடியு மயிலுமெனச் சென்றெழிந்தான். (ருசு)

ஈது நிருதர்பிரா னெய்தியவா றிக்காதை
யாதி முதனு ளரும்பியதா லென்றருளிச்
சூத னுரைத்த பரிசெல்லாந் துரிசறுத்த
மாதவத்தோர் கேட்டு வழுத்தி மகிழ்சிறந்தார். (சுo)

---

* சூரபன்மாவிறந்து—சென்றெழிந்தார் என்றும்பாடம்.

வே று.

ஈங்கிவளிப் பரிசாய தெனவுணர்த்த வுணர்ந்தனம்யா மினிநீ யையவாங்குபிறை வளையெயிற்று வாளவுண ருயிரொழிய மடிந்த ஞான்று, வீங்குதுணைப் பணைத்தமுலை யசமுகியு மிவட்பயந்த வெய்ய வேற்கட், டாங்குகருங் குழன்மாயை யெனுமவளு மொழிந்த வழி சாற்ற வேண்டும். (௬க)

என்றுமுனி வரரியம்ப விருந்தவத்தி னிருங்கொழுந்தா யெழுந்த சூதன், வென்றுபுலன் களையிகந்த மாதவத்திர் கேண்மினென விளம்புமேருட், பொன்றிகழ்கிண் கிணிமுளரித் தண்டையர்தாண் முருகனொடும் பொருத ஞாட்பின், மன்றலெழுங் குழன்மாயை கதிர்ப்பகைக்கோர் மறையறைந்து மறைந்து போனாள். (௬உ)

போயநெறித் தலைப்பயந்த மகட்புணர்ந்தோன் ஷெடும்பிறந்த புதல்வர்க் கெல்லா, மேபவிற லினிப்புகுதா தொருகுமரன் றிருக் கைவடி வேலால் வீவ, ராயதுவந் துறுமளவை யிவணிருத்தி மந்தரவெற் படைகின் றேன்யான், றீயநெறிக் கொடுஞ்சூரன் முதலி யோர் களத்துலக்குஞ் செயனீ யோர்வாய். (௬௩)

மந்தரவெற் பினையடைந்து சீகுலமாப் பருப்பதத்து வருகின் றேன்யா, னிந்தநெடுங் கொடுஞ்சமரி னிவரிறப்ப துணர்ந்துபின்ன ரிவணு ருது,வந்தொழிதி வருந்தலைநீ சீகுலவெற் பினைநோக்கி வருதி யென்னு, வந்தரவா னவர்குறித்து நகைவழங்க மாயையவ ணக ன்று போனாள். (௬ச)

பொருசினத்த வாளவுணர் கிளைமுழுது மடுகளததுப் புலவு வேலாற், செருவொழிய வுயிரிறந்தார் மாயைதனைப் பயந்தளித்த தீயோ னோடுங், தருவுலகஞ் சிறைப்படுத்த சூரனரு ளிரணியன்பா தலத்துச் சார்ந்தா, ஞருகியசெம் பெனத்தெளிந்த கண்ணியசமுகி யரற்றி யோடி னாளால். (௬ரு)

மலைத்தலைவெம் முலைத்தலத்தி னிடியெனத்தன் கரம்புடைக்கு மருளு மேங்கும், பிலப்பகுவாய் திறந்துமுக டதிரவெடுத் தழுதரற்றும் பின்பார்த் தோடுங், கொலைத்தலைமுத் தலைப்படையோன் கொடுத்தவர மின்றளவோ வென்று கூறு, முலைத்தலைநின் றுருகு மெழு கெனக்குழைந்து தனையீன்ற ளுறையு ளுற்றாள். (௬௬)

சீகுலமாப் பருப்பதத்தி னழுதரற்றிச் செல்வாளை யெதிர்ந்து செல்லா, மாகுலமுற் றுறமடிந்த தெனவுணர்ந்த மாயைநெடு மண்ணில் வீழ்ந்தாள், சோகமெடுத் தலைப்பமற்றை யசமுகியு மவளடியிற் றுயர்ந்து வீழ்ந்தா, ளாகுலத்துக் கொருநிலைய ருலகதிரத் தழு வியழு தரற்றி னாரால். (௬௭)

அந்தரவா னவர்பணித்த பணிதலைக்கொான் டியற்றுமுடம் பயர்வு தீர்ந்தார், கந்தருவ ரியக்கர்சித்தர் விஞ்சையர்தந் தீராத கவ் வை தீர்ந்தார், சுந்தரிமங் கலந்தடவி நெஞ்சுதொட்டு முழுவலித்துத் துயாந் தீர்ந்தா, லிந்திரனை முதலினேர் காற்றழும்புங் கரத்தழும்பு மிழந்தா ரின்றே. (௬அ)

பொருவருவெண் குடைநிழற்றிப் பொதுக்கடிந்து பலவண் டம் புவன மெல்லா, மருவரம்பெற் றினிதளித்த வசுரர்குலம் பொ ருகளத்தி னவிந்து மாளத், தருவிழந்த விந்திரற்கன் றடுகளத்தி னெதிர்ந்துபுறந் தந்து மானச், செருவிழந்த தலைவரினி முகமலர்ந்து தமதுபதஞ் செலுத்து வாரால். (௬௯)

அரிமுகவ னெடுத்துரைத்த மொழியுணரா யண்டமுற்று மள ந்த செங்கோ, லெரியினுகுத் தனைபோலும் பெருவரனு மெறும் வலியு மிழந்தாய் போலு, முரியவுயிர்த் துணைவரொன வொருவரா யினிப்பிறப்பா ருளரோ கெட்டேன், விரிதருகற் பகநீழ லிந்திரனு ரரசுகொண்ட வெகுளி வேலோய். (எ0)

ஒழியாத பெருவளனு மூவர்க்குஞ் சலியாத வரனு மென்று, மழியாத பெருவரனு மழிந்தனைமற் றுனதெழிலு மழிந்த தேயோ, சுழியாறு சடைக்கரந்தோன் மதலையிவ னெனவுரைத்த சொற்கே ளாயாற், பழியாவி சுமந்துநும்மை யிழந்திருந்தே னுடன்பிறந்த பரிசு நன்றே. (எக)

எனவாற்று மசமுகிகட் குமிழிபெடுத் தெறிபுனலை யிருகை மாற்றி, மனமபக்க மொழிதிபென மாயைமகட் கருகிருந்து மம்மர் தீர்ப்பாள், புனைமயிலுங் கொடியுமெனப் பெறற்கரும்பே றினிது பெற்றுப் பொலிந்தான் முன்னே, னனமுகைக்கு நான்முகனு மரி யுமிவ் னடிதொழுதற் கணிய ரன்றே. (எஉ)

பண்டிழைத்த மாதவத்தாற் கிடைத்தனன்மற் றிதுவிதன் மேற் பதவி யுண்டோ, தண்டையஞ்சி றடிகதுவுந் துகள் * படியப் பெற்றனனெத் தவமோ வென்ன, வண்டிமிர்பைந் துணரோதி யன் னையுரைத் தனளவனை வதன நோக்கிக், கெண்டையங்க ணசமுகி யுஞ் சிறிதுமனக் கவலொழிந்து கிளப்ப தானுள். (எங)

சூரபன்ம னடுகுருதிப் புகர்முகத்த வேலினுரந் தொலைந்து வெற்றி, வீரநெடுஞ் சிறைமயிலுஞ் சேவலுமா யினனென்ன விள ம்பி னுபத், தாரகனு மரிமுகனுஞ் சென்றடைந்த திசையுணரோன் றமியே னன்னோர், சோரிசொரி முத்தலைச்சூன் மறலிவலைப் பட்ட னரோ சொல்க வென்றுள். (எச)

---

* இழுகப்பெற்றனன் என்றும் பாடம்.

ஆபதுமுற் றுணர்ந்தறிவா னுலாக்கின்றே னசமுகிமற் றறிநி யென்ன, மாயையுனாத் திடுமனையோர் கயிலைவரு கணத்திறெடும் வாழ்ந்தா ரென்னத், தியவிளைத் திடுமிவரிப் பெறற்கரும்பே றடை ந்ததென்னை செப்பு கென்ரு, டாயெனமின் மிவட்பயந்தா ளவட்கறி ந்த முறையனைத்துஞ் சாற்ற லுற்றுள். (எரு)

முன்னெழிந்த நெடுங்காலத் திரைதிரைமின் றுவட்டெடுக்கு மூரி முந்நீர், தன்னகத்து நவதீவிற் சாகத்தீ வொன்றுளதா லதனுட் டோன்றி, மன்னியசெங் கோலோச்சி யொருகுடையி னுயிர்புரக்கு மன்னர் மன்னன், பொன்னவிர்பைங் கழற்காற்ப்ர பாகரனென் றுளனொருவன் புலவு வேலோன். (எசு)

அனையவனுக் குயிரனையா ளொருத்திபக மாட்சிபுரந் தளிப்பா ளன்னுள், புனைமணிமே கலைபசுகு மாரியெனும் பெயருடையாள் பொற்பி னிங்காள், கனைகழற்கா லரசனெறி முறைதிறம்பா ளருந் ததியிற் கற்பி னிற்பா, ளினையரிவ ரளவிறந்த நெடுங்கால மரசு புரிந் திருந்தா ரன்றே. (எஎ)

ஈங்கிவர்மின் றிழைத்தபெருந் தவப்பயத்தா லினிதுவப்பி னெ டுத்து மோப்பத், தீங்குதலை மதலையொரு நால்வர்பிறந் துளரிவர்க் குச் செங்கோல் வேந்த, னேக்குதிறற் சூரனென்றும் பதுமனெ ன்று மிரட்டையருக் குரைத்தே னோர்க்குத், தாங்குகழற் சிங்கனெ ன்றுந் தாரகனென் றும்புனைந்தான் றும வேலான். (எஅ)

தங்குலத்து முதியோர்பே ரீன்றெடுத்த மதலையர்க்குத் தந்த பின்னர்ப், பொங்கொளிப்பைங் கழலிவர்க்குன் முன்பிறந்த சூரனு க்குப் புரவு நல்கிச், சிங்கவா தனத்திருத்தித் தேவியொடு மருந்தவ த்திற் சென்ரு னன்னே, னங்கவைவ னுலகுபுரந் தொருகுடையி னுயிர்க்குதவி யருளி னுனல். (எசூ)

அறநெறிச்செங் கோலோச்சி யவனிபுரந் தினிதளிக்கு மங் நாட் டென்பாற், குறுமுனிகுண் டிகைதூக்குங் கரத்தினனு தரித் திடுகைக் குடைய னுகி, மறைதவத்தோ ருருவுகொண்டு வந்தனை யோன் றனதிடத்து வரவு நோக்கி, முறையினினி துயிர்புரக்குஞ் சூரனருந் தவற்கெதிர்போய் முறையிற் றுழ்ந்தான். (அ0)

அருந்தவமே யருந்தவத்தோர்க் கருமருந்தே யாரணமே யளி யேம் பெற்ற, பெருந்தவமே முழுஞானக் கலைக்கடலே யெழுந்தரு ளப் பெற்றே னெந்தை, திருந்துமல ரடிதீண்டக் கடற்கிடந்த தீவு ஞ்செய் திறனன் றென்னக், குருந்தமலர்த் தமிழ்ப்பொதியக் குறு முனியைத் தன்கோயில் கொண்டு புக்கான். (அக)

புக்கமுனி வனைத்தாளங் குயிற்றுமரி யாசனத்தி னிருத்திப் போற்றித், தக்ககடன் முறையாவுந் தம்பியரோ டினிதியற்றத் தமி ழின் வேந்தன், மிக்கெழுந்த பெருவகை வெள்ளமுளத் துவட்டெ ழிய வியர்து நோக்கிப், பக்கமருங் கிருத்தினைத் தொழுதிருந்தா னன்னவர்க்குப் பகர்த லுற்றான். (அஉ)

வேறு.

ஆய வெண்குடை நீழலி னவனிகாத் தளிக்குந்
தூய சிந்தையிற் றுரிசறு பெருங்குண முடையீர்
மேய நுங்களைக் காண்குறும் விருப்பொடு மடைந்தோ
மேய நுண்பொரு ளொன்றுள தியம்புதுங் கேண்மின். (அங)

அறிவி னுவுளந் தூயவர்க் கன்றிமற் றறிவிற்
சிறிய சிந்தையிற் றீட்டுவ தன்றிது தெரிக்கின்
மறுவின் மாட்சியின் மந்திரத் துபநிடத் துச்சி
யுறுவ தியாரினும் புலப்படா தொருபொரு ளுளதால். (அச)

கண்ணிற் காண்பன யாவையுங் கட்புலன் கதுவா
தெண்ணிற் காண்பது மெண்ணுறு புலன்களு மெண்ணும்
விண்ணிற் காண்பது மேலெனு மெவற்றிற்கு மேலாய்
நண்ணிக் காண்பது மப்பொரு ளல்லதார் நவில்வார். (அரு)

இருமு கங்களோ ராறுடன் றீவினை யனைத்தும்
பொருது வென்றுளன் பன்னிரு புயமுளன் புலரிப்
பரிதி யாயிர மென்னவின் றிமைப்பது பணியார்
குருதி யூற்றெழு வேற்படை திருக்கரங் கொள்ளும். (அசு)

தெய்வ மாமயி லொன்றவன் சேவடி தாங்கு
மைய வம்மயிற் பெருவலி யாரளந் தறிவார்
வைய முற்றவுங் கொறிக்குமோர் வாரணக் கொடியன்
பொய்யில் கேள்வியி னதன்றிறம் யாவரே புகல்வார். (அஎ)

முருக நாயகன் சேறடி முளரியிற் சிறுதாள்
பொருவின் முக்கணன் புயங்களு முமைமுலைப் பொருப்பு
மருவி வாழ்ந்தன சிறிதுநாண் மாமயிற் பெருமா [கேம்.
னெருவில் வைகலும் பொறுத்தன னென்னிலென் னுரைக்

மூவ ராகிய முப்பெருந் தொழிலுடை யவர்க்குந்
தேவ ரியாவர்க்கு மருந்தவஞ் செய்தியற் றுநர்க்கு
மோவி லெண்குணத் தனையனை யுளத்தமைத் தல்லால்
யாவ தாகுவ தன்னவர்க் கெடுத்தியா மியம்பில். (அசூ)

ஈது ளப்படுத் திருத்திநீ ரெம்பிரா னிருதாட்
போது வைகலும் போற்றுதி ரென்றனன் புகலா
வாதி நாயகற் குவமைசா லருந்தவத் தலைவன்
வேத வேதிய ஞசிகண் மொழிந்தனன் வியப்பின். (௯0)

சாகத் தீவினின் றருந்தவத் தவமுனி தனைவா
யோக நாயக னொருவழிப் புகுந்தன னுவர்க
டோகை வாகன மெம்பிரான் சேவலந் துவச
மாகல் வேண்டுநா மென்றுதம் மருமனத் தடைத்தார். (௯௧)

திரண விந்துவென் றொருமுனி சென்றனன் றிரைநீ
ரரண வேலியச் சாகத்தீ வாங்கவற் கெதிர்போய்ச்
சரண பங்கயம் பணிந்தனன் முரகன் சிந்தை
முரண கற்றரி முகவனும் பணிந்துகைம் முகிழ்த்தான். (௯௨)

முகிழ்த்த கையின ருருகிய சிந்தையர் முனிபா
னெகிழ்த்த நெஞ்சினர் புனற்படு கண்ணினர் நிறைந்த
மகிழ்ச்சி கூர்தர மாமதிற் கோயில்கொண் டணைந்தா
ரிகழ்ச்சி யில்லதோர் முழுமணித் தவிசக மிருத்தி. (௯௩)

செய்ய வேண்டுவ வரன்முறை யாவையுஞ் செய்தா
னைய நின்னடி தொழப்பெறு மருந்தவம் யாதோ
வையம் யாவையும் புரந்தன மாயினு மறுமை
வெய்ய தீவினை யொழிந்தனம் யாமென வியந்தார். (௯௪)

அன்ன மன்னவர்க் காசிசொற் றங்கையா லமைத்து
மன்னு யிர்க்கினி தோர்குடை நிழலின் வகுத்திர்
பன்னு நூன்முறை திறம்புறு தறனெறி பயந்தீ
ரின்னு மொன்றுள துமக்கெடுத் தியம்புவா னியைந்தேம். ()

அதுக ருத்துணர்ந் தறிகுதி ரரியரற் கெனவோர்
மதலை தோன்றினன் மாநிலத் துயிர்புரந் தளிப்பான்
விதுமு டிச்சடை யவனையும் வேரிவண் டரற்றும்
புதுந றுந்துழா யவனையு மொழித்துயிர் புரப்பான். (௯௬)

அவனு கைக்குமோ ரழிமதக் கலுழிமால் யானை
புவன முற்றுற விடிபடுத் தண்டமேற் புரட்டி
யிவர்த டந்திரைப் பிரளய நடப்புறி னெதிர்போய்க்
கவர்து ளைக்கரத் துறிஞ்சிநின் றுருயிர் காக்கும். (௯௭)

அன்றி யின்னுமோ ரருமறைப் பொருளுள தறைவாங்
குன்று யிர்த்தெழு மரகதக் கொழுங்கொடி யுருவாய்
மின்றி ரித்தன முத்தலை வேற்படை பொறுத்தாள்
பொன்றி கழ்ந்திடு மேருவும் வையமும் புரந்தாள். (கூஅ)

புரந்து மாநிலம் பலமையுஞ் சுரிகையும் பொறுத்துக்
கரந்து பல்லுயி ரனைத்தையு மொருநெறி காப்பாள்
சுரந்த கங்கையஞ் சடையின ருடனடந் தொகுத்தாள்
பரங்கு றித்திடி லவளல துயர்ந்துளோர் பகரார். (கூகூ)

அனைய ஞூபுரத் தளிரடி தாங்குவா ளரிக்குப்
புனையு நான்மறை நாற்பத மெனத்தவம் புரிந்த
சினவு வள்ளுகி ரொனத்தவம் புரிந்தது திங்கள்
கனலி யிற்றெழுந் துருப்பினு மெதிருறீஇக் கவரும். (க00)

நுமக்கு வேண்டிய திக்கதி நோக்கிமற் றினையோர்
தமக்கு வேண்டிய பூசனை வான்முறை தந்து
சமர்த்த லைப்பகை கடந்துபுன் பிறவிநோய் தவிர்ப்ப
தெமக்கு வேண்டிய திதுவென மொழிந்தன னெழுந்தான். ()

முனைவ னேவிய பின்னரிந் நால்வரு முயலாத்
தனையர் பாவுல களித்தனர் தவஞ்செயத் தணந்தார்
புனையு மாமயில் வாரணம் வாளரி புகர்மா
நினையு நெஞ்சின ரப்பதம் பெறுகுவா னினைந்தார். (க0உ)

மஞ்சி யங்கிய பருப்பத வனத்திடை வைகிப்
பஞ்ச வக்கினி நாப்பணின் றருந்தவம் பயில்வார்
செஞ்சு டர்க்கதிர் பொழிமழை யிரும்பனித் திவலை
நஞ்செ திர்ப்பினு மங்கிலை யல்லது நடுங்கார். (க0ங)

இக்க ணின்னவ ரருந்தவ மியற்றிடு மெல்லைத்
தொக்க நான்முக னிமுதல் வானவர் துவன்றப்
புக்கி யாமனை புதல்வன்மற் றரியரன் புதல்வன்
முக்க வன்திரு நடந்தொழக் கயிலையின் முன்னி. (க0ச)

தத்த மூர்தியக் கயிலையின் மருங்குறத் தணவா
வத்த னைத்திரு நடந்தொழக் கயிலைவெற் படைந்தா
ரித்த லைச்சிறைக் கலுழனு மன்னமு மெதிர்ந்த
சித்தி ரக்கலா மயிலினை யடைந்தன செப்பும். (க0ரு)

சாகத் திவகத் தாசரோர் நால்வருந் தழுவித்
தோகை யுங்கொடிச் சேவலுந் துர்க்கைவா ளரியும்
வேக வெம்பரிச் சாத்தனின் றுகைக்கும்வெங் கரியு
மாக வேண்டிநின் றருந்தவ மழன்முகத் திழைப்பார். (க0சு)

வருட நாற்பதி னுயிரஞ் சென்றன மதியி
ரருட ரும்பத முங்களுக் கிழக்குறா ளடுத்த
பொருவி னும்பத மின்றுகொ ளுளெகொல் புகுவார்
வெருவ ரும்புனல் வருமுன மணைசெயல் வேண்டும். (க0எ)

என்னக் கூறியே கலுழனு மன்னமு மேக
வன்னக் கார்மயின் முதலிய வாகனங் குழுமித்
தின்னச் சீறிய வாமெனு மடுசினந் திருகிக்
கன்னற் போதினி லவருழைக் கடுகின கனலா. (க0அ)

கனல்வி ழித்தன வனமெலாம் பொடித்தன கதுவி
யனன்மு கத்துநீ ரருந்தவ மிழைத்தவா றறைவீ
ரொனவு ரப்புரை செவிபுக நால்வரு மேங்கி
மனன டுக்குற வரன்முறை நினைந்தவா வலித்தார். (க0கூ)

அச்சொற் கேட்டலு மயின்முதற் கூடிய வினைத்தும்
விச்சை மாதவம் புரிந்தருள் வேந்தரை வெகுளா
விச்சை யெம்பதம் விரும்பினீ ராதலி னினிநீர்
கொச்சை மாகணக் குலத்தொடுங் கலத்திரென் றுரையா. ()

மீண்ட டைந்தன கயிலையின் மருங்குற வேந்தர்
மாண்ட வெங்கணத் தலைவராய் வதிந்தனர் மறித்து
மாண்டு மாமயின் முதலிய வவற்றொடு மெளியேம்
வேண்டு மாதவ முறுங்கொலென் றிரங்தனர் விளம்ப. (ககக)

மயிலுஞ் சேவலு முதலிய மனநெகிழ்ந் திரங்கிக்
கயிலை மாகணத் திருந்துநீர் நாள்பல கழித்தான்
முயலு நுந்தவப் பயனெலா முற்றுதி ரொன்னப்
புயனி றக்கண மண்டவா பரணனிற் புகுந்த. (ககஉ)

மாய னூர்தியு மலரய னூர்தியும் வனத்தி
னேய நந்தவ மழிப்பதற் கியற்றின வென்னத்
திய சிந்தையிற் கிடத்தியக் கணத்தவர் சினவி
மேய தோகையுங் கருடனு முடற்றுபோர் விளைத்தார். (..ங)

முக்க ணுன்றிரு கடந்தொழு முதன்மையோர் யாரு
மக்க ணத்தினிற் றம்பதி யடைந்தன ரதன்பின்
மிக்க நால்வரு மறுமுக னுணையால் விரிநீர்
தொக்க மாநிலத் தசுரரிற் றேன்றினர் தொடர்பால். (ககச)

ஆய தன்மையி னசுரரிற் றேன்றின ரென்றுற்
சேய வானவர் தங்களைத் தீமைசெய் தொறுப்பா
னேய காரண மென்கொன்மற் றியம்புதி யென்றுண்
மாயை தன்மக ளசமுகிக் குணர்த்துவான் மறித்தும். (ககரு)

பூத ராயிவர் கணத்தொடும் பொருந்திய மேனுட்
காது வெஞ்சினத் தசுரரு மமருங் களத்தின்
மோத வானவர் பேரம ரிழந்தனர் முரிந்தார்
பாது காப்பிரென் றிவரைவந் தடைந்தனர் பதறி. (ககசு)

அன்று வானவர்க் குதவுவா னகலிடத் தடைந்து
குன்று ருத்தெனக் குவலயப் பூதரிற் குழுமிச்
சென்று ருத்தெழு நிருதர்வெஞ் சேனையைச் செருவிற்
கொன்று வானுல கிந்திரற் குடியிருத் தினரால். (ககஎ)

அந்த ரத்தவர்க் குதவிவான் கயிலையை யடைந்தார்
சந்த வார்புயத் தகுவர்கோ னிடரொடுந் தமித்து
வந்தி ரங்கிய வண்டவா பரணனை வழுத்தி
யெந்தை கேண்மதி யெம்முறை யுளதென விசைப்பான். ()

நின்ன தானையி னிலேபெறு பூதரோர் நால்வ
ரென்ன தாகிய சேனையை யுயிர்செகுத் திறுத்துப்
பின்ன ரிங்கிவ ணடைந்தன ரென்றனன் பிழையோர்ந்
தன்ன காலையிற் பூதநா யகன்வெகுண் டனனுல். (ககசூ)

வருதிர் நால்வரு நீவிரென் னுணையை மதியா
தொருவி வானவர்க் குதவிசெய் தவுணரை யொறுத்தீர்
குருதி வாளெயிற் றசுரர்வெங் குலத்திடைத் தோன்றித்
தருவி னுட்டவர்க் கிடும்பைசெய் தகனிலஞ் சரிப்பீர். (கஉ0)

என்று ரைத்தன னண்டவா பரணன்மற் றிவரு
மன்ற வன்சொலுஞ் சாபத்தா லம்பரத் தவர்க்குக்
கன்று வெஞ்சினத் திடும்பைமுற் றிழைத்தனர் கண்டா
யன்று தொட்டவ ரிழைத்திடு மிடும்பையின் றகன்ற. (கஉக)

இவணி கழ்ந்தன வின்னண மீங்கிதன் மேனாட்
டவுறின் மாதவ மியற்றிய சாகத்தீ வரச
மவரை மாதவ மழித்தன ரிருவுளத் தடையாக்
கவரொ ளிக்கழன் முருகவேள் வெகுளியிற் கழறும். (கஉஉ)

கொடியெ னப்பிடித் துயரிய சேவலைக் கொழுங்கார்
நெடிய தோகைமா மயிலினை நீவிர்போ யுருத்து
முடிவின் மாதவ முயற்சியை யொழித்தனி ரதனாற்
கடிய பாதக மடைந்தனி ரெனமனங் கறுத்தான். (கஉ௩)

இற்றை நான்முத லெம்மடி தாங்கலை யினிநீ
கொற்ற வார்கொடி யல்லையென் றிவற்றினைக் குறித்துச்
சொற்ற வாசகங் கேட்டுழிக் கொடியொடுந் தோகை
வெற்றி வேலவற் பணிந்துநின் றினையன விளம்பும். (கஉச)

இன்று காறுநின் னிணையடித் தொண்டுபூண் டிருந்தே
மென்று நின்னடி புகுதுவ தெனமனத் துணரேம்
வென்றி பூத்தொளிர் விளங்கிலை வேற்படைப் பெரும
வொன்றிவ் வேழையேம் புரிகுவ துரைத்தியென் றிரப்ப. ()

கஞ்சி மாநக ரடைந்துநீ ரெமையுணர் கருத்தான்
மஞ்சு தோய்வரை மாதவம் புரிகுதிர் புரிந்தாற்
றஞ்ச மெம்மடி தருகுது மெனச்சென்று சாரா
வஞ்சி லம்படி நினைந்துநின் றவனடி யடைந்த. (கஉசு)

பயிலுஞ் சூரனும் பதுமனு மியற்றிய தவத்தான்
மயிலுஞ் சேவலு மாயினர் வாளரி முகனு
மியலுந் தம்பியு நினைந்தன முடிப்பதற் கெண்ணிப்
புயலுண் டேகுறு கயிலையி னந்திபாற் புகுந்தார். (கஉஎ)

நந்தி நாதநின் னளிர்கழற் பங்கய மடைந்தேம்
புந்தி கூர்தவ நாள்பல கழிதரப் புரிந்தேம்
விந்தை யூர்தியும் வெண்ணிறச் சூர்ப்படைச் சாத்தன்
றந்தி யூர்தியு மாகுவ மெனமனந் தரித்து. (கஉஅ)

அளிய மாற்றிய வருந்தவ மவப்படா தருளி
யொளிய நீறணி யெம்பிரா னருடியென் றுரைப்ப
வெளிய வாளெயிற் றிவர்முக சோக்கினன் வியவாத்
தெளியு நான்மறை நந்திமற் றினையன செப்பும். (கஉகூ)

நீற ணிந்தரு ளெம்பிரா னேறிய நெடுங்கோட்
டேற வர்க்குள வூர்திகட் கிருங்கதி கொடுக்குங்
காறு மெம்முறை யிருத்தியென் றுரைத்தனன் கருதி
வேறு கொண்டில ரிருவருந் தமதுளம் வியந்தார். (கஙo)

இப்பெ ருங்கதை கேட்டெழி யசமுகி யென்பாள்
கப்பி ளந்தனச் சுமையுடைத் தாயொடுங் கவைக்கோட்
டொப்ப ருந்திற லேற்றினு லூர்திக ளனைத்துந்
தப்பில் வான்கதி பெறுவன சாற்றெனச் சாற்றும். (கஙக)

வெள்ளி யங்கிரிக் கோட்டக மேவரு மிறைவன்
வள்ளி நுண்மருங் குமையிடைத் துர்க்கையை வருத்திப்
புள்ளி வண்டறை துளவணி முடியிடைப் புலவு
னள்ளி லேப்படைச் சாத்தனை வருத்தின னதுநாள். (கஙஉ)

இனையர் போந்தன ரெம்பிரான் றிருவடி யேத்தி
வினைய வூர்திமற் றெங்களுக் கருளென வேண்ட
வனைய வேற்றினை யழைத்திவர்க் கூர்திநீ யருள்வா
யெனவு ரைத்தலு மெறும்வலித் துணைமருப் பிடபம். ()

அருவி மால்வரைக் கயிலையி னருகுறச் சரிக்குந்
திருகு சீற்றவெஞ் சியமொன் றிறிமதச் செருக்கி
னெரிவி ழிக்கரத் தந்தியொன் றீங்கிவர்க் களிப்பக்
கரியு மத்திற லாளியுந் தனிமனங் கவலா. (கஙச)

இடப நாயக யாங்களிக் கயிலையி னிருந்துன்
படரொ ளிப்பதம் பெறுகுவா னருந்தவம் பயின்றே
மிடையி னிங்கிது பலித்தவா றெதுவென விசைப்ப
வடன் மருப்புடை விடையவைக் கின்னண மறையும். ()

சேய காலமற் றினையவர்க் கூர்தியாய்த் திரிந்து
போய பின்கதி யளிக்குதும் போமினென் றவற்றை
யேய பின்னர்மற் றவர்க்கவை யூர்தியா யிருந்து
மாயி ரும்பத மேற்றினு லடைந்தன மகிழ்ந்து. (கஙசு)

ஏறு மூர்திமற் றிலமென விருவரு மெதிர்ந்து
கூறு நான்மறை யேற்றொடு முரைத்தனர் குறுகி
நீறி லங்கொளி நந்திதன் னுளத்தொடு நினைந்தான்
வேறு கொண்டிவ ரிருவரைக் கொடுத்தனன் விரும்பி. ()

ஞாதிகளொடுக்கச்சருக்க முற்றிற்று.

வேலுமயிலுந்துணை.

சிவசண்முகன்றுணை.

## உபதேசகாண்டம்.

# அசமுகிசருக்கம்.



ஈது கேட்டுமின் றசமுகி பின்னரு மினிநீ
தாது வார்குழ லன்னையென் னிலேசொலத் தகுமென்
ஞேத வோதுவன் கேண்மதி யென்றன ளுரைப்பாள்
சீத வார்பெருங் கடலகத் துளதொரு தீவு. (க)

தேங்கு தண்புனற் கிடந்தகோ மேதகத் தீவின்
வாங்கு நான்மறை விசிட்டனென் றுளனெரு மறையோ
னுங்க வன்றனிச் சுவேதையை வேட்டன னவள்பா
லோங்கு மாதவத் துதித்தனள் சித்திர ரேகை. (உ)

அழகெ லாந்திரன் டோருருக் கொண்டன வனையாள்
குழவி மானிளம் பிடியெனத் தவழ்தொறுங் குழைவாள்
மழலே வாய்மொழிக் குதலேயைக் கேட்பினு மாஞும்
தழையு லர்ந்தன வாயினு மரும்பின தழைக்கும். (ங)

குழைத்த செம்பொரு லியற்றிய புனைந்தகூன் சிலம்பு
தழைத்த சில்லொலி கலிப்புறத் தளர்நடை பயின்று
ளிழைத்த மாதவத் தன்னேகண் களித்தன ளிருப்ப
மழைத்த வார்குழ லேழ்வய துற்றனள் வளர்நாள். (ச)

அனைய தீவகத் தயல்கிளர்ந் துளதொரு நகரந்
தனையு ரைத்திடிற் தயங்குபூச் சக்கர மதன்பா
னினையு நான்மறைக் குலத்தரி சன்மனேர் நெறியோன்
மனைவ யிற்றிடைத் தோன்றின னொருதனி மதலே. (ரு)

புனித மாதவன் புண்டரீ கப்பெரும் பெயரான்
றனிம றைப்பெருந் தலேவனத் தையலே மணந்தா
னினிது கொண்டுபோய்த் தனதகத் திருத்தின னிவளே
வனைக னங்குழை புதுவனப் பொருங்குற வளர்வாள். (சு)

எரியு நஞ்சமு மமுதமு மெடுத்துறக் குழைத்துப்
பரிவி னீட்டின கிடைத்தன வாமெனப் பதைத்த
வரிப ரந்தன வயல்பிறழ்ந் தணிகுழை நடந்த
கரிய வாயின வெளிய வாயினதடங் கண்கள். (எ)

ஆரி ருட்பிழம் பொழுக்குவிட் டனையதோ கமஞ்சூற்
காரி ருட்கொழுந் தொருவழிக் கான்றதோ கமழ்ந்த
வேரி யஞ்சன மயிரென விழுதுவீழ்ந் ததுவோ
வாரி னர்ச்சுரு ளோதியை யாதென மதிப்பாம். (அ)

முளைத்த வான்பிறை முத்தின முற்றிய பின்னர்க்
கிளைத்த வாரிருட் கிழ்வடிம் பிணைப்பெறக் கிடத்தித்
தளைத்த வாமெனக் கரும்புரு ரத்தொடுந் தயங்குந்
திளைத்த சிந்துர வாணுதல் யாதெனத் தெரிப்பாம். (கூ)

பயிற்செய் கானக மாகதப் பசும்பனித் தோகை
மயிற்கு லங்குழீஇ மயங்கின சாயலின் மயங்கு
முயிர்த்த பூந்தழை மாஞ்சினை யிடனுறைந் திசைக்குங்
குயிற்கொ ழுங்குர லமுதொடுங் கூட்டின குதலை. (க0)

முழுத்த பானிலாப் பிதிர்த்தன முறைமுறை திருத்தி
யழுத்தி வைத்தவோ வமிழ்தினை யரும்பென லாக்கிப்
பழுத்த வெண்ணிலாப் படுத்திவைத் தனகொன்மற் றறியே
மொழுக்கு வாணகை யாதென வுணர்ந்தில மின்னும். (கக)

வட்ட வார்சுரு ளோலையிற் பொலிந்தன வள்ளை
கெட்ட காமனுக் கன்றுயிர் கொடுத்ததிக் கிளையே
தொட்ட வார்திரைப் பரவைமா கிலத்துயிர் குறை
விட்ட ருந்துற மறலிகைத் திருத்திய விலக்கே. (கஉ)

இலவு பூத்ததிற் பவளமென் கொழுந்தொளி யிருத்தி
மலர்மு ருக்கிதழ்ச் சேயொளி வழித்ததின் விரவிக்
குலக ருங்கனி வீழியிற் கொடுத்தன வெனலா
யலை கடற்படு மாரமு தரும்புசெவ் விதழாள். (கங)

அரும்பு கன்கறுத் தாரமு தசம்பொதிந் தமிழ்தின்
குரும்பை யொத்தணி திதலைமீப் பொடித்தறக் குழைந்த
மருங்கி லுக்கிரங் காதிரு மருங்கொளி பழுத்து
முருங்கு தன்மைபெற் றெழுந்தன முகிழ்த்தவெம் முலையாள். ()

மருவின் மென்கலை சுருக்கவக் கலையொடு மயங்கி
யுருவ தின்மைபெற் றுலகெலா மயக்கிய மார
னிருதி பெற்றயின் னெடுத்தவோ ருருவெள லாகிச்
சிறிய சிற்றிடை யவனுயி ராமெனத் திகழும். (கரு)

அருப்பி னந்தனத் தாருயி ரளித்தவ ராசை
விருப்ப மெவ்வள வவ்வள வாகிய விரிவா
யுருத்து ருத்தமு தாற்றிருந் தன்னவ ருளம்போற்
பெருத்த றக்கனிந் தகலிய வல்குல்பெற் றுடையாள். (கசு)

பாயொ ளிப்பனித் தாமரை பரிதிவிட் டுமிழுங்
காயொ ளிக்கதிர் படப்படக் கருகுவ கதுவா
மீயொ ளிப்பட மென்மையுந் தண்மையும் விரவிச்
சேயொ ளிப்படச் சிவந்தன சீறடிச் சிலம்பு. (கஎ)

சாந்த ளாவிய பொதியகின் றுயிர்ப்புறத் தவழ்ந்து
போந்த தென்றலங் குழவியோர் தளர்நடை போலு
மாந்த ராருயிர் மயக்கிய மடநடைக் குவமை
கூந்த லம்பிடி யன்றிமற் றியாதெனக் குனிப்பாம். (கஅ)

இவளை யின்னுயிர்க் குயிரெனத் தழுவின னிருந்தான்
புவன முண்டுமிழ்ந் தளந்தவ னிணையடி போற்றித்
தவமு யற்சியி னொழுகுவா னறநெறி தவறு
னுவர்க ருங்கட லுலகமொத் தொழுங்குற வாழ்வான். (கசு)

துளப மார்பினன் சுருக்கிய வுத்தரீ யத்த
ளளவு தாமரை மணியின னாரமு தளைந்த
கிளவி மென்குயி லம்புயத் திருமகள் கேள்வ
னுளனி னைந்திடு வயிணவத் தலைமைபெற் றுடையோன். (உ0)

பொருவின் மாதவப் புண்டரீ கப்பெரும் பெயரான்
மருவு சித்திர ரேகைபூண் வனமுலை மயங்கி
யொருவு றுவரும் காமவெங் கடற்படிந் துற்றான்
றிருகு சிந்தைய ளிவனொடுஞ் சிறந்தனள் சிலநாள். (உக)

மறைக்கு நாயக னீங்கிவன் வறுமைகண் டிரங்கி
நறைப்ப சுந்துழாய் நாயக னொருமணி நல்க
நிறைத்த மாநிதிக் குப்பையங் கதுதர நின்றான்
செறித்த வாயிரஞ் சீடருக் கருளினன் சிறந்தான். (உஉ)

இவன கத்திருந் தில்லற மாட்சியி னிழிந்தா
ளவன டித்துணைச் சீடரை யவாவின ளணைந்தாள்
குவிமு கிழ்த்துணைக் கொங்கையாள் குறிப்புவே றுகிக்
கவரு ளத்தினள் காமமிக் கூர்தரக் கவல்வாள். (உங)

வாள ரித்தடங் கண்களா் வுயிருக மருட்டு
மூளை ரிக்கடுங் காமவெங் நோய்கெட முயங்கு
நாளொர் நாழிகை யாயினு மொழிவுறு ணயப்பாள்
வேள்வி கற்பமே யல்லது வேண்டுழி வேண்டாள். (௨௪)

அள்ளல் வார்கட லகனிலத் தாடவ ரனேக
ரெள்ளி றைப்பொழு தொழிவுறு தியற்றினுந் தமித்தாற்
கள்ள வாணெடுங் கண்ணிதன் னனுபவக் கலவி
யுள்ள மோர்ந்துமெய் பொடித்திருங் காமநீ ரொழுகும். (௨௫)

கோட்டி ரும்புனற் கொள்ளையக் கோடுற முறித்து
நீட்டி நீடொறு மாயிரங் கவர்த்தலை நிமிரும்
வாட்ட டங்கணு மனையன மார்தரிற் படருந்
தோட்ட லங்கலாள் சிந்தையு மவ்வழித் தொடரும். (௨௬)

மனைவி ழுந்தனர் மாநிதி யிழந்தனர் மயங்கி
நினைவி ழுந்தனர் நெஞ்சிழந் தனர்நிலை யிழந்தார்
புனைசெய் மாநகர் மாந்தரி லவளொடும் புணர்ந்தா
ரினைய தென்பெழுந் தியங்கிய வாக்கைய ரினைத்தார். (௨௭)

வே று.

ஆய வின்னண மவ்வழி யெய்துற
மேய வேத வயிணவ வேந்தனை
நேய நெஞ்சொடு நீண்மறை யோரொடுந்
தூய சிந்தைத் துருமுனி யெய்தினன். (௨௮)

சென்ற வத்துரு வாசற் கெதிர்செலா
வொன்று சிந்தை யுருக வுருகினா
னின்று நீவரற் கெத்தவஞ் செய்தன
னென்று மாதவ வென்று விளம்பினன். (௨௯)

பொய்யின் மாதவப் புங்கவ னைத்தொழு
தைய பொன்னடி சாத்தினை யாதலி
னெய்து மென்னக மெத்தவஞ் செய்ததோ
செய்த மாதவ வுண்மை சிறந்தன. (௩௦)

என்ன வன்பி னெடுத்தெடுத் தேத்துபு
வுன்ன ருந்த னுறையுள்கொண் டேகினன்
றுன்ன ருந்துரு வாசனை நுஞ்சுடர்
மன்னு மாமணி மண்டபம் வைகினன். (௩௧)

ஆச னத்தர் தருச்சனை செய்தபின்
போச னஞ்சொற் றமைக்கப் புகுந்தனன்
பாசி ழைக்குப் பரிந்துரைத் தானவன்
மாச கற்றி யமைத்தனன் மாட்சியின். (௩௨)

இயலு மன்பி னடிசி லிழைத்தபின்
புயன றுங்குழல் கொண்டனை போவெனக்
கயனெ டுங்கட் கரும்புகொண் டேகினு
டயிலி னெஞ்சிற் றுயில்வளர் வான்றனை. (௩௩)

கண்டு வெஃகிய காமக் கலவியுட்
கொண்டு வீழ்ந்து குலத்தோ டழுவினு
ளண்ட ரேத்து மருந்தவன் றன்விழி
விண்டு நோக்க வெருவர வோடினுள். (௩௪)

ஓடி நாற்சதுக் கத்துய ராலடிக்
கூடி னுள்செங் * குருவைக் குழாத்திடை
நீடு மாதவ னின்றுவெ குண்டுதன்
சீட னைக்கடிந் தன்னவட் டேடென்றான். (௩௫)

விரும்பு சீடன் விரைவிற் றுருவியு
மரும்பு கொங்கையை யவ்வுழிக் கண்டிலன்
றிரும்பி மாமுனி தன்னொடுஞ் செப்பினு
னிருந்த மாதவன் றன்னுளத் தெண்ணினுன். (௩௬)

தழுவி நாலு சதுக்கந் தருதெரு
வெழுவு மாலி னிருநிழற் றுஞ்சியே
குழுவு பள்ளைக் குழாத்துட் கரந்தனள்
வழுவி நின்று வரம்புசி தைந்துளாள். (௩௭)

† தவறி னில்லறத் தாறிழிந் தாடனைக்
குவளை யுண்கட் பொதுமகட் கொண்டுபோ
யிவர்த டஞ்சினை யாலிடத் தேற்றியுன்
றவமு யற்சியைக் காட்டுதி தன்மையோய். (௩௮)

சேறி யென்றவத் தீதறு சிந்தையோன்
கூறு சொற்றலைக் கொண்ட குலத்தவன்
வேறு கொண்ட விருப்பின ளைப்பிடித்
தேறு தொன்மரத் துச்சியி னேற்றினுன். (௩௯)

---

* குருவை - ஆடு

† அவனையில்லறத்தாறிழிந்தாடனை என்றும் பாடம்.

ஊடு வாடை யுறுந்தொறு மென்பினை
யாடு தோறு மலமந் தலறுவாள்
கோடு பற்றிக் கிடந்து குலுங்குவா
ளீடு தெஞ்சி னிழிய நினைந்துளாள். (சு0)

மான மாநகர் மைந்தரு மாதருங்
கான வார்குழற் கன்னியைக் கண்டுபின்
போன மாமரத் தெவ்வணம் போயினுன்
மோன ஞானி மொழிகொடி தென்றனர். (சுக)

அறிந்த வட்குயி ராகிய வந்தணன்
பிறிந்தி ருக்கப் பெறுகிலன் பேரருட்
செறிந்த மாதவச் செல்வனை யேத்துறு
மறிந்து வீழ்ந்த மரனென வீழ்ந்தனன். (சுஉ)

ஐய நின்னரு ளின்மையென் னுயிழை
வையம் யாவும் வழுச்சொல வைகினுள்
வெய்ய வாலவி டுத்திழி தற்கருள்
செய்ய வேண்டுந் திருவருள் செய்கென்ருன். (சுங)

இல்ல றத்தை யிகந்தொழி வாளிவள்
புல்லொ முக்கம் பொருந்துறு புன்மையோய்
வல்ல றுத்த வனமுலை மாநிலத்
தெல்ல வர்க்கு மினிதளித் தாளரோ. (சுச)

இன்ன தன்மை யிவளே யுனக்கென
வன்னி முன்னர் வழங்கின ராலவ
டன்ன லம்பிறர்க் காகச் சமைந்தன
ளுன்னே யோர்பொழு துள்ளுகி லாளென்ருன். (சுரு)

ஏது குற்ற மிழைத்தன ளேனுமம்
மாது குற்ற மனக்கொள லையநீ
மீது யர்ந்த வடதரு விட்டிவள்
போத வொன்று புகலுதி யென்றனன். (சுசு)

கற்பி னின்ற கனங்குழை யாயினின்
சொற்ப டிக்குயர் தொன்மர நீங்குவா
ளெற்ப டுஞ்சினை பற்றி யிறங்குவான்
மற்ப டப்போய் மொழிகுதி நீயென்ருன். (சுஎ)

வந்து நின்றென் மனைவி வருகெனச்
சந்த வார்முலை நாலடி தாழ்ந்தன
ளிந்த வெல்லை யிறங்கப்ப டாதென்றுள்
குந்தி யோடினன் மாதவர்க் கூடினன். (சஅ)

நால டிச்சினை தாழ்ந்தன ணம்பவென்
னேல வார்குழல் பின்ன ரிறங்கிலன்
மால டிக்கொண்ட மம்மரி னேனினிச்
சீல மாதவ செய்குவ தேதென்றான். (சகூ)

மங்கை கொங்கை மயங்கி முயங்கின
ரங்கண் மாநிலத் தாடவர் யாவரும்
பொங்கு மாலடிப் போந்திறங் காயெனி
னங்கை கீழ்வரு மென்ன நவிற்றினன். (ருo)

மைய லொன்று மனக்கொ டிருந்தவர்
தைய லைப்புணர்ந் தாரவர் யாரையும்
வெய்தி னேடுங் கொணர விளித்தன
ரெய்து மாமரம் பாதி யிறங்கினள். (ருக)

இப்பு றத்தி னிறங்கரி தாயவ
டப்ப றத்தழு விச்சினை சார்தலு
மொப்ப றுத்த முனியரு கோடினன்
குப்பு றுத்த முகத்தினன் கூறுவான். (ருஉ)

என்னை யிவ்வணங் கண்டனை பேயினிக்
கன்னி பாற்றிருக் கண்ணருள் செய்யென
நின்ன ருட்பெறு வார்நின்று கூவிலுன்
பொன்ன னாளுமி றங்குவள் போவென்றான். (ருங)

அன்ன சேடருந் தானு மடைந்துதன்
பன்னி தன்னை யழைக்கப் பகர்ந்தனன்
பின்ன ரன்னவர் கூவப் பெருமர
மன்ன டிக்கவை வந்திருந் தாளரோ. (ருச)

* கூண்ட பின்னற் குடுமி யலைந்திடப்
பூண்ட தாமரை மாலை புரண்டிட
வீண்டு துன்பத் திரைத்திட வோடினன்
மீண்டு மாதவ வேந்தனை நண்ணினன். (ருரு)

---

* கூண்டபின்னல் - கற்றையாகிய பின்னல்.

கவர்த ருஞ்சினைக் கப்பி னிறங்கினு
னிவனை முற்று மிறங்கப் பணித்தியென்
றவனை யேத்தி யிரந்தன னந்தணன்
புவன மேத்து முனிபுகல் வானரோ. (ருசா)

பேதை தன்னைப் புணர்ந்தவர் பேரொலா
மோதி யோதி யுணர்த்தி யிறங்குமென்
ருதி வேத மளந்தவன் சொற்றுழி
வேத வேதியன் பின்னரு மீண்டனன். (ருள)

ஏடி. நின்னிளங் கொங்கை யிணைத்தடங்
கூடி. னூர்பெயர் முற்றுறக் கூறினி
தோடு வார்ந்த தொடுசினை விட்டடி
மூடி. றங்குவை யென்று மொழிந்தனன். (ருஅ)

இன்ன வாசகங் கேட்டலு மேந்திழை
யன்ன கேள்வ ரனேகரை யெண்ணினுள்
பின்ன ரந்தப் பெருங்கவை நீத்தநின்
மன்னு கீழ்க்கவை வந்து வதிந்தனள். (ருசு)

எவற்றி னுலு மிறங்ககி லாளினிச்
சிவத்தி றந்தெரி நீயவட் சென்றிடிற்
கவர்த்த டம்பணைக் கைவிடு மெய்துவாய்
தவப்பெ ருங்கட லேசர னென்றனன். (சுப)

மூரா லித்த முகத்தின னந்தண
னூர்வ நோக்கி யக நெகிழ்ந் தாரணச்
சீர ளந்தறி சிட்டர் குழாத்தொடும்
பார வெம் * பழு வத்தரு கெய்தினன். (சுக)

எய்தி யன்ன ளிளமுலை வேட்டருள்
பொய்யி னுன்மறைப் புண்டரி கன்றனை
வையி கத்தனி மாமுனி நோக்கிநின்
செய்கை சிற்றெழுக் கத்திற் சிறந்ததால். (சுஉ)

வானை வென்ற மதர்விழி யாளிவள்
† கூனை யென்ப துணர்ந்துந் துணைமுலை
மூனு மாசையின் முற்றி முயங்கினய்
கோள ருந்தவத் தன்மை குறைந்தனை. (சுங)

* பழுவம் - ஆலமரம். † கூனை - வேசை.

மற்றோர் மாதை மணந்திலே மாதிவள்
பெற்ற பாவம் பிரிந்தொரு பாதியு
முற்ற தாலுனே யோங்கெயின் முப்புரஞ்
செற்ற தேவ னடித்துணை சேர்கலாய். (சுச)

புண்ட ரீக னதுபுலத் தோர்ந்தனன்
விண்டு வாய்மொழி யொன்றும் விளம்பலன்
றண்ட ருஞ்சொற் சமய விரோதமுட்
கொண்டெ னக்கிது கோளுனாத் தாயென்றான். (சுரு)

வேக வெஞ்சின மீக்கொண்டு தன்மன
மாக வற்சி தரத்துரு வாசனும்
யோக சித்தனே யோனி மனத்தின
னாக நின்பெய ரென்றறைந் தானரோ. (சுசு)

புன்பு றச்சம யப்புற மின்றுநீ
யென்பெ ருக்கணி பெந்தை பிரானடி
யன்பு றப்பெறு வாயலே வெண்ணிற
மின்பி றக்கும் விபூதியும் வேண்டலே. (சுஎ)

ஆகி யப்புறப் புன்சம யத்தனுப்
போக போக வெனப்புகன் றன்னவன்
பாக முற்றிடுஞ் சீடனைப் பார்த்துள
வேக வெஞ்சின மீக்கொண் டறைகுவான். (சுஅ)

பின்னு சிந்தைப் பிணக்கறுத் தாரண
மன்னு சிந்தைய ராக்கிய மாதவன்
பன்னி கொங்கையிற் பற்றுவைத் தீர்கணும்
மின்ன னார்களும் வேசைய [illegible] வார். (சுகூ)

என்று கூறி யெரிவிபி [illegible] ர்க்
கொன்ற லாத பல [illegible] தாதினன்
கன்று நெஞ்சக் கனங்குழை வைகிய
துன்றி ருஞ்சினைத் தொன்மர நோக்கினன். (எ0)

வார்ந்த கூந்தல் கவிந்திட மாமரஞ்
சேர்ந்த மார்பங் குருதி சிலும்பிடச்
சோர்ந்து மாமரந் தொத்தி யிருந்தன
ணேர்ந்த சிந்தை முனிவ னிகழ்த்துவான். (எக)

கொம்மை வெம்முலைக் கோற்றொடி நீயிவ
ணெம்மை மேல்விழுந் தெம்முருத் தீண்டலா
லம்ம வெங்க ணசுரரிற் றோன்றியே
வெம்மைக் காம விகாரம் பெறுதியால். (எஉ)

அயக்கு லத்துட் கரந்தனை யாதலின்
மயக்கு கின்முக மட்டய மாகுமால்
வியக்கு மக்குல மேவியும் வெம்முலை
முயக்கு காம முடிவொழி யாயென்றான். (எங)

ஈது கூறி மரத்தி னிறங்கினை
போதி யென்ன விறங்கிப் புகுந்தனள்
கோதின் மாதவன் பாதங் குறுகினான்
மாத ரார்க்கு மரபு வழுச்செய்தாள். (எச)

எந்தை நீயிவ ணென்னுடைக் கேள்வனைத்
தந்தை கேள்வித் தலைவனைச் சாபியா
கிந்தை தந்தனை யாயினு நின்னுமைச்
சிந்தை தந்தன னென்கொடு தேறுகேன். (எரு)

ஈது பட்டு மெளிய னிணைமலர்ப்
பாதந் தீண்டப் பணித்திலை போலுமென்
றூத ரத்தி னவளிரப் பத்தனி
வேத மாமுனி பின்னர் விளம்புவான். (எசா)

செய்த பாதகஞ் செப்புறப் போமெனப்
பைகொண் மாநில மோதும் பழமொழி
யைய நன்மருங் காயறி யாய்கொலோ
தைய னின்பவந் தானே தொலைந்ததால். (எஎ)

பெண்ணு ருக்கொண் டசுரர் பெருங்குல
நண்ணு நாளருங் காம நயப்பினாற்
கன்னி ணைக்குரி யார்தமைக் கைக்கொளா
வண்ண வெம்முலைக் கோட்டின் மருவுவாய். (எஅ)

ஆய காலத்தி யாமவ னெய்துவந்
தூய வெம்மைத் தொடர்ந்தனை யாகிநீ
மேய காம விருப்பொழிந் தக்குலத்
தேய மைந்த ரிருவர்ப் பெறுதியால். (எகூ)

மாக்க ணத்தொடு வைகிய வையனைக்
காக்கும் வெங்கதைக் காளர் கரத்தினுன்
மூக்கு மிந்த முலேயுங் கரத்தொடும்
போக்கி வீழ்ந்து புலம்புவை நீயெனு. (அ௦)

ஆங்க வன்ருேட வன்றள வுன்வயி
னேங்கு பாவ மொழிந்துணர் வுற்றுநீ
தேங்கு தண்சுனேச் சீகுல வெற்பிடை
வாங்க ருந்தவ மன்னுதி யேகென்ருன். (அக)

அனைய ளாயவ ணீபென் ளருந்தவத்
தனைய ளாகச் சனித்தனே யத்தவ
முனைவ ஞேதிய சாப முடிந்ததால்
வினையி னீங்கித் தவத்தை விரும்புவாய். (அஉ)

## அசமுகிசருக்கம் முற்றிற்று.

ஆகச்செய்யுள் - உகசூ.

வேலுமயிலுந்துணை.

---

உ

சிவசண்முகன்றுணை.

உபதேசகாண்டம்.

# மாயைசருக்கம்.

என்றுரைத் துணர்த்து மாயை தன்முக மினிது நோக்கி
வன்புற முருட்டுக் கொங்கை யசமுகி மதித்துங் கேட்கு
நின்றவென் னியற்கை யெல்லா நிகழ்த்தினை நிகழ்த்தா நின்ற
வுன்றனு தியற்கை யெல்லாம் புலப்பட வுரைத்தி யென்றாள். (௧)

முற்படு தொல்லை நாளிற் காசிப முனிவற் கியானோ
ரிற்படு பன்னி யாகி யில்லறத் தொழுகி நின்றேன்
பற்பல மைந்தர் கோடி பயந்தன னவற்கு வானோ
ரெற்படு படையி னன்னோ ரிறந்தனர் மடிந்து போனார். (௨)

செருமுகத் திறந்து போன மக்களிற் சிந்தை கோட்டிப்
பருவரற் கிடனாய் நின்று பற்பக லிரங்கி மாழ்கித்
தருகிழற் பகையை வெல்வான் கருதியித் தரணி சார்ந்து
பொருமுகட் டுச்சி யேறி வீழ்ந்துயிர் போக்கி னேனால். (௩)

பின்னருந் தகுவர் கோற்குப் பெண்ணெனப் பிறந்து மாயை
யென்னுமோர் பெயரா லந்தக் காசிபற் கினிய ளாகும்
பன்னியாய் நும்மை யெல்லாம் பயந்தனன் பகைத்த தேவர்
பொன்னிகா டனைத்து மீளாச் சிறைபுகப் பொரும தீர்ந்தேன். (௪)

பிள்ளைக ணால்வர் யார்க்கும் பெறற்கரும் பேறு பெற்றார்
வள்ளைவார் குழையா யானு மிப்பெருங் கிரிக்கண் வந்தே
னெள்ளருந் தவத்தைப் பன்னா ளிழைத்தருஞ் சயிலை சேர்வேன்
வெள்ளியங் கிரியி னம்மை யுமைபதம் பெறுவன் மேனாள். (௫)

நிபெறுங் கதியு மின்றே நிகழ்த்துவ னியு மற்றம்
மாபெருங் கயிலை சேர்வா யென்றனன் மகிழ்வு கூர்ந்தாள்
கோபவெந் தீயிற் றோன்றுங் கொடியவ ளன்னை நின்னைத்
தாபதன் பிரிந்த ஞான்று தனித்தவா சாற்று கென்றாள். (௬)

குனிசிலைப் பகழி மாரி யனங்கவேள் குறித்து நீட்டத்
தனிகிடர் துயிர்த்து வாடை தைவரத் தழலா நின்றான்
பனிமதி வடவை காலப் பதைத்தன னாகித் தென்பா
லினியபூந் தென்ற னோக்கி யெரிமெழு கென்ன லானான். (௭)

அங்கிலே கமல பீடத் தந்தண னுணர்ந்து போந்தா
னுன்னருந் தவத்து ளோரி லொருங்கிருந் தவத்தின் மிக்காய்
கன்னல்வெஞ் சிலையிற் றாங்குங் கணைக்கிலக் கென்ன மின்று
யின்னலுற் றழுந்தாய் கெட்டே னீதுனக் கியைவ தன்றால். (அ)

என்றன பலவுங் கூறி யிடரொழித் தாற்றி நின்றான்
றன்றவத் தலைமை யோனுந் தனித்துய ரொழிந்து பின்னர்ப்
பொன்றிக ழுருவ மங்கை புலத்தியன் மகளை வேட்டு
நின்றன னெழியப் பெற்று னெடுந்துயர் விரக வெந்தீ. (௯)

அன்னைசொற் றறியப் பெற்று ளதிசய மடைந்தா ளின்ன
வென்னநீ யறியப் பெற்ற காரண மியம்பு கென்று
டுன்னருந் தவத்துட் டோன்றுஞ் சுக்கிர னுரைப்ப மேனு
ளிங்கிலை யுணர்ந்தேன் கால மும்மையு முணர்வே னென்றாள். (௧0)

இவையெலா முணர்ந்த பின்னர் மாயைதா ளிறைஞ்சி யேத்தி
நவையெலா மொழியப் பெற்ற நற்றவ முயற்சி பெற்று
ளிவர்கருங் கண்ணி மாயை தன்னொடு மிழைத்துத் தேவ
ரவையெலாந் தழுவா நிற்குங் கயிலையை யடைந்தா ளன்றே. (௧௧)

✻ மாயைசருக்கம் முற்றிற்று.

ஆகச் செய்யுள் - ௨௯0.

வேலுமயிலுந்துணை.

---

✻ இம்மாயைசருக்கத்தின் இறுதிச்செய்யுள் சிவமுனிவர்முதலி யோர்வரலாற்றின் இறுதியில் சேர்க்கப்பட்டது.

சிவசண்முகன்றுணை.

உபதேசகாண்டம்.

மாயன்வரம்பெறுசருக்கத்தில்,

# சிவமுனிவர்முதலியோர்வரலாறு.



செய்ய காண்மலர்த் தாமரைச் செங்கணுன்
வைய மேழ்தொழ வாமன னுகியே
யுய்தி றந்தத் துபேந்திர னென்னவே
* பொய்யில் கேள்விய னேடும் பொருந்தினன். (௧)

ஆய காலையிற் குல்லி யலங்கலோன்
மேய வைகுந்த நாட்டக மேயினன்
காய்க திர்ச்செங் கவுத்துவ னைத்தொழப்
போயி ருந்தன னங்கது போழ்திடை. (௨)

கண்ணு வப்பெயர் மாமுனி கார்மழை
வண்ண னைக்கண்டு வாழ்த்திட வேண்டுவா
னெண்ணி யெய்தின னிங்கிவர் னோக்கிஞ
ருண்ணெ கிழ்ந்தவத் கொன்றும் விளம்பலார். (௩)

ஈது னோக்கி யெரிந்தெழு கண்ணினன்
காது சிந்தையன் கண்ணுவன் கண்ணுதன்
மாது பாகன் வழித்தொண்ட னேன்றனைத்
தீது செய்திகழ்ந் தீனெனச் செப்பினன். (௪)

மாய நீயு மறிதிரை மாநிலத்
தாய சென்ம மளவற வெய்தியே
யேய வூமரி னுதிபென் றேயினன்
சேய பங்கயச் செல்வியைக் கண்ணுரு. (௫)

---

* பொய்யில்கேள்வியனேடும் பொருந்தினன் என்பதற்குப்—பரத்து வாசரோடுவேதமுதலிய பயின்றிருந்தனன் எனப்பொருள்கொள்க. இதனை க் "கரியபூந் திங்களிற் கதிரொ ளிர்தொளிர், திருமறு மார்பினன் திருந்து கேள்வியோர், பரவுற மேம்படும் பரத்து வாசன்பா, லருமறை முதலிய வனைத்து மோதினன்." என்னுங் கூர்மபுராணச் செய்யுளானறிக.

என்னை நீயு மவமதித் தாயினி
மின்ன லங்கொளி மாண்டுறவெஞ்சுரக்
கன்னி மானெனப் போதியென் றூன்கணத்
தின்ன தன்மைய ராயின ரீங்கிவர். (௬)

உருத்து நோக்கியு பேந்திரன் றன்னையும்
விருத்த வேடுவ னாதியவ் வெவ்வனத்
திருத்தி யென்றனன் றன்னுழை யேகினன்
மருத்து மாயவன் றன்மை வழங்குவாம். (எ)

அத்த னைக்கம லாலயத் தெய்தியே
சித்த மொப்ப வருச்சனை செய்தனன்
மத்த மாகரிப் போர்வையன் வந்துற
நத்த ணிந்தகைந் நாதன் வணங்கினன். (அ)

உள்ள நெக்குவிட் டென்பு முருக்கினன்
வெள்ள வாரி விழிவழி சிந்தினன்
பிள்ளை நாண்மதி வேணிப் பிரானவற்
கெள்ளி லார்வ மினிதளித் தானரோ. (௯)

என்னை வேண்டி யெமையருச் சித்தனை
நின்ன கத்துள வேட்கை நிகழ்த்தெனப்
பொன்ன லங்கு புனையுடைப் புங்கவன்
கன்னி பாகற் கினைய கழறுவான். (௧௦)

கண்ணு வப்பெய ரோனெனைக் காய்சினத்
தெண்ண ருத சனன மெடுத்துநீ
மண்ண கத்திழி யூமரின் வைகென
வுண்ணெ கிழ்ந்திரங் காதிவை யோதினன். (௧௧)

யானு டைப்பெருந் தேவியை யின்னிள
மானி னத்தொடு போக வழங்கினன்
ஞான நீங்கியு பேந்திரன் றன்னையு
மீன வேடுவ னாதியென் றெய்தினன். (௧௨)

ஓது சாப மொழித்திட வேண்டுவே
னீத ளித்தியென் றானியன் மாதவ
னாதி நாத னவையுணர்ந் தானரோ
தீதில் சிந்தை நெகிழ்ந்தருள் செய்குவான். (௧௩)

கன்ன ருந்தவக் கண்ணுவம் கூயிவற்
கென்ன ரும்பிறப் பாகவென் றுயது
நண்ண ரும்பிறப் பொன்றென நல்கெனத்
தெண்ணி லாவணி வேணியன் செப்பினன். (௧௪)

சிந்தை யொத்தவ னங்ஙனஞ் செப்பலு
நந்து மேய நளினக் கரத்தினன்
மைந்த ரிற்சிவ மாமுனிப் பேரொடும்
வெந்த முற்சுரத் தூமரின் மேயினன். (௧௫)

அவ்வ னத்திலு பேந்திர னுமவன்
வெவ்வி ராதகு லத்தொடு மேயின
னவ்வி யாகத்தண் டாமரை நங்கையுஞ்
செவ்வி யிற்றம சிந்தைதெ ருண்டிலார். (௧௬)

கால மிங்ஙன மெண்ணில் கடந்தன
சீல மோர்ந்த சிவமுனி தன்னெதிர்
கோல மான்பிணை சென்று குறுகலா
லாலு மாதவ னுங்கெதிர் நோக்கினன். (௧௭)

நோக்க நோக்கிய மான்பிணை நோக்கின
லாக்கு தன்னுட் கருப்பமுண் டாயதாற்
றூக்கு வேடர் கிழங்ககழ் தாழ்குழிப்
போக்கி லந்தப் புனப்பிணை யீன்றதால். (௧௮)

ஈன்று வீழ்ந்ததை நோக்கியி தெம்மினம்
போன்ற தன்றெனப் போயதப் பொற்பிணை
தோன்று பேந்திர வேடன் றெடுத்தெடுத்
தான்ற சாரற் குடிகலத் தண்மினன். (௧௯)

§ கான மார்வள்ளிக் கந்த மகழ்ந்தெடுத்
தான பள்ளங் கிடந்ததிவ் வாரணங்
கேனை வானவர் மங்கைய ரீன்றதோ
தேன ரூமலர்ச் செல்விகொ லோவென. (௨௦)

அயிர்த்த சிந்தைய னுங்கவ னுசையான்
மயிற்கு லங்கொ லெனவளர்த் தானிளங்
குயிற்கொ ழுங்குத லைக்கொரு கோலமா
னுயிர்த்த வள்ளியென் றேர்பெய ரீந்தனன். (௨௧)

---

§ கானமேவிக்கவலையகழ்ந்தெடுத்தென்பதும்பாடம்.

இன்ன தன்மைய வேலைப் புரிகுழ
லன்ன மென்னடை யானை யலங்கிலே
மின்னி ருங்கதிர் வேலவற் கீதலாற்
சொன்ன சாபந் துடைத்தனர் மூவரும். (௨௨)

வேறு.

எனவிவ ணிசழ்ந்த காதைப் பரிசெலா மெடுத்துக் காட்டி
நனைமலர்ப் படப்பை சூழ்ந்த நைமிசா ரணியத்தோங்கும்
புனைசடை மவுலி யோர்க்குப் புகன்றனன் சூதன் கேளா
வினையவர் மகிழ்ச்சி கூர வணிமுடி துளக்கி னரால். (௨௩)

மாயன்வரம்பெறுசருக்கத்தில்,

## சிவமுனிவர்முதலியோர்வரலாறு

### முற்றிற்று.

---

ஆகச் செய்யுள் - ௨௫௩.

கந்தபுராணச்சுருக்கமுட்படச்செய்யுள் - ௧௩0௨.

---

சூராதிகளொடுக்கச்சருக்கமும், அசமுகிசருக்கமும், மாயைசருக்கமும், சிவமுனிவர்முதலியோர் வரலாறும்கந்தபுரா
ணச் சுருக்கத்துக்கு இன்றியமையாதன
வாய்வேண்டி யிருத்தலின், அவை
உபதேசகாண்டத்தினின்றும்
எடுத்து ஒருங்குசே
ர்த்து அச்சிடப்
பட்ட
ன.

வேலுமயிலுந்துணை.

---

உ

சிவமயம்.

# புத்தகவிளம்பரம்.



| | | | |
|---|---|---|---|
| திருவாசகம் | 0 | 8 | 0 |
| விட்டுணுதல்மான்மியச் சுருக்கம் | 0 | 8 | 0 |
| நிகண்டு-கஉ-தொகுதியுள்ளது | 0 | 8 | 0 |
| தாயுமானவர்பாடல் | 0 | 8 | 0 |
| கட்டளைக்கொத்து | 0 | 6 | 0 |
| சோதிடபரவிட்டை | 0 | 6 | 0 |
| பரிபூரணானந்தபோதம் | 0 | 4 | 0 |
| திருக்குறள்மூலம் | 0 | 4 | 0 |
| சின்மயதீபிகை | 0 | 3 | 0 |
| அநுஷ்டானவிதி | 0 | 2 | 0 |
| தகராலயரகசியம் | 0 | 2 | 0 |
| விவேகசிந்தாமணி யுரை | 0 | 2 | 0 |
| சடாட்சரமாறல் கூ-யந்திரங்களுடன் | 0 | 2 | 0 |
| கைவல்லிய மூலம் | 0 | 2 | 0 |
| வேதாந்தசூடாமணிமூலம் | 0 | 2 | 0 |
| சிவானந்தபோதம் | 0 | 2 | 0 |
| சர்வார்த்தசிந்தாமணி | 0 | 2 | 0 |
| சுகர் கைவல்லியம் | 0 | 2 | 0 |
| பரமானந்ததீபம் | 0 | 1 | 0 |
| அஷ்டோத்தரம் | 0 | 1 | 0 |
| கந்தர் ஒலியலந்தாதி | 0 | 1 | 0 |
| சோணசைலமாலை | 0 | 1 | 0 |
| திருமுருகாற்றுப்படை | 0 | 0 | 9 |
| கந்தர்சஷ்டிகவசம் | 0 | 0 | 6 |
| புசண்டர்உபநிடதம் (கூஉ) | 0 | 0 | 6 |
| சுப்பிரமணியபண்டிதர் ஜீவரக்ஷாமிர்தம் | 4 | 0 | 0 |
| பாலகாண்டமூலமும் உரையும் | 3 | 8 | 0 |
| பெரியபுராணம் (செய்யுள்) | 3 | 8 | 0 |
| மூவர்தேவாரம் | 3 | 8 | 0 |
| திருவிளையாடற்புராணம் (செய்யுள்) | 2 | 0 | 0 |
| பொன்னம்பலசுவாமிகள் கைவல்லியதத்துவார்த்ததீப உரை | 2 | 0 | 0 |
| அமலராமாயணமென்னு ஞானவாசிட்டவசனம் | 1 | 8 | 0 |
| வள்ளலார்சாத்திரம் | 1 | 8 | 0 |
| திருமூலர் திருமந்திரம் - கூத | 1 | 8 | 0 |
| திருவாதவூரார்புராணம்உரை(யாழ்ப்பாணபதிப்பு) | 1 | 8 | 0 |
| நிகண்டு-கஉ-தொகுதியுமோரே (கட்டடம்) | 1 | 4 | 0 |
| ஞானப்பிரகாசதீபிகை- உ (அண்டகோளபடம்) | 1 | 2 | 0 |

இவ்விடத்தில் சகலவிதமான புத்தகங்களும் விலைசாசமாக விற்கப்படும்.

கோ - லோகநாதமுதலியார்.

உக - செ. வைத்தியநாதமுதலியார் வீதி, சென்னை.